பரம்பரை யழகின் கருவூலமாய், கற்பகப் பசும் பொற் கனியே போல் சிறப்பங் கடைந்த சோப்... தெள் ளூறும் சந்தனச் சத்தும், வளமார்ந்த வாதுமை எண்ணெயும் இணங்கி மணந்து... அழியாவரம் பெற்ற அழகுநிதியை அழைத்துவரும் மகாராணி.




# மகாராணி சந்தன சோப்

**அழகுசாதன சோப்புக்களில் அரசியர்க்கரசி – வாதுமை எண்ணெய் கலந்துள்ள சோப்**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு.

MHR. 6-X52 TM

சுபகிருது, மார்கழி 1உ

கல்கி

டிசம்பர் 16உ 1962



# பொருளடக்கம்

# தீயினுல் சுட்ட வடு மாறுது




புகைபிடிப்போருக்கு அழகு, பற்ற வைத்த சிகரெட்டை மேஜை போன்ற சாமான்கள் மீதோ, அலங்காரப் பொருள்களை ஒட்டியோ வைக்காமலிருத்தலே. சாம்பலைப் போக்குவதற்கு ஆஷ் ட்ரே இருக்க, வீணே மேஜை மீது தீய்ந்த வடுக்களையும், பளபளப்பான தளங்கள் மீது பழுப்பு நிறச் சுவடுகளையும் விளைவிப்பானேன்?

உயரிய பண்போடு உபயோகிப்பதற்கும் உதவுவதற்கும் உகந்தது

**பனமா**

Panama

20

CIGARETTES

இழுக்க இழுக்க இன்பம்– இறுதிவரை

விசேஷக் கலவை செய்வோர்:
கோல்டன் டொபாக்கோ கம்., ப்ரைவேட் லிட்.
பம்பாய்-56.

பாரதத்தில் இத்தகைய தேசிய ஸ்தாபனங்களில் மிகப் பெரியது.

GT. 440 TAM — Greens' Advtg.



மலர் 22 | தமிழ்த்திரு நாடுதன்னைப் — பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார் | இதழ் 20

# பிரதமர் உணர வேண்டும்

## ராஜாஜி

பிரதமருடன் நான் ஒத்துழைக்க வேண்டும் என்று பல நண்பர்கள் திரும்பத் திரும்பச் சொல்லி வருகிறார்கள். அவர்களுடைய அன்பையும் தேசபக்தியையும் கண்டு மகிழ்ச்சி அடைகிறேன். பிரதமருடன் நான் ஒத்துழைக்க வேண்டும் என்று சொல்வதால் நான் இப்போது செய்து வருவது அவருடைய பணிக்குத் தடங்கல் என்பது அவர்களுடைய உட்கருத்து. என் சக்தியில் இயன்ற அளவுக்குப் பிரதமருடன் நான் ஒத்துழைத்தே வருகிறேன். சத்தியம் எது என்று மனச்சாட்சிப்படி பார்த்து, அதற்கேற்பப் பகுத்தறிவுடன் நேரு அவர்களுக்கு என் ஒத்துழைப்பை அளித்தே வருகிறேன். சர்க்காருக்கு வெளியே உள்ள ஒருவன்—சென்ற சில ஆண்டுகளாகச் சர்க்கார் செய்து வந்த அநேக காரியங்களைத் தவறு என்று உணர்ந்த ஒருவன்—இன்றையச் சூழ்நிலையில் இதற்கு மேலாக எப்படி உதவியோ ஒத்துழைப்போ தர முடியும்? போட்டி போட்டுக் கொண்டு பிரதமருக்குப் புகழ்மாலை பாடுவதோ, நாட்டு நலனை விடப் பிரதமரின் தனிப்பட்ட அந்தஸ்தைப் பற்றியே அதிகம் கவலை காட்டுவதோ ஒத்துழைப்பாகாது; தேச பக்தியும் ஆகாது. இது என் உறுதி யான கொள்கை. இன்றுள்ள தர்மசங்கடமான நிலையில் மனச்சாட்சியே என் வழிகாட்டி.

* * *

பிரதம மந்திரி அவர்கள் கௌஹாட்டியில் பேசும்போது பல விஷயங்களைப் பற்றித் தம் மனத்தில் தோன்றிய சிந்தனைகளை வாய்விட்டுச் சொல்லியிருக்கிறார். ஏரான மான விஷயங்களைப் பற்றிப் பேசுவதைவிட முக்கியமான அம்சங்களை நிதானமாகவும், ஆழ்ந்தும் ஓர்ந்து பார்ப்பதே சிலாக்கியம்.

ஐ. நா. சபையில் சீனாவைச் சேர்த்துக் கொள்ள வேண்டும் என்பதை இனி இந்தியா வற்புறுத்தாது என்று அந்தப் பிரசங்கத்தில் அவர் கூறியதாகத் தெரிகிறது. என்றாலும் ஐ. நா. பொதுச் சபை வேறு, பந்தோபஸ்துக் குழு வேறு என்று ஏதேதோ பாகுபாடு செய்திருக்கிறார் ஸ்ரீ நேரு அவர்கள். பொதுச் சபையானாலும், பந்தோபஸ்துக் குழுவானாலும் இரண்டுமே உலக சமாதானத்தை ஸ்தாபிக்கும் நிர்வாக இயந்திரங்கள் தான். உலக சமாதானத்துக்கு எதிரி என்று ஒன்றில் ஜாதி ப்ரஷ்டமானவரை இன்னொன்றில் அநுமதிப்பது பொருளற்ற காரியம்.

"சீனாவைத் தவிர மீதியுள்ள எல்லா நாடுகளும் ஒரு கோஷ்டியாகத் திரளும் போது நாம் யாருடனே ராணுவக்கூட்டு சேருவதற்கு இடமேது?" என்ற கேள்வியுடன் கௌஹாட்டியில் பிரதமர் பேச்சை நிறுத்தியதாகச் செய்தித் தாள்களில் காண்கிறது. இந்தக் கேள்வி மற்றவர்களுக்குப் புரிகிறதோ என்னவோ, எனக்குப் புரியவில்லை. சீனுவுக்கு எதிராக அமெரிக்காவும் ருஷியாவும் ஒன்று சேராதா என்று நான்கூட மனக் கோட்டை கட்டிப் பார்த்து மகிழ்கிறேன். ஆனால் மனக்கோட்டை வாஸ்தவம் ஆகாது. ருஷியா உள்பட உலகமெல்லாம் சீனுவுக்கு எதிராகத் திரளும் என்று எண்ணிப் பார்க்க இன்றைய அரசியல் இடமளிக்காது. இவ்விதக் கற்பனைகளை அந்நியக் கொள்கைக்கு வழிகாட்டியாகக் கொள்வது புத்திசாலித்தனமல்ல. சீனுவின் யுத்தவெறியைப் பல நாடுகள் வெறுப்பது உண்மை. இதற்காக அவை ஒரு ராணுவ கோஷ்டியாக ஒன்று சேரும் என்று முடிவுசெய்ய இடம் இல்லை.

அமெரிக்காவும், பிரிட்டனும் நமக்குப் பெருத்த சகாயம் செய்கின்றன. அவர்க ளோடு நாம் கூட்டு சேர்வதற்கு இந்தக் காரணமே போதும். சீனு விஷயத்தில் நாம்

இனியும் தடஸ்தமாக நடுநிலையில் நிற்கும் கொள்கையை ஆதரிப்பதற்கில்லை என்று பிரதமர் கூறியிருக்கிறார். அதற்காக அவருக்கு நன்றி தெரிவிக்க வேண்டும். இந்தியாவைச் சீனா மும்முரமாக எதிர்ப்பதால் நாமும் வலுவாய்ந்த எதிர்ப்பை அமைக்க வேண்டும். நம்மைவிடப் பல மடங்கு சேனா பலம் கொண்ட நாட்டை எதிர்க்க வேண்டுமானால் அதற்கு அநுகூலமாகப் பல நடவடிக்கைகளை மேற்கொண்டே ஆகவேண்டும். நம்மோடு இசைந்த கருத்துள்ளவர்களுடைய சிநேகமும் சகாயமும் இல்லாமல் சீனாவுக்குச் சமமாக ராணுவ பலத்தைப் பெருக்குவது அசாத்தியம். சீனாவுடனும் நாம் ஒரு காலத்தில் நட்புடன் தான் இருந்தோம். அது இன்று அழிந்து போயிற்று. நாம் சிநேக தர்மத்துக்கு விரோதமாக எதுவும் செய்யாதிருக்கும் போது சீனாவாகவே நட்பைக் குலைத்து விட்டது. மீண்டும் சீனாவை மனமாற்றம் கொள்ளச் செய்வது இயலாத காரியம். சீனாவை நாம் விரோதியாகக் கருதி எதிர்த்தேதான் தீரவேண்டும். இதை நேரு அவர்களும் தெளிவாகப் புரிந்து கொண்டிருக்கிறார். ஆனால் மேல்நாடுகளுடன் எப்படி நட்பை உறுதிப் படுத்திக் கொள்வது என்பதற்குத்தான் அவர் சரியான வழி காணவில்லை; கூச்சப் படுகிறார்.

பணத்தைக் கொடுத்தோ, பொருளாகத் திருப்பியோ மேல்நாடுகளிலிருந்து ஆயுதத்தைப் பெறுவது சாத்தியமா? சாத்தியமானாலுங் கூட நட்பு நிலை பெறாது. இதை வியாபாரப் பரிவர்த்தனையாக நினைக்காமல் இதயபூர்வமான அன்புப் பரிவர்த்தனையாகக் கருதினால்தான் நமக்கும் மேல் நாடுகளுக்கும் பரஸ்பரமான நட்பு உறுதிப்படும். சீனாவை எதிர்க்கும் பலம் பெறுவோம். இவ்வாறு நட்பினால் ஒன்றுவதைத் தான் 'கூட்டுச் சேருவது' (Alignment) என்று சாமான்ய மக்களும் எண்ணுகிறார்கள். இவ்விஷயத்தில் பிரதமரின் சித்தாந்தம் எப்படியானாலும், மேல் நாட்டு வல்லரசுகள் நம்முடைய அன்பையும் நல்லெண்ணத்தையும் பெறுவதில் ஆர்வமாக இருக்கிறார்கள் என்பதே பொதுமக்கள் கருத்து. அன்பு என்பது இன்று நாம் அவசியம் ஏற்றுமதி செய்ய வேண்டிய பண்டமாகும். மேல் நாடுகளின் நட்பு உண்மையாகவும், உபயோகமாகவும், உயிர்த் துடிப்புடனும் இருக்க வேண்டுமானால் நாம் சந்தேகாஸ்பதமான மனப்பான்மையை விட்டேயாக வேண்டும். நாம் அன்பையும் நம்பிக்கையையும் பிரதியாகத் தராவிட்டாலும் கூட மேல் நாடுகள் ஒருதலைப்பட்சமாக உதவியை நீடித்துக் கொண்டே வருமா? இதை அமெரிக்காவோ, பிரிட்டனோ சொல்லும் வரையில் காத்திருக்கலாமா? சொல்லாமலே நம்முடைய அரசாங்கம் புரிந்து கொள்ள வேண்டும். நடுநிலைமை 'கிளப்'பில் உன்னதமான ஸ்தானம் வகித்த இந்தியா அந்தப் பதவியை இழக்கலாகுமா என்று நேருஜி தயங்கலாம். சீனாவின் ஆக்கிரமிப்பினால் நமது நடுநிலைமைத் 'தலைமை'யை ராஜிநாமா செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டது. ஆக்கிரமிப்பை வாய்ப் பேச்சால் எதிர்க்க முடியாது. ஆபத்தை உணர்ந்து சுறுசுறுப்புடன் நடவடிக்கை எடுக்காவிட்டால் விபரீதத்தைத் தேடிக் கொள்வோம்.

''சீனா விஷயத்தில் கூட்டுச் சேராத கொள்கைக்கு இடமில்லை'' என்று அமெரிக்க ரேடியோப் பேட்டியில் பிரதமர் கூறியிருப்பதைக் கேட்டு அழுவதா சிரிப்பதா என்று புரியவில்லை. இந்த 'மகத்தான' உண்மையைத் தெரிந்து கொள்ள இவ்வளவு பேர் மாண்டிருக்க வேண்டுமா? பனிக் கொடுமையில் அங்கங்கள் கருகிப் போயும் ரணகாயத்தாலும் கஷ்டப்பட்டிருக்க வேண்டுமா? இந்திய பூமியின் இவ்வளவு பரப்பைப் பறிகொடுத்திருக்க வேண்டுமா?

இப்போதும் ருஷியாவின் விஷயத்தில் நேரு அவர்கள் 'கூட்டுச் சேராமை'யைத் தளர்த்தவில்லை. கொள்கையில் சீனாவுடன் ரத்தபாசம் கொண்ட நாடு ருஷியா. இந்த ருஷியாவுக்காகத்தான் இப்போதும் அமெரிக்கா பிரிட்டன் முதலிய வல்லரசுகளை இந்தியா சற்றுத் தொலைவிலேயே வைத்திருக்கிறது. கூட்டுச் சேராமை என்ற வறட்டுக் கொள்கையைப் பிடிவாதமாகப் பின்பற்றுவது துயரகரமாகும்; இயற்கைக்கு முரணாகும்; தேச மக்களின் உணர்ச்சிக்கு விரோதமாகும். உயிர் போன ஒரு சவக் கொள்கையிடம் பிரதமருக்குள்ள பாசத்துக்கும், தேச மக்களின் இன்றைய விருப்பத்துக்கும் ஆர்வத்துக்கும் இடையே ஒரு பிளவு விரிந்து கொண்டு வருகிறது. இதைப் பிரதமர் உணர வேண்டும். மந்திரி சபையிலும் பார்லிமெண்டிலும் உள்ள அவருடைய சகாக்கள் இதை அவருக்கு உணர்த்த வேண்டும். எவ்வளவுக் கெவ்வளவு விரைவில் இது நடைபெறுகிறதோ, அவ்வளவுக்கவ்வளவு நாட்டுக்கு நல்லதாகும். 'பார்க்கலாம், தானே சரிப்பட்டுப் போகும்' என்று உதாசீனமாக இருத்தல் அபாயம்.

நீ செய்வது தவறானாலும் நான் உன் பக்கம் தான் இருப்பேன்!

கும்பகர்ணன் ராவணனுக்கு இப்படித்தான் சொன்னான்

வண்டி ஓடுமா ?



# என்ன சேதி?

## நேருஜிக்குத் தெரியாதது!

பாரதப் பிரதமர் நேருஜி இன்னும் ஜனநாயகப் பண்பு கொண்ட தலைவராகத்தான் இருக்கிறார் என்ற உண்மையை உலகறியச் செய்த சுதந்திரக் கட்சித் தலைவரான ஆச்சாரிய ரங்காவுக்கு ஜனநாயகவாதிகள் அனைவரும் நன்றி செலுத்தக் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

''பிரதமரின் நிர்வாகத்தையும் நடைமுறைக் கொள்கைகளையும் குற்றம் காட்டி விமரிசனம் செய்பவர்களைத் தேசத் துரோகிகளாகக் கருத வேண்டும்'' என்று காங்கிரஸ் ஒரு சுற்றறிக்கை வெளியிட்டிருப்பதாகச் செய்தி வந்தது. காங்கிரஸின் எதேச்சாதிகாரப் போக்கின் எல்லை இது என்றே கருத வேண்டும். இது சம்பந்தமாக நேருஜிக்கு ஆச்சாரிய ரங்கா எழுதிக் கேட்டதில், பிரதமர் தமக்கு இத்தகைய சுற்றறிக்கை வெளியிடப்பட்டதே தெரியாது என்றும் அது மிகவும் அடாத செயல் என்றும் வன்மையாகக் கண்டித்திருக்கிறார். பிரதமர் நேருஜி எத்தகைய கீழ்த்தரமான கட்சி அங்கத்தினர்களிடையே சிறைப்பட்டு வாழ்கிறார் என்பது இதிலிருந்து தெரிகிறது.

## முரணில்லை

பிரதமர் நேரு, 'சுதந்திரக் கட்சி அங்கத்தினர்கள் பாராளு மன்றத்தில் அரசாங்கத்தை ஆதரிக்கின்றனர்; ஆனால் வெளியில் அந்தக் கட்சி அரசாங்கத்தைக் கண்டிக்கிறது' என்று கூறி யிருக்கிறார். சுதந்திரக் கட்சியின் பாராளுமன்ற அங்கத்தினர்கள், தேசப் பாதுகாப்புக்காகச் சர்க்கார் மேற்கொள்ளும் நடவடிக்கைக்குப் பார்லிமெண்டில் அனுமதி கேட்கும்போது ஆதரவு தரக் கடமைப்பட்டவர்கள்.

அதே சமயத்தில் சுதந்திரக் கட்சியினர் ஆளும் கட்சியின் குழப்பமான கொள்கைகளைக் கண்டித்து மக்களுக்கு எச்சரிக்கை செய்யவும் கடமைப்பட்டிருக்கிறார்கள்.

பாராளுமன்றத்தில், கொள்கை சம்பந்தமாகப் பேச்சு வரும்போது, சுதந்திரக் கட்சியினர் வெளியில் கூறும் கருத்துக்களையே உள்ளேயும் கூறி வருகிறார்கள்.

## ஜெயப்பிரகாஷின் யோசனை

ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் நாராயணன் சமீபத்தில் தில்லியில் ஒரு கருத்தினை வெளியிட்டார். பாரதப் பிரதமர் நேருஜி, தமக்கு 'ஆமாம் சாமி' போடும் கும்பலைப் பக்கத்தில் வைத்துக் கொண்டு நிர்வாகம் நடத்துவது போதாது; அவருடைய கருத்துக்களையும் நிர்வாகத்தையும் அலசிப் பார்த்தும் எதிர்த்தும் யோசனை சொல்பவர்களையும் தமது மந்திரி சபையில் வைத்துக் கொள்ள வேண்டும்; முக்கியமாக ராஜாஜியை மந்திரி சபையில் சேர்த்துக் கொண்டு அவருடைய ஆலோசனைகளையும் கேட்டு நடக்க வேண்டும் என்று ஸ்ரீ ஜெயப்பிரகாஷ் கூறினார்.

ஆனால் ராஜாஜி, மந்திரி சபையிலிருந்து செய்யும் சேவையை விட மகத்தான தொண்டு வெளியிலிருந்து செய்து வருகிறார். பல கோடி மக்களைச் சிந்திக்க வைத்துப் பாரத நாட்டில் ஜனநாயகத்தைக் காப்பாற்றி வருகிறார்.

பிரதமர் நேருஜி தம்மைப் புகழ்கிறவரின் சிறைக்குள் அகப்பட்ட கைதி. அதனின்றும் அவரை விடுதலை செய்யக் கூடியது பொதுஜன அபிப்பிராயம் ஒன்றுதான். அந்தப் பொதுஜன அபிப்பிராயத்தை உருவாக்கும் இன்றைய ஒரே தலைவர் ராஜாஜிதான்.

---

<u>அட்டைப்படம்</u>

மணிவாசகரின் மணிவாசகமான திருவெம்பாவை காட்டும் வழியில் நோன்பு நோற்கும் இந்த நாரீமணிகள் மார்கழி மாதம் பிறந்து விட்டதற்குத்தான் கட்டியம் கூறுகிறார்கள். கண்ணபெருமானின் சாந்நித்தியம் துலக்கமாகப் பிரகாசிக்கும் தனுர் மாதத்தில்— விஷ்ணுவுக்கென்றேயுள்ள தனி விழாவாகிய வைகுண்ட ஏகாதசி நேரும் புனித மாதத்தில் — ஆண்டாள் அருளிச் செய்த திருப்பாவையைப் பாடி அவனைத் தொழுவோம்; சிவமாம் செம்பொருளுக்குரிய திரு ஆதிரைத் திருநாளும் நிகழும் இந்த மாதத்தில் திருவெம்பாவையைப் பாடித் தில்லைக் கூத்தனைப் பணிவோம். இரு நோன்புக்கும் பொதுவாகிய பாவையாம் பராசக்தியின் பாதத் திறம் பாடி ஆடுவோம்.

# வீரம் விளையும் பூமி!



இந்தியாவின் வட கிழக்கு எல்லைப் பிரதேச முன்னணி ஸ்தலங்களுக்குப் பிரதம மந்திரி நேரு விஜயம் செய்தது முதல் நேபா பிரதேசத்தில் உள்ள இந்தியப் படை வீரர்களுக்கு ஒரு புதிய உற்சாகம் பிறந்திருக்கிறது. மக்மகான் கோட்டுக்கு அப்பால் சீனப்படை தாமாகவே வாபஸாகாவிட்டால், அவர்களை வாபஸடையச் செய்வதென்ற உறுதி மேலும் வலுவடைந்திருக்கிறது. பொதுமக்களும் அதிக ஊக்கம் கொண்டிருக்கிறார்கள்.

திடீரென்று இந்தியா மீது பெருந் தாக்குதலை ஆரம்பித்த சீனர்கள் தாமாகவே தம் தாக்குதல் நடவடிக்கைகளை நிறுத்திக்கொள்வதாக நவம்பர் 21ந் தேதி அறிவித்தார்கள். அத்துடன் போர் முனைகளிலிருந்து தம் படைகளை டிசம்பர் 1ந் தேதி முதல் வாபஸ் பெறத் தொடங்குவதாயும் கூறியிருந்தனர். அதன்படி சீனத் தாக்குதல்கள் நின்றுவிட்டன. அடுத்த படியாகச் சீனப் படைகள் வாபஸாகின்றனவா என்பதை இந்தியத் தரப்பினர் உன்னிப்பாகக் கவனித்துக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலைமையினால், இப்போது 'நேபா'வின் எந்தப் பகுதியிலும் போர் நடக்கவில்லை. ஆனால் கெடுபிடி நிலைமை மட்டும் நீடித்துக் கொண்டிருக்கிறது. செப்டம்பர் 8ந் தேதிக்கு முன் இருந்த இடங்கள் வரை சீனப் படைகள் வாபஸாகா விட்டால் இந்தக் கெடுபிடி நிலைமை முற்றி, மீண்டும் குமுறி, தாக்குதல் ஆரம்பமாகிவிடக் கூடும்.

சீனர்களின் நயவஞ்சகத் தாக்குதல்களைப் பற்றி யுத்த முன்னணிகளிலிருந்து திரும்பி வரும் இந்திய ஜவான்கள் கதைகதையாகச் சொல்லுகிறார்கள். 'மன்பா' மலை ஜாதியினர்களைப் போல், புத்த மதத்தினர் உடைகளில் வேஷதாரிகளாக வந்து சீனத் துருப்புகள் சேலா பள்ளத்தாக்குக்கு வடக்கே திடீரென்று தாக்கின. இக் கபட எண்ணத்தை எதிர்பாராத இந்தியப் படைகளுக்கு மிகச் சமீபத்தில் வந்து, துப்பாக்கிகளைத் தம் உடைகளுக்குள்ளிருந்து வெளியில் எடுத்தபோது தான், இந்தியர்களுக்கு அவர்கள் பகைவர்கள் எனத் தெரிந்தது. சேலாவுக்குத் தெற்கே, 'டெராங் ஜாங்' அருகில், இந்தியர்களைப் போல் காக்கி உடைகளை அணிந்த சீனர்கள் கோஷ்டி கோஷ்டியாக வந்தார்கள். மற்றும் தமிழ் உள்படப் பல இந்திய மொழிகளில் ராணுவ ஆக்ஞைகளை எழுப்பிப் பல விதமான குழப்பங்களை உண்டாக்கவும் முயன்றார்கள். மலைகளில் பாதைகளைக் காட்டுவதற்கும், இந்தியர்களின் நடமாட்டங்களைத் தெரிவிப்பதற்கும் திபேத்திய நாய்களைப் பழக்கி வைத்து உபயோகித்தார்கள். இந்த மாதிரி பலவிதமான தந்திரங்களைச் சீனப் படைகள் கையாண்டிருக்கின்றன. இவ்வளவையும் திட்டமிட்டுச் செய்து நீண்ட கால முன்னேற்பாட்டுடன் இந்தியாமீது படையெடுத்த சீனர்கள் இந்தியத் துருப்புகள்தான் வலியத் தாக்குதலை ஆரம்பித்ததாகவும், தற்காப்புக்காகவே சீனப் படைகள் எதிர்த்துத் தாக்கியதாகவும் உலக நாடுகளிடம் சொல்லி ஏமாற்றப் பார்ப்பதை நினைத்து நினைத்து இந்தியர்கள் மனம் கொதிக்கிறார்கள்.

இந்தப் பிரசார தந்திரங்கள் ஒருபுறம் இருக்க, சீனப் படையினர் புரிந்த கொடுமைகளும் அக்கிரமங்களும் ஏராளமானவை என்று போர் முனைகளிலிருந்து திரும்பி வந்துள்ள இந்திய ஜவான்கள் கூறுகின்றனர். இந்திய கிராமவாசிகளைப் பயமுறுத்தியும் கொடுமைப்படுத்தியும் காட்டுப் பாதைகளைப் பற்றிச் சீனர்கள் தெரிந்துகொண்டார்கள் என்றும் இந்தத் தகவலைக் கொண்டுதான் சேலா, பொம்டிலா ஆகிய இடங்களில் இருந்த காவல் நிலையங்களைத் தாக்கினார்கள் என்றும் திருவனந்தபுரத்தைச் சேர்ந்த முப்பத்தொன்பது வயதினரான மேஜர் நாயர் கூறினார். இவர் இரண்டாவது யுத்த காலத்தில் மத்திய கிழக்குப் பகுதியில் பணியாற்றியவர். நவம்பர் 15, 16 தேதிகளில் சீனப் பீடாரிகளின் இரு தாக்குதல்களை இவரது படைகள் வெற்றிகரமாகச் சமாளித்து, ஏராளமான சீனர்களைக் கொன்று தள்ளின. இவருடைய படை நவம்பர் 18ந் தேதி சீனர்களால் பிரதானப் படையிலிருந்து பிரிக்கப்பட்டது. பிறகு காட்டுப் பாதைகளில் சில நாட்கள் மிகவும் சிரமப்பட்டு இந்தியக் காவல் நிலையத்தை நவம்பர் 24ந் தேதி இவர்கள் அடைந்தனர். இந்த ஒரு வார காலமும் புல், இலை ஆகியவற்றையே இவர்கள் தம் உணவாக அருந்தினார்கள். ஒரே ஒரு சமயத்தில் மட்டும் இந்தியத் துருப்புகளைக் கண்டு, முப்பது சீனர்கள் தாம் சமைத்துக் கொண்டிருந்த உணவை அப்படியே போட்டுவிட்டுப் பயந்து ஓடிவிடவே, இந்திய ஜவான்களுக்குச் சீனர்களால் தயாரிக்கப்பட்ட நல்ல உணவு கிடைத்தது!

ஸ்ரீ நாயர் தமது படைகள் இப்படிப் பட்டினியும் பசியுமாகப் பிரயாணம் செய்ததற்குக் காரணம் என்னவென்பதை விளக்கினார். உணவுப் பொருள்களைச் சுமந்து செல்வதா அல்லது ஆயுதங்களைச் சுமந்து செல்வதா என்ற நெருக்கடிக் கட்டம் ஏற்பட்ட போது, உணவுப் பண்டங்களை விட ஆயுதங்களே முக்கியம் என்ற முடிவுக்கு வந்து













விட்டனர் அந்த வீரர்கள். இந்த முடிவு எவ்வளவு புத்திசாலித்தனமானது என்பது பிறகு வழி நெடுகப் பல கட்டங்களில் ருசுவாயிற்று. ஓரிடத்தில் 13,000 அடி உயரத்தில் சீனர்களின் பெரும் படையினர் மிகவும் சக்திவாய்ந்த ஆயுதங்களின் உதவியுடன் இவர்களைத் தாக்கினர். அப்போது அவர்களுடன் உக்கிரமமாகப் போரிட வேண்டி ஏற்பட்டது. அப்போரில் பதினாறு இந்திய வீரர்கள் வீர சுவர்க்கம் அடைந்தனரெனினும் பெரும் பகுதியினர் சீனரின் தாக்குதல்களைச் சமாளித்துக் கொண்டு தப்பினர். பிறகு பொம்டிலாவை நாயகின் படை நெருங்கியபோது பொம்டிலா ஏற்கெனவே எதிரி கையில் சிக்கி விட்டதாகத் தெரிந்தது. கிராமவாசிகள் இவர்களை எச்சரித்து, வேறு ஒரு காட்டுப் பாதையில் வழியனுப்பினார்கள். இப்படிப் பல ஆபத்துக்களையும், மலைகளையும், ஆறுகளையும் கடந்து வந்த பிறகு டிசம்பர் 3-ந் தேதியன்று தேஜ்பூர் முகாமுக்கு அழைத்து வரப்பட்டிருக்கிறார்கள். இவர்கள் எல்லோரும் இப்போது சீனர்களை ஒழித்துக் கட்ட மீண்டும் ஆயத்தமாகிக் கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய உற்சாகத்தை நேரில் கண்டும் கேட்டும் பிரதம மந்திரி நேரு மிகவும் பெருமிதம் கொண்டார்.

சீனரை எதிர்த்துப் போராடியதில் காயமடைந்தவர்களும் நோயாளிகளுமான அறுபத்திநான்கு இந்திய வீரர்கள் பொம்டிலாவிலிருந்து தேஜ்பூருக்குக் கொண்டு வரப்பட்டிருக்கிறார்கள். பொம்டிலாவில் சீனர்களிடமிருந்து திரும்பப் பெற்ற இவ்வீரர்களை இந்தியச் செஞ்சிலுவைச் சங்கத்தினர் அழைத்து வந்தனர். சீனர்கள் வசம் இருக்கும்போது மரணமடைந்த ஒரு சிப்பாயின் பிரேதத்தையும் அவர்கள் கொண்டு வந்திருக்கிறார்கள். ராணுவ ஆஸ்பத்திரியில் இவர்களை நேருஜி கண்டு பேசினார்.

சீனர்களின் போர்நிறுத்தத்துக்கான காரணங்களைப் பற்றிப் பல விதமாகவும் பலர் பேசி வந்தபோதிலும் அனைவரும் ஒருமுகமாக உறுதியுடன் நம்பவேண்டிய விஷயம் ஒன்று உண்டு. அது சீனர்களால் ஏற்படும் தொந்தரவு நேற்றுத் தோன்றி இன்று முடிந்து போகிற சமாசாரம் அல்ல. சீன அபாயம் ஒரு நிரந்தர அபாயம் என்பதுதான். இந்த உறுதியான எண்ணத்துடன் அனைவரும் செயல்படுவோம்.

# இந்த விளக்கு உங்கள் பணத்தை பாழாக்குகிறது



மாற்றி

**Osram**

அதிசய விளக்கை பொருத்துங்கள்

அது பிரகாசமான
ஒளியை தருகிறது.



இப்பொழுது 80, 125 வாட்டுகளில் நிறம் சரிப்படுத்தின மெர்குரி வேப்பர் விளக்குகளும் அவசியமான, ஆனால் இப்பொழுது ஏராளமாக கொடுக்க முடியாத OSRAM ப்ளோரஸெண்ட் டியூபுகளும், இந்தியாவில் தயாரிக்கப் படுகிறது.

ஒரு G.E.C. தயாரிப்பு

தி ஜெனரல் எலெக்ட்ரிக் கம்பெனி ஆப் இந்தியா பிரைவேட் லிட்., GEC/a/253

# மாதர் மன்றம்



மங்கையர்க்கரசி அம்மாள், சுபத்ரா, கமலா மூவரும் சேர்ந்தாற் போல் மங்களம்மாள் வீட்டுக்குள் நுழைந்தார்கள்.

"என்ன மங்கையர்க்கரசி அம்மா! என்னவோ மாதிரி காணப்படுகிறீர்கள்?" என்றாள் மங்களம்மாள்.

"பின்னே என்ன! இந்த உலகம் ஒரே ஆண்கள் உலகமாகத்தான் இருக்கிறது!" என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

"இது என்ன! பெண்கள் உரிமைக்காகவும் சமத்துவத்துக்காகவும் போராடிய கவியரசர் பாரதியார் விழாவுக்குப் போய் விட்டு வந்து இப்படிப் பேசுகிறீர்கள்!" என்றாள் மங்களம்மாள்.

சுபத்ரா குறுக்கே பாய்ந்தாள் இப்போது. "அது மட்டுமா? இன்று ஆண்கள் பெண்களுக்கு எவ்வளவு இடம் கொடுத்திருக்கிறார்கள் தெரியுமா? நெல்லூர் பக்கத்தில் ஒரு பஞ்சாயத்து சபை முழுவதும் பெண் அங்கத்தினர்களாலேயே நடத்தப்படுகிறதாம்!" என்றாள்.

"அது ஏன்? பெங்களூரில் ஒரு கனராப் பாங்கின் கிளைக் காரியாலயம் முழுவதும் பெண்களாலேயே நிர்வகிக்கப் படுகிறது... மானேஜரிலிருந்து பியூன் வரையில் அத்தனை உத்தியோகங்களும் பெண்களே நிர்வகிக்கிறார்களாம்!"

"இதனால்தான் எங்க வீட்டுப் பிள்ளை ராமுவுக்கு வேலை கிடைக்க மாட்டேன்கிறது. 'அவர்' சொல்றது வாஸ்தவமாகத்தான் இருக்கும் போலிருக்கிறது!" என்றாள் சற்றுக் கட்டுப்பெட்டியான அலமேலு மாமி.

"'அவர்' என்ன மாமி சொல்றார்?" என்று கேட்டாள் சுபத்ரா.

"என்ன சொல்வார்? 'புருஷாள் பண்ற வேலைக்கெல்லாம் பொம்மனாட்டிகள் வர ஆரம்பிச்சதிலிருந்து, புருஷாளுக்கு வேலை கிடைக்கிறது கஷ்டமாப் போச்சு!' என்பார். இதைத் தவிர வேறே என்ன சொல்லுவார்?" என்றாள் மங்கையர்க்கரசியம்மாள்.

மங்களம்மாள், "இதெல்லாம் தப்பு; சிலர்தான் சில வேலை செய்யலாம் என்று வைத்துக் கொள்கிற காலம் மலையேறிப் போச்சு. சென்ற யுத்தத்தின்போது ருஷ்யாவில் ஏராளமான ஆண்கள் உயிரிழந்துவிட்டதனால் உடல் உழைத்துச் செய்ய வேண்டிய வேலைகளைக் கூட ருஷ்ய நாட்டுப் பெண்களே செய்யவேண்டியதாகி விட்டது." என்றாள்.

"ருஷ்ய நாட்டுப் பெண்கள் வேலை செய்தால் மாமியார்கள் என்ன செய்தார்களாம்?" என்று கேலிக் குண்டைத் தூக்கிப் போட்டாள் சுபத்ரா.

"வேடிக்கை இருக்கட்டும். ருஷ்யாவில் கார் ஓட்டுவது, ரயில் ஓட்டுவது ஆகியவை எல்லாம் பெண்களே செய்கிறார்களாம். பெண்கள் துணிவுடன் இவைகளைச் செய்ய வந்ததனால் அங்கு பிரச்னை இல்லாமல் போய் விட்டது!" என்றாள்.

"இப்படி உலகம் முழுவதும் பெண்கள் அதிகமாகி வரும்போது நம் நாட்டில் மட்டும் பெண்கள் அபிப்பிராயத்தைச் செவியில் வாங்கிக் கொள்ளாமல் காரியங்கள் நடப்பதைப் பார்க்கும்போது ரொம்பக் கோபம்தான் வருகிறது. அதுவும் நம் நாட்டுக் கிராமப் புறத்து ஏழைப் பெண் மக்களின் அபிப்பிராயத்தை மதிக்காமல் காரியம் செய்வது எனக் [illegible]ட்டோடு பிடிக்க வில்லை" என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

"எதைக் குறித்து—எதை மனத்தில் வைத்துக் கொண்டு இப்படிப் பேசுகிறீர்கள் மங்கையர்க்கரசியம்மா!" என்று கேட்டாள் மங்களம்மாள். சுபத்ராவுக்கும் கமலாவுக்கும் கூடத்தான் மங்கையர்க்கரசியம்மாளின் கருத்துப் புரிய வில்லை.

"எல்லாம் இந்த மதுவிலக்கை ரத்து செய்வது பற்றித்தான் குறிப்பிடுகிறேன்!" என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

"ஓ! அதைச் சொல்கிறீர்களா? அதில் பெண்களைக் கேட்பதற்கு என்ன இருக்கிறது? எல்லாம் புருஷர்கள் விவகாரம். ஆண்கள்தான் கள்ளச் சாராயம் காய்ச்சிக் குடித்து உடம்பைக் கெடுத்துக் கொள்கிறார்கள்!" என்றாள் சுபத்ரா.

"உனக்கு உலக அநுபவம் போதாது என்பது இதிலேயே தெரிந்துவிட்டது சுபத்ரா. கள்ளச் சாராயம் குடிப்பவர்கள் தொகை எப்படியும் குறைவுதான். அவர்கள் பயந்து பயந்து சாவார்கள். ஆனால் மதுவிலக்கை ரத்து செய்துவிட்டபின் பகிரங்கமாகச் சாப்பிடுபவர்கள் எண்ணிக்கையோடு ஒப்பிட்டு, எண்ணும்போது மிகக் குறைவாகத்தான் இருக்கும்" என்றாள் மங்களம்மாள்.

"அது மட்டுமில்லை மங்களம்மாள்! நாள் முழுதும் உழைத்துச் சம்பாதிக்கும் பணம் சாயங்காலமானால் கள்ளுக்கடைக்குப் போய்க் கொண்டிருந்தது. கள்ளைக் குடித்து விட்டு வந்து, பெண்டாட்டி பிள்ளைகளை அடிப்பது முதலிய தொந்தரவுகள் ஒவ்வொரு கிராமத்திலும் முன்னே காணலாம். இப்ப

அதெல்லாம் நீங்கி, ஏழைப் பெண்கள் நல்ல ஆடை உடுத்தி, நல்ல உணவைக் குழந்தை குட்டிகளோடு உண்டு சந்தோஷமாக இருக்கிறார்கள். அதை யெல்லாம் கெடுக்கப் பார்ப்பதை நினைக்கும்போதுதான் எனக்கு நெஞ்சம் படபடக்கிறது!'' என்றாள் மங்கையர்க்கரசி அம்மாள்.

''மது விலக்கை முக்கிய நிர்மாணத் திட்டமாகக் கொண்டிருந்த காங்கிரஸே அதை ரத்து செய்யப் பார்க்கிறது வேடிக்கையாக இல்லையா?'' என்றாள் மங்களம்மாள்.

''வேடிக்கை என்றவுடனேயே ஞாபகம் வருகிறது. ஒரு வேடிக்கையான செய்தி பத்திரிகையில் வந்ததைப் பார்த்தீர்களோ!'' என்றாள் சுலோசனா.

''என்னது?'' என்றாள் சுபத்ரா.

''நம்ம மந்திரி பக்தவத்சலம் அவர்களுக்குச் சமைக்கக் கூடத் தெரியுமாம்! அவரே ஓர் இடத்தில் சமைத்திருக்கிறாராம்!''

''ஆமாம், பொம்மனாட்டிகள் எல்லாம் புருஷா உத்தியோகம் பார்த்தால், புருஷா பொம்மனாட்டிகள் உத்தியோகம் பார்க்க வேண்டியதுதானே!'' என்றாள் அலமேலு மாமி நகைத்துக் கொண்டே.

மங்களம்மாள், ''அப்படி எடுத்துக் கொள்ள வேண்டியதில்லை. சமையல் வேலை புருஷா பெண்கள் எல்லோருமே தெரிந்து வைக்கக்கிறது நல்லதுதான்! காமகோடி பீடத்து பெரியவாள் கூட, 'கண்ட ஹோட்டலில் சாப்பிடாதீர்கள். வெளியூர்களுக்குப் போனால் நீங்களே சமைத்துச் சாப்பிடப் பழகிக் கொள்ளுங்கள்! ஆசாரத்துக்கு ஆசாரம்! ஆரோக்கியத்துக்கு ஆரோக்கியம்!' என்று சொல்லியிருக்கிறார்'' என்றாள்.

''ஆமாம், அவர் சொல்வது ரொம்ப வாஸ்தவம். சமீபத்திலே ஹோட்டல்களில் விஷம் கலந்த சாப்பாடு பரிமாறப்பட்டு, எவ்வளவு விதம் விதமான செய்திகள் வந்தன! அதைப் பார்க்கும் போது அவர் எவ்வளவு தீர்க்கதரிசனத்தோடு சொன்னார் என்று நினைக்கத் தோன்றுகிறது!''

''அது சரி! இந்தப் புருஷாள் சமைத்தால் யார் சாப்பிடுகிறதாம்? கூலி கொடுத்தல்லவா ஆளைப் பிடிக்க வேண்டும்?'' என்றாள் சுபத்ரா.

''ஏன் மந்திரி பக்தவத்சலம் சமைத்த சாப்பாடு ரொம்ப ருசியாகக் கூட இருந்ததாம்!'' என்று மிகுந்த பெருமிதத்தோடு சொன்னாள் சுலோசனா.

''யார் சொன்னார்கள்?'' என்றாள் மங்களம்மாள்.

''அவரேதான் சொன்னார்! அவர் சாப்பிட்டுப் பார்த்ததில் தாம் இது வரை சாப்பிட்ட சாப்பாடுகளில் இதுதான் ருசியாக இருந்தது என்று சொல்கிறார்!'' என்றாள் மீண்டும் அதே பெருமிதத்தோடு சுலோசனா.

எல்லோரும் 'கொல்' என்று சிரித்து விட்டார்கள். சுலோசனாவுக்கு அதில் உள்ள ஹாஸ்யம் புரியச் சிறிது நேரம் பிடித்தது.

''சரி, அம்மா! நேரமாகிறது நான் புறப்படுகிறேன்'' என்றாள் அலமேலு மாமி. மற்றவர்களும் நகர்ந்தார்கள். — இந்துமதி




# சமாதான ஒப்பந்தம்!

தாமரை மணாளன்

வியாதியால் அவதிப்படுபவர்களை நீங்கள் பார்த்திருப்பீர்கள். வியாதியை வருவித்து ஆனந்தப்படும் பேர்வழிகளைச் சந்தித்திருக்கிறீர்களா? இல்லாவிட்டால் கோடம்பாக்கம் ஹைரோட் இந்தியா காலனி இரண்டாவது கிராஸ் ரோட்டில் இருக்கும் பதினொன்றாம் எண் வீட்டு வாசல் பக்கம் சரியாகக் காலை ஏழரை மணிக்குப் போய் நில்லுங்கள். அப்படியொரு நபரைச் சந்திக்கலாம். அந்த நபர்தான் ரங்கம்மா.

ஏழரை என்றால் சரியாக ஏழரை மணிக்கு அந்த வீட்டு வாசலில் போய் நிற்க வேண்டும். அப்படியானால்தான் ஏதாவதொரு பொதுக்கூட்டத்துக்குத் தலைமை தாங்கப் போகும் கம்பீரத்துடன் மாநிற காலணா அளவு வயலட் நிறக் குங்குமம் நெற்றியில் விகசிக்க மருந்துப்பெட்டி சகிதம், "இந்தா, புள்ளே, டாட்டரு ஊட்டுக்குப் பூட்டு வாரேன்" என்று தன் மருமகளுக்குக் குரல் கொடுத்தவாறு ரங்கம்மா வாசலில் பிரசன்னமாவதைக் காணலாம்.

'டாட்டரு' என்று ரங்கம்மா வாயால் கௌரவப்படும் டாக்டர் நான்தான். எனக்கும் ரங்கம்மாவுக்குமிடையே சாதாரணமான வைத்தியர் — நோயாளி என்ற தொடர்புதான் என்றாலும் அது மாமூல் தன்மையைவிடச் சற்று வித்தியாசமானது என்பதைவிடக் கொஞ்சம் பயங்கரமானது என்பது இன்னும் பொருந்தும். அதற்கு அடிப்படைக் காரணம், உண்மையில் அவள் நோயாளியாகவும் நடந்து கொள்ளவில்லை; என்னை ஒரு டாக்டராகவும் மதிக்கவில்லை! ஆரம்ப முதலே இதுதான் நிலை!

என் மருத்துவப் படிப்பை முடித்துவிட்டு அன்றுதான் என் டிஸ்பென்சரியை அந்தப் பகுதியில் தொடங்கியிருந்தேன். முதல்



"ஸ்டவ் பேசுகிறதாமே?"
"இரைந்து பேசாதே! அடுப்பு சிரிக்கிறது!"



"இந்த 'ஸ்டவ்வை'க் கேட்டேன் உன் வயதைச் சொல்லி விட்டது!"
"அதைக் கேட்காதே அது சிப்பேர் பொய் சொன்னாலும் சொல்லும்!"

வேலை எதிர்பார்த்து வாசலை நோட்டமிட்டுக் கொண்டிருந்தேன். அப்பொழுது திடீரென்று வாசற்புறத்தில் ஒரு முள்ளம் பன்றி உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு வந்து நிற்பதைக் கண்டேன். கொஞ்சம் கூர்ந்து பார்த்த பின்னர்தான், அது முள்ளம்பன்றியல்லவென்றும், வாசற்புறத்திலிருந்து டிஸ்பென்சரியை உற்று நோக்கிக் கொண்டிருந்த ஒரு பெண்ணின் தலையும் அலங்காரமும் சேர்ந்து உருவாக்கிய காட்சியே என்றும் புலனாகியது. அடுத்த சில விநாடிகளில், வெல்வெட் நிறப் பொட்டும், காவிப் பெயிண்ட் அடித்த ஆர்மோனியக் கட்டையை நிகர்த்த பற்களும், நீலமேக சியாமள வண்ண மேனியும், பிறப்பில் இருந்து தற்சமயம் ஒரு மாத அழுக்குடன் ஐக்கியமாகிப் பரிணமிக்கும் சேலையுமாக வேவாக் கலரில் ஒளி வீசிய கன பரிமாணப் பெண்ணுருவம் என் முன்னே தோன்றியது.

சற்று மிரட்சியுடனேயே அவள் படியேறி வந்ததைக் கவனித்துக் கொண்டிருந்தேன்.

அவள் உள்ளே வந்து, ''புச்சா வந்துக்கிற டாட்டரு நீதானேப்பா?'' என்று ஏக வசன மரியாதையில் என்னிடம் விசாரணையைத் தொடங்கினாள். சந்தர்ப்பவசத்தால் நான் சென்னையில் குடியேற நேர்ந்து விட்டாலும், பூர்வீகத்தில் திருநெல்வேலிப் பக்க வாசி. கொஞ்சம் கௌரவமான மரியாதைச் சொற்களைப் பெற்று அனுபவம். அத்துடன் டாக்டர் பட்டம் பெற்ற பெருமையும் மனத்தில் உண்டு. எனவே அவளுடைய ஏகவசனம் சிறிது சங்கடமாகத்தான் இருந்தது. இருந்தாலும் கிட்டத்தட்ட ஐம்பது வயது மனுஷியிடம், அதுவும் முதல் கேஸாக வந்திருக்கும்போது மரியாதைப் போராட்டம் நடத்திக் கொண்டிருக்க முடியுமா?

''ஆமாம்மா!'' என்று அவளை உபசாரமாகவே வரவேற்றேன்.

அவள் ஒருகணம் என்னை உற்று நோக்கினாள். பின் ஏதோவொரு முகமலர்ச்சியுடன், ''தம்பி உன்னைப் பார்த்தால் சாராயக் கேஸிலே ஜெயிலுக்குப் போயிருக்காளே, என் பெரியண்ணார் பிள்ளையோட மச்சினன், அவனைப் போலிருக்கு'' என்று எடுத்த எடுப்பில் பயங்கரப் பாசவலையை வீசினாள்.

முன்பின் அறிமுகமில்லாமல் இவ்வளவு சுவாதீனமாக என்னை எக்கச்சக்கமான உறவுக்குட்படுத்தும் அவளுடைய துணிச்சலைக் கண்டு தடுமாறி விட்டேன். அடுத்து, 'ஜெயிலிலிருந்து எப்போது தப்பியோடி வந்தாய்?' என்று அவள் கேட்பதற்கு முன் பேச்சை வேறு பாதையில் திருப்பியாக வேண்டும் என்ற துடிப்புடன், ''நீங்க யாரம்மா?'' என்று பவ்யமாகக் கேட்டேன்.

''என்னைத் தெரியாது?'' என்ற கேள்வியுடன் தன் இரண்டரை அங்குல குறுக்கு விட்டமுள்ள கண்களை மூன்றரை அங்குல அளவுக்கு வியப்பால் விரித்து உருட்டினாள்.

''தெரியலையே அம்மா!'' என்று என் அஞ்ஞானத்தை ஒப்புக் கொண்டேன்.

''மிச்சான் இல்லே, மிச்சான்! அதான், கார்ப்பரேஷன் மெம்பர்! அவன் அம்மா ரங்கம்மாதான் நான்! இந்தக் கார்ப்பரேஷன் முழுக்க என் பிள்ளை வைச்சதுதான் சட்டம்!'' என்று தன்னை அறிமுகப்படுத்தினாள் அவள்.

எனக்கு அந்த மிச்சானையோ, கார்ப்பரேஷன் முழுக்க அவன் சட்டம் அமுலாகும் ரகசியமோ எனக்குத் தெரியாதுதான். இருந்தாலும் அதை அவளிடம் காட்டிக் கொள்வது அவ்வளவு விவேகமானதாகத் தோன்றவில்லை. எனவே, ''ஓ, அவுங்களா? எனக்கு நல்லாத் தெரியுமே!'' என்று ஆர்ப்பாட்டமாகக் கூறிவிட்டு, மெல்ல, ''என்னம்மா, விஷயம்?'' என்று விசாரித்தேன்.

''ஒரு சேதி கேட்கலாம்னு வந்தேன். ஆமா உங்கிட்டே மருந்து குடிக்க ரேட் எப்படி?'' என்றாள்.

ரேட் எப்படியாவது! எனக்குச் சற்று எரிச்சலாக இருந்தாலும், மனத்தை அடக்கிக் கொண்டு, ''மருந்து குடிக்க என்னம்மா ரேட்? எல்லாம் வியாதி கண்டு, மருந்து கண்டு!'' என்றேன்.

அவள் விடுவதாக இல்லை. ''அட சரிதாம்பா! வாடிக்கையா வர்றவுங்களுக்குச் சலுகை கொடுக்கறதுமில்லே! முந்தி இங்கே ஒரு டாட்டரு இருந்தாரே அவராண்ட நான்

"ஸ்டவ் பேசுகிறதாம் அதைக் கேட்கத்தான் எல்லோரும் போயிண்டிருக்கா!"
"பெரிய கும்பலா இருக்கே? ஒலிபெருக்கி ஏற்பாடு ஏதேனும் உண்டா?"



ஸ்டவ் (கடைக்காரரிடம்):— ஐயய்யோ! இந்த அம்மாளுக்கு என்னை விற்றுவிடாதீங்க இவங்களோடு சும்மா பேசி மாளாது!





"நம்ம சீதா ஒரு 'ஸ்டவ்' வாங்கி இருக்காளாம்!"

"அவளுக்குப் பேசுவதற்கு ஆள் இல்லையாமோ?"



"ஸ்டவ் வாங்கப் போனேன் — என்ன அதிசயம் .....!"

"ஏன் என்ன ஆச்சு?"

"அதுவே விலை பேச ஆரம்பித்துவிட்டது!"

பத்து வருஷமா மருந்து குடிச்சிருக்கேன். எனக்குன்னு தனி ரேட்டுத்தான் போடுவாரு. நானும் வாடிக்கையா ஒரு நாள் கூட விட்டுக்காமல் போவேனுல்லே! அவரு செத்துப் போயிட்டதுக்கப்புறம் யாரண்டையும் மருந்து குடிக்கலே. இனி உன்னண்டை வாடிக்கையா குடிக்கலாம்னு பார்க்கிறேன்" என்றாள்.

எனக்கு அப்போது ஏற்பட்ட குழப்பத்தை அளக்க உலகத்தில் எந்தத் தர்மாமீட்டரும் இல்லே. பத்து வருஷமா? அப்படி என்ன வியாதி? அது என்ன வைத்தியம்? "உங்களுக்கு என்ன உடம்புக்கு?"

"ரேட்டு?" என்று அவள் மீண்டும் அதிலேயே நின்றாள்.

"நோக்கம் போல் போட்டுக்கலாம். முதலில் நோயைச் சொல்லுங்க" என்றேன்.

"இன்னிக்கு என் ராசிக்கு நல்ல நாள் இல்லே. ஒண்ணும் சொல்லக் கூடாது. சும்மா விசாரிச்சுட்டுப் போகத்தான் வந்தேன். நாளைக்கு வாரேன். நீயே சோதிச்சுப் பார்த்துக்கோ. அப்போ நான் வரேம்பா!" என்று கூறிவிட்டு வெளியேறினாள்.

சொன்னபடி மறு நாள் தவறாமல் வந்து விட்டாள் ரங்கம்மா. மறுநாள் மட்டுமென்ன, தொடர்ந்து நாள் தவறாமல் வரத்தான் செய்தாள். ஆனால் அத்தனை நாளாகியும் அவளுடைய வியாதி மட்டும் அநியாயத்துக்கு மர்மமாக இருந்தது. அவளுக்கு உண்மையில் என்ன வியாதி என்று என்னாலும் கண்டு பிடிக்க முடியவில்லை; அவளும் தெளிவாகப் புலப்படுத்திய இல்லே. முதல் நாள் 'உடம்பெல்லாம் குத்துகிறது' என்றாள். மறு நாள் 'தேகமெல்லாம் எரிகிறது' என்றாள். இன்னொரு நாள் 'உளைச்சல்'. இந்த ரகத்தில் ஒவ்வொரு நாளும் ஒவ்வொன்றைச் சொன்னாள். சோதித்துப் பார்த்தால் அவள் சொல்வதற்கும் உடல் நிலைக்கும் சம்பந்தம் எதுவும் இருப்பதாக எனக்குத் தோன்றவில்லே. ஆரம்பத்தில் கொஞ்ச நாள் ஏதோ அநுசரித்து வைத்தியம் செய்து பார்த்தேன். ஆபத்தான மருந்துகளை நான் கொடுப்பதில்லை என்றாலும் இந்த ரகத்தில் வைத்தியம் பண்ணுவது எனக்கு எரிச்சலாகவே இருந்தது. அந்த நிலை ஒரு நாள் ரங்கம்மாளின் மகனான பிச்சானின் வருகையால் தீர்ந்தது.

நான் முதல் தேதி யன்று ரங்கம்மாளின் வைத்தியச் செலவு பில்லைக் கொடுத்தனுப்பி யிருந்தேன். அதை எடுத்துக் கொண்டுதான் பிச்சான் என்னிடம் வந்தான்.

"என்ன சார் இது எங்கம்மாவுக்கு மருந்து பீஸ் முப்பத்தேழு ரூபாய் போட்டிருக்கீங்க?" என்று பரிதாபமாகக் கேட்டான் அவன்.

"நியாயமான மருந்துச் செலவைத்தானே போட்டிருக்கிறேன்" என்றேன்.

"மருந்தா? எங்கம்மாவுக்கு ஏதுங்க வியாதி? அவ சும்மா தன் மருமகளை, அதாங்க என் சம்சாரத்தைக் 'காலைப் பிடிக்க விடு', 'கையைப் பிடிக்க விடு'ன்னு வேலை வாங்குறதுக்கு, 'உடம்பு தள்ளலே' அப்படி இப்படின்னு சொல்லிக்கிணு இங்கே வருவாள். அதோட வயசான காலத்துலே நாலு பேர் கூடுற இடத்துக்கு வந்தா பொழுதுபோகுமில்லே! அதையெல்லாம் நெனைச்சுத்தான் எங்கம்மா தினம் இங்கே வருவாள். நீங்க அதுக்கெல்லாம் மருந்து கொடுத்தா எனக்குக் கட்டுப்படியாகாதுங்க" என்றான் பிச்சான்.

என்னுடைய வைத்திய சமத்காரத்துக்குக் கொஞ்சம் அசடு வழிந்தாலும் ரங்கம்மாளின் நோயைப் பற்றிய மர்மம் முடிச்சவிழ்ந்து விட்டதில் எனக்குப் பரம நிம்மதி.

"இனிமேல் நீ கவலைப்படாதேப்பா! புழலேரியில் கடைசிச் சொட்டுத் தண்ணீர் இருக்கும் வரை உம் அம்மாவுக்கு மருந்து கொடுக்கிற கவலே எனக்கு விட்டது" என்றேன். பழைய பாக்கியைச் சிறுகச் சிறுகக் கொடுத்து விடுவதாகக் கூறிவிட்டு அவன் போய் விட்டான்.

விஷயங்கள் தெளிவாகியதும், ரங்கம்மாப் பிரச்னையை என் மனத்திலிருந்து அநேகமாகக் கைவிட்டு விட்டேன். ஆனால் அவளோ தான் அப்படியோர் அசட்டைக் குரியவள் அல்லவென்பதை விரைவிலேயே எனக்கு உணர்த்த ஆரம்பித்து விட்டாள். அவள் என் டிஸ்பென்சரிக்குப் படையெடுத்ததற்கு மருமகளின் பணிவிடை, பொழுது போக்கு என்ற குறிகளுக்கும் அப்பாற்பட்ட வேறு

பலகையில் எழுதப்பட்டிருக்கிறது:—தோசை வியாபாரம் முடிந்த பிறகு 'ஸ்டவ்' ஜோசியம் தொடங்கும்!



"ஹலோ! நான்தான் ஸ்டவ் பேசறேன்! நீங்க ஆபீஸிலிருந்து வரும்போது எனக்கு ஒரு புட்டி மண்ணெண்ணெய் வாங்கிவாங்க!"



# ஒவ்வொரு தூவுதலிலும் இரட்டிப்புச் சருமப் பராமரிப்பையளிக்கும் டால்கம்

அதைப் போன்றுதான் குடிகூரா டால்கம் இயங்குகிறது—குடிகூரா இலேசாக மருந்து கலந்திருப்பதால், மிகச் சில டால்க்குகளே இயங்கும் வழியில் உங்களுடைய சருமத்தை சிறப்பாகப் பேணுகிறது.

குடிகூரா வேர்க்குரு தோன்றாமல் தடுக்கிறது. அழற்சியுண்ட சருமத்திற்கு இதமளிக்கிறது. மற்றும் துர்நாற்றத்தையெழுப்பும் வியர்வையை உறிஞ்சி உங்களை நாள் முழுவதும் உடல் பூராவும் பரிமள புத்துணர்ச்சியுடனிருக்க வைக்கிறது. குடிகூரா தூவிக்கொள்ளும் ஒவ்வொரு தரமும் அதன் சேர்த்தியாயிணைந்த ஒரு தனிப்பட்ட சுகந்தம் உள்ளக் கிளர்ச்சியைத் தூண்டுகிறது.

இன்றே ஒரு குடிகூரா டப்பா வாங்குங்கள்—110 வருஷத்திய பரம்பரையையுடையது இந்த டால்கம்.




## குடிகூரா

குடும்ப முழுவதற்கும் ஏற்ற சர்வ-காரிய டால்கம்

குடிகூரா ஆயின்மென்ட் புண்கள், வேனிற் சொறிசிரங்குகள் மற்றும் இதர சரும அழற்சிகளையும் குணப்படுத்தி விரைவில் சரும ஆரோக்கியத்தைச் சேர்க்கிறது.

NATIONAL C 30162A

---



## அவள் சமையலில் அப்படி என்ன விசேஷம்?

### சுதா உபயோகித்துத் தயாரித்த தின்பண்டங்கள் குழந்தைகளுக்கு இன்ப மூட்டுகின்றன

ஒவ்வொருவரும் - குறிப்பாக விவேகமுள்ள பெண்மணிகளனைவரும் சுதா நம்பகமானதென்பதை நன்கு அறிவர். ஏனெனில் இவ் வற்புத சமையல் சாதனம் பரிசுத்தமான தாவர எண்ணெய்களிலிருந்து தயாரிக்கப்பட்டு விடமின் சத்துக்கள் நிறைந்துள்ளது. தங்களது அருமைக் குழந்தைகள் போற்றி விரும்பும் பண்டங்களை தயாரிக்க ஏற்றது என்று பெண்மணிகள் இதையே நாடுகின்றனர்.

சுதா சமையலுக்கு அதிக ருசி அளித்து இல்லத்திற்கும் அதிக இன்பம் தருகின்றது

இப்பொழுது 2 & 4 கிலோகிராம் கவர்ச்சிகரமான டின்களில் கிடைக்கும்

**கவர்ன்மெண்ட் ஹைட்ரோஜனேஷன் பாக்டரி**

(பொதுத்துறையிலுள்ள ஒரே வனஸ்பதி தொழிற்சாலை)

கோழிக்கோடு - கேரளம்



சில உள் நோக்கங்களும் இருந்திருக்கின்றன என்ற சங்கதி பின்னால் தெரிய வந்தது.

அன்று மருத்துவ மனையின் உள் அறையில் ஒரு நோயாளியைப் பரிசோதித்துக் கொண்டிருந்தேன். அப்போது வெளியே காத்திருந்த நோயாளியிடம் யாரோ ஒருவர் மருத்துவ ஆலோசனைகளை வெளியிடும் குரல் கேட்டது.

வயிற்றில் கட்டி ஏற்பட்டு உபாதைப் பட்டுக் கொண்டிருந்த ஒரு குழந்தைக்கு ஆபரேஷன் செய்யும் நோக்கத்தோடு இரண்டு நாட்களாகச் சில ஆரம்ப சிகிச்சைகளைச் செய்து கொண்டிருந்தேன். அக்குழந்தையின் தாயாரிடம்தான் ரங்கம்மா தன் வைத்திய ஞானத்தை வெளியிட்டுக் கொண்டிருந்தாள்.

அந்தக் குழந்தையின் வயிற்றை நாலைந்து முறை தட்டிப் பார்த்து விட்டு, ''இது வேறு ஒண்ணுமில்லே. வாய்வுதான். இதுக்கெல்லாம் இந்த இங்கிலீசு டாக்டருங்களுக்கு மருந்து தெரியாது. கொஞ்சம் சுக்கு, பூண்டு, கடுக்காய் எடுத்து ரவை பூண்டு....'' என்று அவள் ஆரம்பித்ததுமே அந்தக் குழந்தையின் தாய் மிரண்டாள்.

''டாக்டர் கட்டி ஆப்பிரேஷன் பண்ணணும்னு சொன்னாரே!'' என்றாள் அவள்.

உடனே ரங்கம்மா, ''அடிப் பாவி! இம்மாங் கொழந்தைக்கா ஆப்பிசன்? ஒனக்குக் காளியே கட்டி. தட்டினால் கூட எப்படி வலிக்கும்! இந்த இரண்டுங்கெட்டான் சிசு வயித்திலே கத்தி வச்சால்....'' என்று நீட்டி முழக்கி மருத்துவ சாஸ்திரத்துக்கே கத்தி வைத்ததும் நான் பதறிப் போனேன்.

என் பொறுமை எல்லை கடந்தது. அவளை அழைத்து, ''என்னம்மா இது! எனக்குப் போட்டியா வைத்தியம் நடக்கிறாப் போல இருக்கே!'' என்று கோபத்துடன் கேட்டேன்.

''நீ எதைச் சொல்றே! நான் புச்சா ஒண்ணும் செய்யலியே!....ஓ. அதுவா? அதாம்பா, எங்க ஆயாவோட பாட்டனாரு பெரிய வைத்தியரு. சின்ன வயசிலே அவர் வைத்தியம் பண்றதைப் பக்கத்திலேயிருந்து பார்த்திருக்கேன். அதுலேருந்து எனக்கும் கொஞ்சம் தெரியும். அதை எப்போதும் போலத் தெரிஞ்சவங்களுக்குச் சொல்லுவேன். அவ்வளவுதான்'' என்றாள்.

உடனே ஆத்திரத்துடன் ''இந்தாம்மா இனி இந்தப் பக்கம் வரக் கூடாது. உனக்கு வைத்தியம் பண்ண என்னால் முடியாது'' என்று கத்தி விட்டேன்.

''அட சர்தாம்பா! ஒருத்தர் 'சீ'ன்னு சொன்னதுக்கப்புறம் இந்த ரங்கம்மா அவுங்க வாசப்படி ஏற மாட்டா!....அக்காங்!'' என்று ஒரு வெட்டு வெட்டியவாறு ரங்கம்மாள் வெளியேறினாள்.

அந்தச் சம்பவத்துக்குப் பின் இரண்டு மூன்று நாட்களாக ரங்கம்மாள் என் மருத்துவ மனை வாசற்படி அவள் ஏறவே யில்லை. சனியன் தொலைந்தது என்று வெகு நிம்மதியாக இருந்தேன். ஆனால் நான்காவது நாள்தான் அந்தச் சனியன் என்னை விட்டுத் தொலையவில்லை என்பதும் என் டிஸ்பென்சரி வாசலுக்கு அருகேயிருந்த மரத்தடியில் நின்று ஒரு மாபெரும் மறியல் போராட்டமே நடத்திக்கொண்டிருந்தது என்பதும் தெரிய வந்தன. தற்செயலாக வெளி வாசற் பக்கம் சென்றவன் அந்தக் காட்சியைக் கண்டேன்.

என் டிஸ்பென்சரியை நோக்கி வந்து கொண்டிருந்த ஒரு பெண்ணைக் குறுக்கே விழுந்து படுக்காத குறையாக மறித்து, ''என்னடி, இம்மாம் பெரிய பட்டணத்திலே வேற டாக்டரு இல்லே! இந்த ஆளு ஒன்னும் பிரயோசனமில்லே. சின்ன வயசு. அறியாப் பிள்ளே. இப்பத்தான் இங்கிலீஸ்லேருந்து வந்திருக்காரு. நான் இவரண்டையும் மருந்து குடிச்சுப் பாத்தேன். ஒரு மாசத்துக்குள் 'சீ'ன்னு போச்சு. உட்டுட்டேன்'' என்று சொல்லிக் கொண்டிருந்தாள்.

இப்படி அவள் போர்க் கொடி உயர்த்துவாள் என்று நான் எதிர் பார்க்கவில்லை. என் மூளை குழம்பியது. கடைசியில் அவளைச் சமாளிக்க ஒரே ஒரு வழிதான் புலப்பட்டது. சரணாகதி, சமரசம்!

என் உதவிக்கு இருந்த பையனை விட்டு அவளை அழைத்து வரச் சொல்லி நானே வாசற்படியில் நின்று வரவேற்றேன். ரொம்பவும் பிகுப் பண்ணிக் கொண்ட பின்தான் வாசலைக் கடந்து உள்ளே வந்தாள் ரங்கம்மா. அவளை நாற்காலியில் அமர வைத்து ஒரு ஸ்பெஷல் காப்பிக்கும் ஆர்டர் கொடுத்தேன்.

''இந்த மூன்று நாளும் நீங்க வராமல் எனக்கு என்னவோ போலாயிட்டுது. நம்ம உறவை நீங்க இப்படி மறக்கலாமா?''

''என்னய்யா உறவு?'' என்று அவள் முறுக்குடனேயே கேட்டாள்.

''அதுதான்! சாராயக் கேஸில் ஜெயிலுக்குப் போயிருக்கும் உங்க பெரியண்ணார் பிள்ளையோட மச்சினன் மாதிரி நான் இல்லையா?'' என்று இழுத்தேன்.

''ஓ, அதுவா?'' என்று அவள் பெருமிதத்துடன் கூறும்போது அவள் முகத்திலிருந்த முறுக்குக் கொஞ்சம் குறைந்திருந்தது.

உடனே விடாமல், ''அதனால்தான் நான் சொல்றேன், நீங்க வேறே, நான் வேறே இல்லே. உங்களுக்குக் கொள்ளுத் தாத்தா என்றால் எனக்கும் உறவுதானே? அவரு விட்டுப் போன வைத்தியத்தை நீங்க பார்த்தால் என்ன, நான் பார்த்தால் என்ன? நீங்க எப்போதும் போல வந்து போங்க. அதுவே எனக்குப் பெரிய பலம் மாதிரி'' என்றேன்.

அவள் இரண்டு நிமிஷம் யோசித்தாள்; பிறகு, ''நீ இவ்வளவு அன்பாகச் சொல்றச்சே தட்ட முடியல்லே. ஆனா எனக்கு ஒரு யோசனை தோணுது. இந்தக் கெவர்மெண்ட் ஆஸ்பத்திரியிலே ஆயாங்க இருக்காங்களே, அது மாதிரி நானும் உன்னண்டை இருந்திடறேனே. நானும் அடிக்கடி இங்கே வந்த மாதிரியாச்சு. அதோட எங்க தாத்தா செஞ்ச வைத்தியத்திலே ஒனக்குத் தெரியாததைச் சொல்லிக் கொடுத்த மாதிரியும் ஆச்சு! என்ன நான் சொல்றது!'' என்றாள்.

திருடனைப் பிடித்துத் தலையாரியாக்கிக் கொள்வது போல் ரங்கம்மாளை 'நம்ம ஆளாக' ஆக்கி அவளுடைய விஷமத்தனத்தை என் டிஸ்பென்சரியின் நாலு சுவர்களுக்குள் மடக்கிப் போட்டு விட்டதாகச் சிறிது கர்வப் பட்டுக் கொண்டேன். ஆனால் அதுவும் பெரிய ஆபத்தாக முடிந்தது.

அது ஓர் இருதயம் சம்பந்தப்பட்ட கஷ்டமான கேஸ். நோயாளியோ நம்பிக்கையிழந்து பீதியுற்றிருந்தான் என்பதை அவனை அழைத்து வந்தவர்களின் பேச்சிலிருந்து

புரிந்து கொண்டேன். இதற்கு முன் எத்தனையோ டாக்டர்களிடம் அழைத்துச் சென்றார்களாம். ஒருவரிடமாவது நம்பிக்கை கொண்டு மருந்து குடிக்க அவன் சம்மதிக்கவில்லையாம்.

நோயாளி, "எப்படி இருக்கிறது டாக்டர்?" என்று பரிதாபமாகக் கேட்டான்.

உண்மையைச் சொல்லி அவனுக்கு மன அதிர்ச்சியை உண்டாக்க எனக்கு மனமில்லை.

"உடனே எப்படிச் சொல்ல முடியும்? ஒரு நாள் முழுதும் கவனித்துப் பார்த்த பிறகு தானே சரியாகச் சொல்ல முடியும்?" என்று அவனிடம் சிரித்து மழுப்பி வெளியேறினேன்.

அப்பொழுது அவனுடைய உறவினர்களில் விவரம் தெரிந்த ஒருவர் என்னைத் தனியே ஒதுக்குப்புறமாக அழைத்து விசாரித்தார். அவரிடம், "கேஸ் ரொம்பக் கஷ்டமானதுதான். மிகவும் சிரமப்பட்டுச் சிகிச்சை செய்தால்தான் நம்பலாம். ஆனால் இது அவருக்குத் தெரியக்கூடாது" என்றேன்.

அச்சமயம், எனக்குப் பின்புறமிருந்து, "அப்போ பொழைக்கிறது கஷ்டம்னு சொல்லுங்க. பாவம்!" என்ற குரல் கேட்டது. திடுக்கிட்டுத் திரும்பினேன். ரங்கம்மா!

அவளை அந்த இடத்தில் கண்டதுமே என் உள்ளம் பதறியது. உலகத்தில் எந்த ஒரு ஜீவனின் காதுகளில் என் வார்த்தை விழக் கூடாதோ அந்தக் காதுகளில் விழுந்து விட்டது. இனி ரங்கம்மாவின் விஷமத்தனம் எந்த வழியில் செயல்படுமோ?

அப்படி நடக்காமல் இருக்க நான் செய்த முயற்சிகள் அனந்தம். நோயாளியின் அறைப் பக்கம் போகக் கூடாது என்று வெளிப்படையாகவே அவளிடம் கண்டித்து வைத்தேன். மத்தியானம் கூட அவளை உணவுக்கு அனுப்பி விட்டுத்தான் நான் வெளியேறினேன். ஆனால் நான் வெளியே சென்று திரும்புவதற்குள் எது நடந்து விடக் கூடாது என்று பயந்து கொண்டிருந்தேனோ, அது நடந்தே விட்டது. நான் வாசற் படியில் ஏறும்போது, அந்த நோயாளியிடம் என் வார்த்தைகளை டேப் ரிகார்டர் ஒலிபரப்புவது போல் வெளியிட்டுக் கொண்டிருந்தாள் ரங்கம்மா. என்னைக் கண்டதும், திருட்டுப் பூனை போல் வெளியேறினாள்.

எனக்கு ஆத்திரம் பொங்கியது. காரியம் மிஞ்சிய பின் ஆத்திரப்பட்டு என்ன பயன்? மேற்கொண்டு செய்வதறியாது என் அறைக்குள் வந்து உட்கார்ந்தேன்.

பத்து நிமிஷம் ஆகியிருக்கும். அந்த நோயாளியின் உறவினர் வந்து "சார்! உங்க முகராசியோ, என்னமோ எங்க பையனுக்கு உங்கள் மேல் ரொம்ப நம்பிக்கை ஏற்பட்டு விட்டதுங்க. நீங்க எப்படியும் குணமாக்கி விடுவீங்கன்னு சொல்றான்" என்றார்.

எனக்கு ஏற்பட்ட வியப்புக்கு அளவில்லை. ரங்கம்மா புகுந்து கலக்கிய பின்பும் ஒரு மனிதருக்கு நம்பிக்கை ஏற்படுவதென்றால்....

தொடர்ந்து வந்த நாட்களில் அவன் காட்டிய ஒத்துழைப்பும் உற்சாகமும் எனக்கு ஒரு புதிராகவே இருந்தன. அதிசயிக்கும் வகையில் அவன் உடம்பு தேறி வந்தது.

நாலைந்து நாட்கள் கழித்துப் பேச்சுவாக்கில், அவனிடம், "எத்தனையோ டாக்டர்களிடம் வைத்தியம் செய்து கொள்ள மறுத்து விட்டீர்களாமே, என்னிடம் மட்டும் எப்படி நம்பிக்கை ஏற்பட்டது?" என்றேன்.

அவன் சிரித்துக் கொண்டே, "வேறொன்றும் இல்லே, சார்! இதுவரை எந்த டாக்டரும் என் உடம்புக்கு ரொம்ப சீரியஸ் என்று கண்டுபிடிக்கவேயில்லே. நீங்க ஒருத்தர் தான் அதைக் கண்டு பிடித்திருக்கீங்க என்று உங்க ஆயா என்னிடம் சொன்னதிலிருந்து தெரிந்து கொண்டேன். என் வியாதியின் நிலைமை நீங்கள் தெரிந்து கொண்டு விட்டதால் எப்படியும் குணப்படுத்தி விடுவீங்கன்னு எனக்குத் தெரியும்" என்றான்.

அவன் மனப் போக்கு எனக்கு வேடிக்கையாக இருந்தது. அவனைத் தைரியப்படுத்துவதற்காக மற்ற டாக்டர்கள் அவனிடம் உண்மை நிலையைத் தெரியப்படுத்தாமல் இருந்திருப்பார்கள். அதனால் அவநம்பிக்கையா? அதை விட ரங்கம்மா தன் சுபாவமான விஷமத்தனத்தால் எதையோ செய்யப் போய் அதன் மூலம் அவனுக்குத் தன்னம்பிக்கை ஏற்பட்டிருப்பது தான் இன்னும் விசேஷம்.

எங்களுக்குள் அறிமுகம் ஏற்பட்டுக் கிட்டத்தட்ட இரண்டு மாத காலத்துக்குப் பின் அன்றுதான் என் 'ஆயா' ரங்கம்மாவைக் கனிவுடன் நோக்கினேன். அறிந்தோ, அறியாமலோ ஓர் உயிரைக் காக்கத் துணை செய்த ஒரே காரணத்துக்காக ரங்கம்மாவின் எண்ணற்ற விஷமக் குணங்களை யெல்லாம் அந்த விநாடியில் மறந்து விட்டேன்.

# டேவிஸ் கோப்பை டென்னிஸ் போட்டி

**குண்டுமணி**

மன உறுதியைக் குறிக்க ஒரு கதை உண்டு. ஒருவர் வக்கீலிடம் வேலை பெறுவதற்காகச் சென்றாராம். வாசலில் 'வேலைக்கு ஆள் தேவை' என்று பலகை தொங்க விடப்பட்டிருந்தது. வேலை தேடி வந்தவர் அந்தப் பலகையையும் கழற்றி எடுத்துக் கொண்டு வக்கீலிடம் சென்றாராம்.

வக்கீல் வியப்புடன், " 'வேலைக்கு ஆள் தேவை' என்று எழுதியுள்ள இந்தப் பலகையையும் ஏன் எடுத்துக் கொண்டு வந்தீர்?" என்று கேட்டார்.

"இனிமேல் இந்தப் பலகை எதற்காக வெளியில் மாட்டியிருக்க வேண்டும்? நான்தான் வேலைக்கு வந்து விட்டேனே!" என்று மன உறுதியோடு கூறினார் வேலைக்கு வந்தவர். அவரது மன உறுதியைக் கண்டு வக்கீல் வேலையைக் கொடுத்தாராம்.

டில்லியிலிருந்து சென்னைக்குப் புறப்படுகையில் மெக்ஸிகோ ஆட்டக்காரர்கள், "சென்னையில் நடக்கும் டேவிஸ் போட்டியில் நிச்சயம் நாங்கள் வெற்றி பெற்று விடுவோம்" என்று சொல்லிக் கொண்டு வந்தார்கள். முதலில் அவர்கள் இப்படி உறுதியுடன் சொல்கிறார்களே, அது நடக்குமா என்று தோன்றியது. ஆனால் அவர்கள் சென்னையில் நடந்த டேவிஸ் கோப்பைப் பந்தயத்தில் ஐந்து போட்டிகளிலும் மாபெரும் வெற்றி யடைந்ததைப் பார்த்ததும் அவர்கள் மன உறுதியைக் கண்டு அந்த வக்கீலைப் போல் நாமும் வியந்து, 'சபாஷ், மெக்ஸிகோ விளையாட்டு மன்னர்கள்!' என்று பாராட்டுகிறோம்.

ஆரம்பத்தில் வெகு நன்றாக ஆடிய முகர்ஜி முதல் கோட்டையை மெக்ஸிகோ ஆட்டக்காரர் பலபாக்ஸிடம் கைவிட்டார்.

இரண்டாம் கோட்டை மிக உறுதி வாய்ந்தது. நிச்சயம் இந்தியாவுக்கு வெற்றி கிட்டும் என்று எதிர்பார்த்திருந்தனர் டென்னிஸ் ரசிகர்கள்; கடைசி வரையில் அந்த எண்ணத்தைக் கொடுத்தார் கிருஷ்ணன். முடிவு வரையில் ஆட்டம் யார் பக்கம் வெற்றிகரமாகச் சாயுமோ என்ற ஐயத்தையும் ஆர்வத்தையும் கொடுத்தது. மெக்ஸிகோ மன்னர் ஒஸுனா கிருஷ்ணனின் வெற்றிக் கோட்டையைத் தகர்க்கப் பாடுபட்டுக் கொண்டிருந்தார். அந்த வேகத்தில் ஆட்டம் முடியுமுன்பே அவர் வெற்றி பெற்று விட்டதாக எண்ணி வலையைத் தாண்டிக் குதித்தது அவரது துடிப்பைக் காட்டியது. அம்பயரின் இன்னும் தரமாக அமைந்திருந்தால் இந்த விதமான அசம்பாவித நிகழ்ச்சிகள் நடந்திருக்க வேண்டிய அவசியம் இருந்திருக்காது. கிருஷ்ணனின் ஆட்டத்தில் விறுவிறுப்பு ஏற்படும் தருணத்தில் அம்பயரின் கோளாறினால் அவர் சலிப்படையும்படி நேரிட்டது. எல்லாம் 'லெட்'டாக அம்பயரின் முடிவுகள் வந்ததால் விளைந்த விளைவுகள், என்ன செய்வது?

ஆட்டத்தில் வெற்றியும் தோல்வியும் சகஜம். ஆனால் கிருஷ்ணன் கடைசி வரையில் தம் திறமையான விளையாட்டால் ஒஸுனாவைத் திணற அடித்தது ஒன்றே போதும். ஆட்டம் உச்சகட்டத்தில் இருந்தபோது ஒஸுனா தம் கழுத்தில் அணிந்திருந்த சிலுவையிடம் வெற்றிக்காகப் பிரார்த்தனை செய்ய வேண்டியிருந்ததென்றால் அவர் எவ்வளவு தூரம் அசந்து போய்விட்டார் என்பதை கணித்துக் கொள்ளலாம். பல தடவை ஒஸுனா கிருஷ்ணனின் 'பேக் ஹாண்டு ஷாட்டு'களில் அசமந்து நின்றார். ஒரு தடவை தம்மை மறந்து கைதட்டி மகிழ்ந்தார். வலிமையான இரும்புக் கோட்டை என்று கருதிய கிருஷ்ணன் தோல்வியுற்றது ஒஸுனாவின் திறனுக்கு ஒரு நற்சான்றாகும்.

பிரேம்ஜித் லாலும் முகர்ஜியும் இரட்டையர் ஆட்டத்தில் இறங்கிய போது ஒஸுனாவும் பலபாக்ஸும் எளிதில் இவர்களை வென்றுவிடலாம் என்ற எண்ணத்துடன் மலர்ந்த முகத்துடன் மைதானத்தில் இறங்கினர். ஆனால் பிரேம்ஜித்லாலின் அபாரமான சர்விசும், தாக்குதலும் எதிரிகளைத் திணற அடித்தன. மெக்ஸிகோ வீரர்கள் மிகச் சிரமப்பட்டுத்தான் அந்த வெற்றிக் கோட்டையைக் கைப்பற்ற முடிந்தது. இந்தக் கோட்டையைக் கைப்பற்றியதும் டேவிஸ் கோப்பை இறுதியாட்டத்துக்கு மெக்ஸிகோ குழுவினர் செல்வது உறுதியாகி விட்டது. மெக்ஸிகோ டென்னிஸ் மன்னர்களின் குதூகலத்துக்கும், ஆரவாரத்துக்கும் கேட்பானேன்?





மெக்ஸிகோவின் முதிர்ந்த ஆட்டக்காரர் லாமாஸ் நான்காவது



மெக்ஸிகோ ஆட்டக்காரர்கள்







இந்திய ஆட்டக்காரர்கள்

வெற்றிக் கோட்டையைக் கைப்பற்றினார். லாலின் முயற்சி கைகூடவில்லை. ஐந்தாவது கோட்டையிலாவது அக்தர் அலி வெற்றி தேடித் தருவார் என்று எதிர்பார்த்தனர் மக்கள். கடைசியில் அதுவும் ஏமாற்றமாகி விட்டது. வெற்றித் தேவதையின் முழுப் பார்வையையும் மெக்ஸிகோ வீரர்கள் தம் பக்கம் திருப்பிக் கொண்டு விட்டனர். அவர்கள் தில்லியில் மன உறுதியுடன் சொன்னது நிரூபணமாகி விட்டது.

டென்னிஸ் பிறந்தது பிரான்ஸ் தேசத்தில். அது பிரிட்டனில் வளர்ந்து பெர்முடாவுக்குச் சென்றது. மிஸ் மேரி என்ற பெண்மணி அமெரிக்காவில் விருந்து விடுமுறையைக் கழிக்கப் பெர்முடாவுக்கு வந்தாள். பெர்முடாவில் டென்னிஸ் ஆட்டத்தைக் கண்டதும் அதைத் தன் நாட்டுக்கும் எடுத்துச் சென்றாள். அமெரிக்காவில் டென்னிஸ் முதலில் பெண்களின் விளையாட்டாகத்தான் இருந்தது. பிறகு ஆட்டத்திலுள்ள விறுவிறுப்பும், கவர்ச்சியும் ஆண்களையும் கவர்ந்தன. அமெரிக்காவில் ஹார்வர்ட் சர்வகலாசாலை மாணவர் டுவைட் பில்லி டேவிஸ் என்பவர் டென்னிஸ் உலக நாடுகளைக் கவர அமெரிக்க டென்னிஸ் கழகத்துக்கு 1900ம் வருடம் வெள்ளிக்கோப்பையொன்றை வழங்கினார். டேவிஸ் தாமே டென்னிஸ் ஆட்டத்தில் நிபுணர். முதன் முதலில் நடந்த டேவிஸ் கோப்பைப் பந்தயத்தில் அவரும் கலந்து கொண்டார். இந்தப் போட்டி ஆரம்பித்த பொழுது பிரிட்டன் மட்டுமே கலந்துகொண்டது. ஆனால் இன்று ஐம்பத்தாறு நாடுகளுக்கு மேல் கலந்துகொள்கின்றன. அதனால் நாடுகளை ஐரோப்பிய, அமெரிக்க, கிழக்குப் பகுதிகளென்று பிரித்து ஆட்டத்தை நடத்துகிறார்கள். மெக்ஸிகோ ஆட்டக்காரர்கள் அமெரிக்க ஐரோப்பியப் பகுதிகளில் வென்று ஜயக்கொடி நாட்டி விட்டு, இந்திய கோஷ்டியுடன் சென்னை ஐலந்து மைதானத்தில் டிசம்பர் 3, 4, 5 தேதிகளில் ஆடி இங்கேயும் தங்கள் வெற்றியை நிலைநாட்டினார்கள். அவர்களுக்கு நம் பாராட்டுக்கள்.

சென்னை ஐலந்து மைதானத்தில் டிசம்பர் 1ந் தேதியே டேவிஸ் கோப்பைப் போட்டி ஆரம்பமாகவிருந்தது. ஆனால் வருணபகவான் தன் விளையாட்டைக் காட்டி விட்டதால் ஆட்டம் மறு நாளைக்கு ஒத்திப் போடப்பட்டது. மறுநாளும் ரசிகர்கள் திரளாக ஆட்டத்தைப் பார்க்கவந்திருந்தார்கள்! என்ன ஏமாற்றம்! மைதானம் சிறிது ஈரமாக இருந்ததால் அன்றும் விளையாட்டு கிடையாது என்றதும் டென்னிஸ் ரசிகர்கள் முகத்தில் ஈயாடவில்லை.

''மைதானத்தைச் சரி செய்து விட்டு ஆடலாமே! வெயில்தான் நன்றாக அடிக்கிறதே?'' என்றார் ஏமாந்த ஆசாமி ஒருவர்.

''அம்மாதிரி ஆடுவதற்கு நெஞ்சுத் துணிவு வேண்டும். அந்த மாதிரி உள்ளம் படைத்தவர் விம்பிள்டன் வெற்றி வீரர் ராட் லேவர் ஒருவர்தான். ''இதைவிட ஆபத்தான நிலையில் அவர் ஆடியிருக்கிறார். நெதர்லண்ட்ஸின் ஹில்வர்ஸத்தில் நடைபெற வேண்டிய டென்னிஸ் போட்டிக்காக விமானத்தில் சென்று கொண்டிருந்தார் விம்பிள்டன் வெற்றி வீரர் ராட் லேவர். அவர் சென்ற விமானம் மற்ற விமானத்துடன் மோதிக் கொள்ளாமல் இருக்கத் தவிழாகத் தாவிச் சென்றது. விமானம் நல்ல வேளையாக விபத்திலிருந்து தப்பிஇறங்கியபோது கலவரமடைந்த பதின்மூன்று பிரயாணிகளை ஸ்டெரச்செரில் தூக்கிச் சென்றனர். மற்றவர்கள் அதிர்ச்சியினால் நடுநடுங்கிப் பயந்து போய்க்கொண்டிருந்தனர். ராட் லேவர் ஒன்றுமே நடவாதது போல் உடையை மாற்றிக் கொண்டு டென்னிஸ் மைதானத்துக்குச் சென்று, ஆட்டத்தை நன்றாக ஆடி எதிரியை வென்றார்.''

இன்னொரு நாளும் துளி ஈரத்துக்காக மெக்ஸிகோ–இந்திய ஆட்டத்தை மத்தியானத்தில் ஒரு மணி நேரம் தள்ளிப் போட்டதால் ரசிகர்களின் பொறுமை சோதிக்கப்பட்டது. ஆனால் மேல்கூரையில்லாததால் கடுமையான வெய்யிலில் இருந்தபோதும் பொறுமையுடன் சகித்துக்கொண்டிருந்த டென்னிஸ் அபிமானிகளைப் பாராட்டவேண்டியதுதான். ஏன், இத்தனை பெரிய டேவிஸ் பந்தயத்தை முடிந்தவரை நன்றாக நடத்தினார்களே, சென்னை டென்னிஸ் சங்கத்தார் அதற்கு அவர்களுக்கும் ஒரு பாராட்டு தெரிவித்துவிட வேண்டியதுதான்! சிறு குறைகளை எடுத்துச் சொல்லிக்கொண்டிருப்பானேன்? என்ன சொல்கிறீர்கள்?

# ஏன்?

## இந்த ஹேர் ஆயில்கள் உங்கள் கூந்தலுக்குச் சிறந்தவை




காரணம், இவை
ஆரோக்கியமும்
நறுமணமும்
அளிக்கின்றன.




டாடாவின் தூய, தாவர ஹேர் ஆயில்கள் அடி மண்டை ஓட்டுக்குக் குளிர்ச்சியூட்டி, கூந்தல் அடர்த்தியாக வளரவும், பாங்காகப் பரிமளிக்கவும் உதவுகின்றன. கோகோனட் அல்லது கேஸ்டர் ஹேர் ஆயிலைத் தேர்ந்தெடுங்கள். ஆனல் அது டாடா தயாரிப்புதானு என்பதை மட்டும் உறுதி செய்துகொள்ளுங்கள். தராதரம் தெரிந்தோர் அதைத்தான் எப்போதும் செய்கிறார்கள்.

டாடாவின் கோகோனட் ஹேர் ஆயில்: 3 வித சைஸ்களிலும், ரோஜா, மல்லிகை, லாவண்டர், புஷ்பா ஆகிய 4 நறுமணங்களிலும் கிடைக்கிறது.

டாடாவின் கேஸ்டர் ஹேர் ஆயில்: 3 வித சைஸ்களில் ரோஜா நறுமணத்துடன் கிடைக்கிறது.

**டாடாவின் ஹேர் ஆயில்களை வாங்கும்போது சிவப்பு.**
**மற்றும் பொன்னிற லேபில்களைக் கவனித்து வாங்குங்கள்.**

THOY-45 TAM.

3, 4-16-12




திபேத்திய அகதிகளுக்கிடையில் கம்யூனிஸப் பிரசாரம் செய்ததற்காகவும் தேசமெங்கிலுமுள்ள முக்கியமான ராணுவத் தளங்களைப் பற்றிய விவரங்களைச் சேகரித்ததற்காகவும் இரண்டு திபேத்தியர்கள் கைது செய்யப்பட்டனர்....

இந்தியா — சீன எல்லைத் தகராறு ஆரம்பித்த காலத்திலேயே இது போன்ற செய்திகளெல்லாம் வரத் தொடங்கின. ஆகா! ஐந்தாம் படையினர் மிக ஜரூராக இருக்கிறார்கள் போலிருக்கிறதே என எண்ணினோம். கம்யூனிஸ்ட் சீனாவின் அக்கிரமப் படையெடுப்புக்குப் பிறகு நாடெங்கிலுமுள்ள பல சீனர்களையும் கம்யூனிஸ்டுகளையும் கைது செய்ததன் மூலம் ஐந்தாம் படை வேலைகளுக்கு இடமளிக்காது முன்னெச்சரிக்கையுடன் இருப்பதை அரசாங்கம் நிரூபித்திருக்கிறது.

ரத, கஜ, துரக, பதாதிகள் என்னும் நால் வகைப் படையினரை நாம் அறிவோம். ஆரியப் படைவீடு, பம்பைப் படைவீடு, மணப் படைவீடு, புதுப்படை வீடு முதலான வீரர்கள் வாழும் நால்வகைப் பகுதிகளைப் பற்றியும் கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் ஐந்தாம் படை....?




# ஐந்தாம் படை

நேருஜி வடக்கெல்லையில் உள்ள காலிம்பாங்க் என்னும் ஊரை ஒற்றர்களின் கூடு என வர்ணித்தார்.

அவ்வூரில் எழுபத்தொரு வயதான சீனன் ஒரு திபேத்திய லாமாவைக் கொன்றுவிட்டதாய்த் தெரிய வருகிறது.

காலிம்பாங்கில் நிரந்தரமாக வசிப்போரைத் தவிர வேறு யார் செல்வதாயினும் முன் கூட்டியே சர்க்காரிடமிருந்து அனுமதி பெற வேண்டும் என்று அறிவிக்கப்பட்டது...

நாட்டின் பல்வேறு இடங்களில் உள்ள நமது துருப்பினரிடையே பரிமாறிக் கொள்ளப்படும் ரேடியோச் செய்திகளை அறிந்து கொள்ளச் சீனர்கள் சக்தி வாய்ந்த ஆறு ரேடியோ ஸ்தாபனங்களை எல்லைப்புறத்தில் நிறுவியுள்ளார்கள்...

போர் முனையில் நேரடியாகத்தொடர்பு கொள்ளாத, ஆயினும், வெற்றி தோல்விகளைப் பெருமளவுக்கு நிர்ணயிக்கிற மிக முக்கியமான இந்த ஐந்தாம் படை என்னும் சொல்லை நமது பழங்கால இலக்கியங்களில் காண முடியாது. சமீபகாலத்தில் தான் உருவான ஒரு சொல் இது. இருபத்தைந்து வருஷங்களுக்கு முன்னால் ஸ்பெயின் தேசத்தில் உள் நாட்டுக் கலகம் நடந்தது. அப்போது புரட்சியாளரின் சேனைக்குத் தலைமை தாங்கிய ஒரு ஜெனரல், "தலைநகர் மாட்ரிட்டை நோக்கி என்னுடைய நான்கு சைன்யங்கள் அணிவகுத்துச் செல்கின்றன. ஐந்தாம் படையினர் அந்த நகருக்குள்ளாகவே திரண்டு எழுவார்கள்!" என்று மார் தட்டினார்.

புரட்சியாளருக்குச் சாதகமாகத் தலைநகரிலே சதிச் செயல்களில் ஈடுபட்டு வந்தவர்களையே அவர்கள் ஐந்தாம் படையினராகக் கருதினர்.

இதன் பிறகு அன்னியரின் படையெடுப்பின் போது ஆக்கிரமிப்பாளருக்கு வழிவகுக்கும் விதத்தில் யுத்த முயற்சிகளுக்குத் தடையாக நாட்டுக்

குள்ளே பலவிதக் காரியங்களில் ஈடுபடுவோருக்கு அந்தப் பெயர் நிலைத்து விட்டது. இவர்கள் கலகங்களைக் கிளப்புவார்கள், பயத்தைத் தூண்டுவார்கள், அமைதியைக் குலைப்பார்கள். எதிரியின் பேரில் நாட்டு மக்களுக்கு அனுதாபம் பிறக்கச் செய்வார்கள். விரோதிக்குப் பக்கபலமாகத் தேசத்துக்குள்ளே பல சதிகளை ஒன்று திரட்டுவார்கள். வேவு பார்ப்பார்கள். உற்பத்தியைக் குலைக்கத் தொழிலாளர்களிடையே வீண் சச்சரவுகளை உருவாக்குவார்கள். டெலிபோன், தந்திக் கம்பிகளை அறுத்தல், தண்டவாளங்களைப் பெயர்த்தல். ஆயுத உணவுக் கிடங்குகள், தொழிற்சாலைகள் இவற்றை வெடிகுண்டு வைத்துத் தகர்த்தல் போன்ற நாச வேலைகளில் இறங்குவார்கள்; எதிரியின் அரசியல் கொள்கைகளைப் பிரசாரம் செய்து ஜனங்களுடைய மனங்களை விரோதியின் சார்பாகச் சாயுமாறு செய்வார்கள்.

ஐந்தாம்படையினரின் அலுவல்களுள் மிக முக்கியமானது வேவு பார்த்தல். எதிரியின்



உண்மைப் பலத்தைத் தெரிந்து கொண்டு விட்டால் பாதி யுத்தத்தை ஜெயித்தது போல்தான் என்பதைக் கூறவா வேண்டும்? இதற்காகத் தேர்ந்தெடுக்கப்படுகிறவன் வேவு பார்க்கும் கலையில் நன்கு பயிற்சி பெற்றுப் பலப் பரீட்சைகளிலும் வெற்றியடைய வேண்டும். முதலாவது தோற்றம். பார்த்தவுடன் சட்டென்று மனத்தில் பதிந்து விடக் கூடிய அம்சம் எதுவுமே அவனிடத்தில் இருக்கக் கூடாது. நாட்டு மக்களுடன் ஒன்றுபட்டு விடக் கூடிய சகஜமான தோற்றம் கொண்ட அவன் தாய்மொழியைப் போலவே அன்னிய மொழிகள் சிலவற்றையும் சரளமாகப் பேசும் ஆற்றல் படைத்திருப்பான். ஒற்றன் தன்னைப் பற்றிய சுய நினைவையே அடியோடு மறந்து தான் யாரைப் போல் நடிக்கிறானோ அந்தப் பாத்திரமாகவே மாறிவிட வேண்டியது அவசியம். அந்தக் கற்பனைப் பாத்திரத்தின் நடை உடை பாவனைகளை மட்டுமின்றித் தொழிலையும் கற்றுத் தேற வேண்டும். தவறிப் போய்க் கூடத் தன் சொந்த இயல்பை வெளிக்காட்டி விடக் கூடாது. இது எளிதில் கைவருகிற காரியமல்ல. பல மாதப் பயிற்சி தேவை. கதைகளில் வருவது போல் இவன்பாட்டுக்குக் காதல் வலைகளில் சிக்கிக் கொண்டால் அந்தக் கதாநாயகனைப் போல் இறுதி வெற்றி காண்பது என்பது சாத்தியமில்லை! இதற்கெல்லாம் இடமிருந்தாலும் இக்கட்டான நிலைகளிலிருந்து தன்னைக் காத்துக் கொள்ளத் திடமான தேகமும் தேவை. துப்பாக்கிப் பிரயோகம், ஜூடோ பிடி, ஜிஜுட்ஸு சண்டை போன்றவற்றில் திறமை மிக்கவனாய் ஒற்றன் விளங்குவான்.

திருட்டுத்தனமாகக் கட்டடங்களுக்குள் நுழைந்து இரும்பு அலமாரிகளை எவ்வாறு கள்ளத்தனமாகத் திறக்கலாம் என்பன போன்றவையும் அவனுக்கு அத்துபடியானவிஷயங்கள். அவசியம் நேருமானால் கொலை புரியவும், தப்பித் தவறி எதிரியிடம் மாட்டிக்கொள்ள உண்மைகளைக் கக்குமாறு அவன் சித்திரவதை செய்தால் தன் உயிரைத் தானே மாய்த்துக் கொள்ளவும் அவன் தயங்கமாட்டான்.

உலக யுத்தத்தின் போது கதைகளில் நாம் படிக்கக் கூடிய எல்லாவற்றையும் தோல்வியுறச் செய்யும் வகையில் பல அதிசய நிகழ்ச்சிகள் உண்மையாகவே நிகழ்ந்திருக்கின்றன. ஒரு முறை பீல்ட் மார்ஷல் மாண்ட்கோமரி யுத்தகளத்தில் சில நாட்களுக்கு இருக்க முடியாது போயிற்று. ஆனால் அவர் போர்முனையில் இருப்பதாகவே எல்லாரையும் நம்பச் செய்ய வேண்டியிருந்தது. இதற்காகப் பிரிட்டிஷ் துப்பறியும் இலாகாவினர் மாண்ட்கோமரியைப் போலவே தோற்றம் கொண்ட ஒருவரைத் தேடிப் பிடித்துப் பலமான பயிற்சி அளித்து அனுப்பி வைத்தனர். இந்த மோசடியை இறுதி வரையில் யாருமே கண்டுபிடிக்க முடியவில்லை! இவ்வாறு மாண்ட்கோமரியாக நடித்தவர் தமது அனுபவங்களைப் பற்றி எழுதிய நூல் உலகப் பிரசித்தி பெற்றது.

பிரான்ஸிஸ் பவர்ஸ் என்ற அமெரிக்க விமானி ருஷ்ய எல்லைக்குள் புகுந்து புகைப்



சென்னை லிப்டோ கம்பெனியின் பாகஸ்தர் திரு தி. ந. ச. வரதன் அவர்களுக்கும் சௌபாக்கியவதி பத்மாவதிக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது.



பிரதம காப்பி மார்க்கெட்டிங் அதிகாரி திரு ஜி. எஸ். சீனிவாசன் அவர்களின் புதல்வி சௌ. ஜயாவுக்கும் திரு துவாரகாநாத்துக்கும் விவாகம் நடந்தேறியது.

◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆◆

படங்கள் எடுத்ததும் அவர் விமானம் ருஷ்யர்களால் சுட்டு வீழ்த்தப்பட்டு அவர் கைது ஆனதும் சமீபத்திய நிகழ்ச்சிகள். உலக யுத்தத்தின் போது இம்மாதிரியாக விமானத்தில் இருந்தபடியே புகைப்படங்கள் எடுப்பதும் துருப்புக்களின் நடவடிக்கைகளைக் கவனிப்பதும் அன்றாடம் நடக்கும். இந்த ஒற்றர்களை ஏமாற்ற மாண்ட்கோமரி (அசல் மனிதர்) அபாரமான ஒரு யுக்தியைக் கையாண்டு வெற்றி பெற்றார்.

லாரிகளைப் போலவும், டாங்குகளைப் போலவும் பீரங்கிகளைப் போலவுமே அதே கனபரிமாணங்களின்படி பிரிட்டிஷார் அட்டையில் செய்து வைத்த பொம்மைகளை யுத்த கேந்திரத்தின் வடக்குப் பகுதியில் அந்த ஒற்றர்கள் பார்த்தார்கள். அவை நிலையாக இருந்தன. தெற்கேயோ உண்மையான லாரிகள் டாங்குகள் இவற்றின் போக்குவரத்துக் காணப்பட்டது. ஆகவே ஒற்றர்கள் தெற்கேதான் தாக்குதலுக்குத் தடபுடலான ஏற்பாடுகள் நடக்கின்றன வென்றும் வடக்கே நடமாட்டம் இல்லை என்றும் மேலதிகாரிக்குத் தெரியப்படுத்தினர். இரவோடு இரவாக மாண்ட்கோமரி வடக்கே இருந்த பொம்மைகளைத் தெற்கே கொணரச் செய்தார். தெற்கே இருந்த நிஜ வாகனங்கள் வடக்கே நகர்ந்தன. அந்தப் போர் முனையில் பிரிட்டிஷாருக்கு மகத்தான வெற்றி கிட்டியதில் அதிசயமென்ன?

வேவு பார்ப்போருக்கு இன்றியமையாத சாதனம் ரேடியோக் கருவி. யுத்த காலங்களில் எதிரியின் ஒற்றர்கள் நாடெங்கிலும் பல சக்தி வாய்ந்த ரேடியோ ஒலிபரப்புக் கருவிகளை வைத்துக் கொண்டு செய்திகளை அனுப்புவார்கள். இந்தக் கருவிகளைக் கண்டுபிடிக்க ஒரு சாதனம் இருக்கிறது. இச்சாதனம் ரேடியோ அலைகள் எந்தத் திசையிலிருந்து வருகின்றன என்பதைக் காண்பித்துவிடும். இந்தச் சாதனங்களைக் கொண்ட பல நிலையங்கள் ஒன்றுடன் ஒன்று தொடர்பு கொண்டால் அரசாங்க அனுமதியின்றி ஒலிபரப்படும் ரேடியோ அலைகள் எந்த ஊரிலிருந்து கிளம்பினாலும் கணக்காகக் கண்டுபிடித்து விடலாம். பின்னர் சிறிய அளவினதாக உள்ள திசை காட்டிச் சாதனங்களைக் காதில் வைத்துக் கொண்டு அவ்வூருக்குச் செல்வார்கள். ரேடியோ அலைகள் எந்த மூலைமுடுக்கிலிருந்து கிளம்பினாலும் இலகுவாக அவ்விடத்துக்குப் போய் ஒற்றர்களைக் கைது செய்வார்கள்.

செய்திகளை அனுப்ப ஒற்றர்கள் கையாளும் வேறு பல வழிகளும் உள்ளன. மேலெழுந்தவாரியாகப் பார்க்கும்போது குடும்ப விவகாரங்களைப் பகிர்ந்து கொள்வது போல் தோன்றும் கடிதங்களுக்குள் பயங்கர ரகசியங்கள் அடங்கியிருக்கும். விஷயமறிந்தோருக்குத்தான் அந்த வாக்கியத்தின் உட்பொருள் விளங்கும். வாக்கியத்தின் இறுதியில் வைக்கும் முற்றுப்புள்ளி போல் தோன்றும் ஒரு சிறு கறுப்புப் புள்ளியை மைக்ரொஸ்கோப்புக்கு அடியில் வைத்து இரு நூறு மடங்கு பெரிதாக்கி நோக்கினால் அதற்குள் ஒரு பெரிய அந்தரங்கக் கடிதமே அடங்கி யிருப்பது தெரியவரும். புகைப்பட நிபுணர் ஒருவரின் அரிய சாதனை இது என்பது புரியும்.

சென்ற உலக யுத்தத்தில் பங்கு பற்றிய நாடுகளுள் ஜெர்மனி ருஷ்யா ஆகிய இரு தேசத்தைச் சேர்ந்த ஒற்றர் படையினரே மிகச் சிறப்பாகச் செயலாற்றினார்கள்.

உலகம் முழுவதும் ஒப்புக் கொள்ளப்பட்ட பொதுவான யுத்த விதிகளின்படி சிப்பாயின் உடையில் இருக்கும் ஒருவனை — அவன் எதிரியைப் பற்றிய பல தகவல்களைச் சேகரிக்க முயன்றவனாக இருந்தாலும்கூட — ஒற்றன் என்று குற்றம் சாட்டித் தண்டிக்க முடியாது. ராணுவக் கைதியாகத்தான் அவனைக் கருத வேண்டும். மாறு வேஷத்தில் உலவினாலோ அல்லது தான் இன்னார் என்பதை மறைத்து வேறு ஒரு நபராக நடித்தாலோ தான் அவன் ஒற்றனாவான். அப்போதும்கூட எதிரியின் எல்லைக்குட்பட்ட பிரதேசத்தில் அவன் கைதாகி யிருக்க வேண்டும். அந்த எல்லைக்கு இப்பால் வந்து விட்டால் அவன் அந்தக் கணமே வேற்று நாட்டுப் பிரஜையாகி விடுகிறான். பகை நாட்டுப் போலீஸார் அவனைச் சிறைப் பிடிக்கலாகாது.

சரியான விதத்தில் கைதாக்கப்பட்டு ஒற்றனென்று நிரூபணமாகி விட்டால் அவனுக்குக் கிடைக்கக் கூடிய தண்டனை — யோசனை எதற்கு? மரண தண்டனைதான்!

# பால் நினைந்தூட்டும்...

தி. சா. ராஜு

"ஐயா உள்ளே இருக்கிறாரா?" என்று அறைக்கு வெளியே குரல் கேட்டதும் சண்முகம் பிள்ளை பத்திரிகை படிப்பதை நிறுத்தி விட்டுப் பணியாள் சின்னசாமியை விளித்தார். "வந்திருப்பவர்களை உள்ளே கூப்பிடு!"

இளைஞர் ஒருவரும் கூட ஒரு முதியவரும் அவருடைய அறைக்குள் நுழைந்து வணக்கம் தெரிவித்தனர். அவர் கட்டிக் காட்டிய ஆசனங்களில் அமர்ந்து கொண்டனர். சுமுகமான சூழ்நிலையில் உரையாடல் தொடங்கியது.

"இந்த ஆண்டு மாணவர்களின் எண்ணிக்கையை அதிகரிப்பதாக உத்தேசமா?" என்று சண்முகம்பிள்ளை வினவினார்.

முதியவர் மாணிக்கம் பதில் கூறினார். "அப்படி ஏதுமில்லை. இருப்பவர்களுக்கே இட வசதி பற்றவில்லை. நம்பிக்கையான பயிற்சி பெற்ற ஆசிரியர்களும் கிடைப்பதில்லை. எண்ணிக்கையை அதிகப்படுத்துவதை விட இருக்கும் மாணவர்களை அதிக சிரத்தையுடன் கவனிப்பது நலம் என்று தோன்றுகிறது!" ரமணர் இல்லத்தின் ஆண்டறிக்கையைப் பணிவுடன் மேஜையின் மேல் வைத்தார் மாணிக்கம்.

சண்முகம் பிள்ளை அறிக்கையைப் புரட்டினார். அவருடைய முகத்தில் திருப்திக் குறி நிலவியது. "நல்ல பணியைச் சிறந்த முறையில் செய்கிறீர்கள். இந்தத் தொண்டிலே நான் பங்கு பெற்றிருப்பதை என் பாக்கியமாகக் கருதுகிறேன்..." அறிக்கையின் ஒரு பக்கத்தில் பார்வையைச் செலுத்தியவர், 'இதென்ன மாதாந்திரக் கட்டணம் இரண்டு விதமாகப் போட்டிருக்கிறீர்கள்? வயது முதிர்ந்த மாணவர்களிடம் அதிகக் கட்டணம் வசூலிக்கிறீர்களா?"

அறிக்கையை வாங்கிப் பார்த்தார் மாணிக்கம். "அதுவா, அந்த ஐந்து ரூபாய் பாலுக்காக. சற்று வசதியாக உள்ள மாணவர்களுக்கு இரவில் பால் கொடுக்கிறோம். அவர்களுடைய பெற்றோர்களிடம் அதிகத் தொகையை வசூலிக்கிறோம்."

சண்முகம் பிள்ளையின் முகம் தொய்ந்து போனதை இருவருமே கவனித்தார்கள்.

"இல்லத்திலேயே மாடுகள் வைத்திருக்கிறீர்களா?" என்று கேட்டார் அவர்.

"ஆமாம், சிறிய பண்ணை ஒன்று வைத்திருக்கிறோம். இருபது பசுக்கள். பதினைந்து எருமைகள். அதில் கிடைக்கிற பால் போதுமானதாக இல்லை. வெளியிலிருந்தும் நாங்கள் வாங்குகிறோம்!"

சண்முகம்பிள்ளை எழுந்திருந்தார். "எனக்கு அவசரமாக ஒருவரைக் காண வேண்டியிருக்கிறது. நீங்கள் பக்கத்து அறையில் உள்ள நூல்நிலையத்தில் புத்தகம் பார்த்துக் கொண்டிருங்கள். இன்னும் ஒரு மணி நேரத்தில் திரும்பி வந்து உங்கள் காரியத்தைக் கவனிக்கிறேன்."

சண்முகம்பிள்ளையின் கார் புறப்படும் சத்தம் கேட்டு மாணிக்கமும் மற்றவரும் ஒருவரை ஒருவர் பார்த்துக் கொண்டனர். சென்ற ஐந்து ஆண்டுகளாகப் பிள்ளை அவர்கள் ரமணர் இல்லத்தில் தங்கி உயர்நிலைப் பள்ளியில் படிக்கும் ஏழை மாணவர்களுக்காக ஆயிரம் ரூபாய் நன்கொடை கொடுத்து வருகிறார். ஓராண்டு கூடக் கெடு தவறியது கிடையாது. சால்






ஜாப்பு சொன்னதும் இல்லை. இன்று என்ன ஆகிவிட்டது? மாணிக்கம் நூலக அறையின் மேலும் கீழும் நடந்தார்.

அவசர வேலை என்று புறப்பட்டு வந்த சண்முகம் பிள்ளை தம்முடைய தென்னந் தோட்டத்துக்கு அடுத்த நெடுஞ் சாலையில் காரை நிறுத்தினார். செங்கல் மதகைத் தாண்டி வைக்கோல் வேய்ந்த கூரைக் கட்டடத்துக்குள் சென்று சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார். கொட்டகையின் ஒரு மூலையில் புத்தக அலமாரி. அதனருகே ஆதி சங்கரரின் படம். அதற்குப் பக்கத்தில் ஒரு மான் தோல் ஆசனமும் இருந்தது. சண்முகம் பிள்ளை அலமாரியிலிருந்து புத்தகம் ஒன்றை எடுத்துக் கொண்டு நாற்காலியில் உட்கார்ந்தார். கண்கள் புத்தகத்தைப் பார்வையிட்டன. ஆனால் மனம் எங்கேயோ பின்னோக்கி அலைந்தது.

சிறிய அறை ஒன்றில் இரண்டு எழுது மேஜைகள். சுவரிலேயே அலமாரி பதித்திருக்கிறது. அதன் அடித்தட்டில் படுக்கை ஒன்று சுருட்டி வைக்கப் பட்டிருக்கிறது. மேல் தட்டில் புத்தகங்கள், கண்ணாடி, சீப்பு, மசிக்கூடு, பேனா, பென்சில். அந்தச் சிறிய அறையில் இரண்டு பேர்கள் குடியிருக்கிறார்கள். இரவு மணி எட்டரை. கணகண வென்று மணி அடிக்கிறது. ஏதோ எழுதிக் கொண்டிருந்த சிறுவன் அமுதன் எழுந்து நின்று சோம்பல் முறிக்கிறான். ஹாஸ்டல் வார்டன் அந்தப் பக்கம் வந்தவர், "பாலுக்கு மணி அடித்தாகி விட்டதே. அமுதா போகவில்லையா?" என்று வினவுகிறார்.

"இதோ போகிறேன் சார்." பையன் உணவுக் கூடத்துக்குப் புறப்படுகிறான். "நீ போகவில்லையா சண்முகம்?" என்று வார்டன் சண்முகத்தைப் பார்த்துக் கேட்கிறார்.

"அவனுக்குப் பால் கிடைக்காது" என்று அலட்சியமாகச் சொல்லி விட்டுப் போகிறான் அமுதன். சண்முகம் சுவரின் பக்கம் முகத்தைத் திருப்பிக் கொள்கிறான். அங்கே ஒரு சிவ பெருமானின் படம். அவரருகில் ஒரு காளை மாடு நிற்கிறது. சண்முகம் தன் சொந்த வீட்டைப் பற்றி நினைத்துக் கொள்கிறான். வீட்டில் நுரை

யோடு பால் கிடைக்கும். மறுபடியும் விடுமுறையில் சென்றால்தானே அவனுக்கு அந்த வசதி உண்டு?

சண்முகம் தங்கியிருந்த ஹாஸ்டலிலும் மாணவர்களுக்குப் பால் கொடுத்தார்கள். ஆனால் அதற்கு உபரிக் கட்டணம் செலுத்த வேண்டியிருந்தது. அவனுடைய தந்தையிடம் அந்த அளவுக்கு வசதி இல்லை. பென்சிலினும் நோட்டில் கோடு கிழிக்கும்போது கையில் பால் தம்ளருடன் உள்ளே வருகிறான் அமுதன்.

''சண்முகம்! பாதிப் பாலை நீ சாப்பிடு. எனக்கு வயிறு சரியாக இல்லை!'' என்று அவன் கூறுகிறான்.

''வேண்டாம் அமுது!'' அரைமனத்தோடு பதில் அளிக்கிறான் சண்முகம். வற்புறுத்திப் பாலைக் கொடுக்கிறான் அமுதன். தினமும் இதே வழக்கம். சில நாட்கள் இப்படியே கழிகின்றன.

ஒரு நாள் இரவு பால் குடிக்கும் நேரம். சண்முகம் மைதானத்திலிருந்து திரும்பித் தன்னறைக்கு வருகிறான். அங்கே அவனுடன் சில நண்பர்கள் பேசிக் கொண்டிருக்கிறார்கள். தனக்கென்று கொண்டு வந்த பாலில் பாதியைச் சண்முகத்தின் தம்ளரில் ஊற்றி வைக்கிறான் அமுதன்.

''யாருக்கடா இது?'' நண்பன் கோபு அமுதனைக் கேட்கிறான்.

''நான் ஒரு நாய் வளர்க்கிறேன். அதற்குச் சண்முகம் என்று பெயர்!'' அமுதன் கூறியதைக் கேட்டு நண்பர்கள் நகைக்கிறார்கள். அப்போதே உள்ளே நுழைந்த சண்முகத்தின் உடல் பதறுகிறது. 'யாரடா நாய்?'' என்று முட்டியை உயர்த்துகிறான் சண்முகம்.

''உன்னை யாரடா சொன்னது? நான் கொடுக்கும் பாலைக் குடிக்கும் பிராணியைச் சொன்னேன்'' என்றான் அமுதன் கேலியாக. மாணவர்கள் கைகொட்டிச் சிரிக்கிறார்கள். சண்முகம் அமுதனின் மேல் பாய்கிறான். கண்முகம் தெரியாமல் அவன் முகத்தில் குத்துகிறான். மாணவர்கள் அவர்களை விலக்குகிறார்கள். ஹாஸ்டல் வார்டன்வரையில் செய்தி எட்டி விடுகிறது.

மறு நாள் ரசாயன வகுப்பு. கண்ணாடிப் பெட்டிக்குள்ளிருக்கும் தராசின் முள் இடமும் வலமும் அசையும் அளவை நோட்டில் குறித்துக் கொள்கிறான் சண்முகம். பள்ளிச் சேவகன் பெரியசாமி உள்ளே வந்து விட்டுலே எலித்தொந்தரவு பற்றிச் சொல்லவே, பரிசோதனைச்சாலை உதவியாளர் கடுமையான பாஷாணத்தைக் கொடுக்கிறார். பிறகு அவர் அந்தப் பாஷாணமுள்ள நீலக் குப்பியைத் திரும்ப வைக்கும் இடத்தைக் கவனமாகப் பார்க்கிறான் சண்முகம். அவனுடைய இதயம் வெகு வேகமாக அடித்துக் கொள்ளுகிறது.

இரவு மணி எட்டரை. தன் அறையில் படிப்பது போல் பாவனை செய்து கொண்டிருக்கிறான் சண்முகம். பாலுக்காக மணி அடிக்கிறது. பல பையன்கள் உணவுக் கூடத்துக்குச் சென்று திரும்புகிறார்கள். சமையற்கார அப்பு அறையினுள் நுழைகிறான்.

''அமுதன் எங்கே சண்முகம்?''

''பால் வாங்கிக் கொண்டு சினிமாவுக்குப் போயிருக்கிறான்'' என்று சண்முகத்திடமிருந்து பதில் வந்தது.

''இந்தப் பாலை அவனுடைய அலமாரியில் வைத்து விடுகிறேன். அவன் வந்ததும் சாப்பிடச் சொல்லு!'' பால் தம்ளரை அலமாரியில் வைத்துவிட்டுத் திரும்புகிறான் அப்பு.

அறையின் கதவைத் தாழிட்டுக் கொண்ட சண்முகம் தான் ரசாயன வகுப்பிலிருந்து கொண்டுவந்திருந்த மருந்துப் பொட்டலத்தை எடுத்துப் பார்க்கிறான். ஒருகணம் தடுமாற்றம். பிறகு அதிலிருந்த பொடியைப் பாலுடன் கலந்து முன்போலவே மூடிவைத்துவிடுகிறான். விளக்கு அணைகிறது. நேரம் கழிகிறது.

ஹாஸ்டலில் ஒரே களேபரம். அமுதன் கண்கள் மேலே செருகித் தரையில் கிடக்கிறான். அவன் பக்கத்தில் தலைமை ஆசிரியர் வார்டன், உபாத்தியாயர் எல்லோரும் நிற்கிறார்கள். அமுதன் பேசவே இல்லை. 'ஐயோ! என் மகனைக் கொன்னுபோட்டாயே'' என்று பால் தம்ளரைச் சண்முகத்தின் மேல் வீசுகிறாள் அமுதனின் தாயார். 'ணங்' என்று அவன் மேல் விழுகிறது பால் குவளை.

சண்முகம் விழித்துக் கொண்டான். குறை நிலவொளியில் பூனை ஒன்று ஜன்னல் வழியே தாவுவதையும் அது தள்ளி விட்டுப் போன தம்ளர் தன் மீது விழுந்து அறையெல்லாம் பால் சிந்திக் கிடப்பதையும் பார்க்கிறான். விளக்கை ஏற்றி விட்டு வேங்கடாசலபதியின் படத்தின் முன் நின்று கன்னத்தில் போட்டுக் கொள்கிறான் சண்முகம். அவனுடைய உடல் வியர்த்துவிட்டிருக்கிறது. 'சே, என்ன பயங்கரம்!'

அறைக் கதவை யாரோ தட்டுகிறார்கள். நடுங்கிய கைகளுடன் போய்க் கதவைத் திறக்கிறான் சண்முகம்.

''அடடா! பால் கொட்டிப் போய்க் கிடக்குதே! நீயாவது குடித்திருக்கக் கூடாதா சண்முகம்?'' சினிமாவிலிருந்து திரும்பிய அமுதன் வினவுகிறான். சண்முகத்தின் கண்களிலிருந்து களகளவென்று நீர் பெருகுகிறது.

மறு நாள் ஹாஸ்டல் தோட்டி செத்துக் கிடந்த பூனை ஒன்றை முனிசிபாலிடி வண்டிக்குள் வீசியபோது சண்முகத்தின் உடல் நடுங்கியது.

நெடுஞ்சாலையில் சென்ற மாட்டு மந்தை எழுப்பிய ஒலி சண்முகம் பிள்ளையின் சிந்தனையைக் கலைத்தது. சிந்தனை கலைந்ததும் காரில் வீடு திரும்பினார்.

சேமிப்பு நிதியின் கணக்குப் புத்தகத்தை எடுத்துப் பார்த்தவாறே ரமணர் இல்லத்தைச் சேர்ந்தவர்கள் இருவரையும் சண்முகம் பிள்ளை தம் அலுவலறைக்கு அழைத்தார்.

''உங்களைக் காக்க வைத்ததற்காக மன்னிக்க வேண்டும். ஒரு விஷயம். மானேஜர் ஐயா, ஹாஸ்டலில் தங்கியிருக்கும் எல்லாப் பிள்ளைகளுக்குமே இரவில் பால் கொடுப்பதாக இருந்தால் அதிகம் எவ்வளவு செலவாகும்?''

மானேஜர் மாணிக்கம் தம் உதவியாளரை நோக்கினார். ''இன்னும் ஐந்நூறு ரூபாயாவது வேண்டியிருக்கும்!''

''அப்படியானால் எல்லாப் பிள்ளைகளுக்குமே பால் கொடுக்க ஏற்பாடு செய்யுங்கள். என்ன, புரிகிறதா?'' என்றார் சண்முகம்.

வழக்கத்துக்கு மேல் அதிகமாக ஐந்நூறு ரூபாய்த் தொகைக்கு உண்டியலைப் பெற்றுக் கொண்ட மாணிக்கத்துக்கு உண்மையிலேயே ஒன்றும் புரியவில்லை.

ஆதரவுடன் சீராட்டி

# ஆஸ்டர்மில்க்

பாலூட்டி ...

உங்கள் ஆசைக் கண்மணியின் பாக்கியம்: ஆஸ்டர்மில்க் அளிக்கும் ஆரோக்கியம். காரணம், தாய்ப் பாலுக்கு நிகரானது ஆஸ்டர்மில்க். பரிசுத்தமான பாலிலிருந்து தயாரிக்கப்பட்டுள்ள ஆஸ்டர்மில்க், பாப்பாவின் பச்சிளம்ஜீரண சக்திக்கேற்பப் பிரத்தியேகமாகப் பக்குவப்படுத்தப்பட்டுள்ளது. தவிர, பற்களும், எலும்புகளும் திடவளர்ச்சி பெறுவதற்கான வைட்டமின் 'டி'யும் இரத்த சோகை தட்டாமல் காப்பதற்கான அயச் சத்தும் அதில் சிறப்புறச் சேர்க்கப்பட்டுள்ளன.




இலவசம்: 'ஆஸ்டர்மில்க் புத்தகம்' (ஆங்கிலப்பிரதி)... விரிவுமிக்க, குழந்தைப் பராமரிப்பு நூல்...தபால் செலவுக்காக 50 ந. பைசா தபால் வில்லைகள் இணைத்து எழுதுக: ஆஸ்டர்மில்க், தபால் பெட்டி எண் 2420, சென்னை-2.

OS.10-X51-M. TM



## அத்தியாயம் 32

# நெருப்புத் தீண்டியது!

நெருப்பைத் தீண்டியவனைப் போல கையை உதறினன் வடிவேலு. இல்லை, நெருப்புத்தான் தன்னைத் தீண்டியிருக்கிறது என்பதைப் புரிந்து கொள்ளச் சற்று நேரம் பிடித்தது அவனுக்கு. பழைய நாட்களைப் பற்றிய சிந்தனையில் மூழ்கியவன் தன் இரு விரல்களுக்கிடையில் பற்றியிருந்த சிகரெட்டை அடியோடு மறந்து போக, அதன் நுனியில் இருந்த தணல் கொஞ்சம் கொஞ்சமாய்ப் புகையிலையைச் சாம்பராக்கியபடியே நெருங்கி வந்து அவன் விரலையும் பதம் பார்த்து விட்டது.

அன்று தான் நேரடியாகப் பங்கு பற்றிய சம்பவங்களுக்குப் பின்னணியில் என்னென்னவெல்லாம் நடந்திருக்கும் என்று யோசித்தான் வடிவேலு. ஊகிப்பது அவனுக்குச் சிரமமாக இல்லை. சக்குவைச் சிங்கப்பூருக்குக் கடத்திப் போகும் திட்டத்துக்கு ஜமாவின் மனைவி தடையாக இருந்திருப்பாள். பழி பாவத்துக்கு அஞ்சிய அவளுக்கு அளவுக்குச் சற்று அதிகமாகவே தூக்க மருந்தைக் கொடுத்து மயங்கிக் கிடக்கச் செய்திருப்பான் ஜமால். பின்னர் அவளுடைய புடவை ஒன்றினைச் சக்குவிடம் தந்து அதனை அணியுமாறு சொல்லியிருப்பான். தன் கண்ணெதிரே மாட்டு வண்டியிலேற்றி அவளை அழைத்துப் போனவன் பின்னர் ரயிலேறி நாகைப் பட்டினத்தை அடைந்திருப்பான். அங்கு ஏதேனும் ஒரு விடுதியில் அவள் தங்குவதற்கு ஏற்பாடு செய்திருப்பான். கர்ப்பிணியாக இருந்த தன் மனைவியை விட்டுப் பிரிய ஜமாலுக்கு மனம் வந்திருக்காது. ஆகவே சக்குவைப் பத்திரமாய் இருக்குமாறு கூறி விட்டுத் தேனூர் திரும்பியிருப்பான். யார் கண்ணிலும் படாமல் தன் வீட்டுக்குப் போய் மனைவியைத் தேடியிருப்பான். அங்கே அவளைக் காணும் என்றதும் பிறந்தகம்தான் போயிருப்பாள் என்பதாகத் தீர்மானித்துக் கொண்டு அவள் சொந்த ஊருக்குச் சென்றிருப்பான். அவளை நல்ல வார்த்தைகள் சொல்லிச் சமாதானப்படுத்தித் தன் பின்னேடு மலாயாவுக்குக் கப்பலேற சம்மதிக்க வைத்திருப்பான். மூவருமாக இங்கு வந்து சேர்ந்திருக்கிறார்கள்.

ஆரம்பத்தில் நினைத்தது போல் சிங்கப்பூர் செல்லாமல் பினங்கிலேயே குடியேறியிருக்கிறார்கள். மைக்கேலின்

நட்பும் கிடைத்திருக்கிறது. மகன் பிறந்த சுபவேளையின் மகிமையினால் தானோ என்னவோ மைக்கேலின் யோசனைப்படி ஜமால் தொடங்கிய தொழிலும் நல்ல அபிவிருத்தியைக் கண்டிருக்கிறது. பின்னர்தான் அந்தத் தொழிற்சாலையைத் தன் கரங்களாலேயே தகர்க்க வேண்டும் என்கிற அரசாங்க உத்தரவு பேரிடியாக அவன் தலையில் விழுந்து பைத்தியமே பிடிக்கச் செய்து விட்டது. இதெல்லாம் சரிதான். ஆனால் சக்கு? அவள் என்ன ஆனாள்? அவனுடன் சேர்ந்து ஒரே வீட்டில் வாழ ஜமாலின் மனைவி ஆரம்பத்திலிருந்தே ஒப்புக் கொண்டிருக்க மாட்டாள் என்று முடிவு கட்டினால் அது தவறாகாது. அப்படியானால் அவள் வேறெங்கேயேனும் தனியாக வசித்துக் கொண்டிருக்க வேண்டும். எங்கே? எங்கேயாக இருந்தால் நமக்கென்ன? எனக்கும் அவளுக்குமிடையில் உருவான தொடர்பெல்லாம்தான் கடவுள் புண்ணியத்தில் அறுபட்டுப் போய் விட்டதே! இனி அவள் எக்கேடு கெட்டால் எனக்கென்ன? ஆயினும் அவ்வளவு கபடமாக அவளையும் அவள் எனக்குச் செய்து விட்ட துரோகத்தையும் எப்படி மறந்து விட முடியும்? சே! இந்த நினைவுகளெல்லாம் வேண்டாம் என்று பார்த்தாலும் நடக்காது போல் இருக்கிறது! மனத்திலிருந்து மோசமான மனிதர்களைப் பற்றிய மட்டமான எண்ணங்களை அகற்ற வேண்டுமானால் அதற்கு ஒரு வழிதான் உண்டு. அது நீ மேற்கொண்டுள்ள காரியத்தில் முழுக் கவனத்தையும் செலுத்துவதுதான்; யுத்த அரங்கத்தில் தீவிரமாகப் பணியாற்றுவதுதான். இப்போது சீக்கிரமாக ராணுவ முகாமுக்குத் திரும்பினால் மிகவும் நன்றாகத்தான் இருக்கும். ஆனால் இதோ வந்து விடுகிறேன் என்று கூறிச் சென்ற மைக்கேல் அரை மணி ஆகியும் இன்னும் திரும்பவில்லையே? எங்கே தொலைந்து போனான்?'

மேலும் பத்து நிமிஷங்களை மிகுந்த சிரமத்துடன் ஒரு மாதிரியாகக் கழித்த பிறகு அந்த வீட்டின் முன் வாசல் கதவைத் திறந்து மூடும் சத்தம் கேட்டது. வடிவேலு திரும்பினான். யாரோ ஒருத்தியைக் கையைப் பிடித்துத் தரதரவென்று இழுத்துக் கொண்டு மைக்கேல் படிகளில் வேகமாக இறங்கிச் சாலையைப் பார்க்க ஓடி வருவதைக் கண்டான். அவர்கள் நடையிலே ஒரு துள்ளல் இருந்தது. சிரிப்பிலே குதூகலம் குதியிட்டது. விமானப் படையெடுப்புக்கு அஞ்சி அரசாங்கத்தார் மின்சார சப்ளையைக் குறைத்திருந்ததால் செத்தும் சாகாததுமாய் ஊசலாடும் உயிருடன் எரிந்த தெரு விளக்கின் சோக ஒளி அவள் ஒரு நவநாகரிக மங்கை என்னுமளவுக்கு எடுத்துக் காட்டி உணர்த்தியது. ஷிபான் போன்ற ஒரு மெல்லிய சேலையை அணிந்திருந்தபோதிலும் கேச அலங்காரம் அவள் ஓர் ஆங்கிலோ இந்தியப் பெண்மணியாக இருக்கலாம் என்று எண்ண இடமளித்தது.

'சரிதான்!' என்று தனக்குள்ளாகவே சிரித்துக் கொண்டான் வடிவேலு. 'இதோ வந்து விடுகிறேன்' எனக் கூறிச் சென்றவனுக்கு எதனால் திரும்பி வர உண்மையில் அரை மணி நேரத்துக்கும் மேலாயிற்று என்பதை அவன் எளிதில் புரிந்து கொண்டான். 'பெண்ணொருத்திக்கு வெளியே கிளம்ப ஏற்றவாறு தன்னைச் சிங்காரித்துக் கொள்ள அரைமணியாவது ஆகாதா என்ன?'

காரை விட்டுக் கீழே இறங்கிக் கதவைத் திறந்துவிட வடிவேலு தயாராக இல்லை. கடமையைச் செய்வதில் அவனுக்குத் தைரியமில்லைதான். 'ஆனால் இப்போது ராணுவ காரியமாக மைக்கேல் புறப்படவில்லையே? காதல் வீதிகளில் இறங்கி விட்டவனுக்குத் தான் காரோட்டிப் போவதே பெரிய காரியம்!'

பின்புறத்தில் அவளுடன் ஏறி உட்கார்ந்து கொண்ட காப்டன், முன்னுக்குச் சாய்ந்து வடிவேலுவின் தோளுக்கு மேலாக எட்டிப் பார்த்து, ''ஸ்விம்மிங் கிளப்புக்கு விடு'' என்றான். அந்தச் செயற்கை நீச்சல் குளத்துக்குச் சென்றடையும் வழியையும் விளக்கிய பிறகு ஆசனத்தில் பின் நோக்கி நழுவினான். அவன் காதோடு காதாக அவள்ஏதோ கூறக் கலகல வென்ற நகையொலி அந்த வாகனத்தை நிறைத்தது. மோட்டார்



காரினுள்ளே நடப்பன குறித்துத் தன்னைக் குருடாக்கிக் கொண்டு தன் முதுகுப் புறமாகவோ அல்லது எதிரேயிருந்த நிலைக்கண்ணாடியின் பக்கமோ பார்வையைச் செலுத்தாமல் சாலையை மட்டும் கவனித்து வண்டியை ஓட்டிப் போனான் வடிவேலு.

நீச்சல் குளத்தினருகே அவன் மோட்டாரை நிறுத்தியதும் அவர்கள் இருவரும் கீழே இறங்கி விளையாடிப் பொழுதை வீணாக்க விரும்பாதவர்கள் போல் ஓடினார்கள். நிசப்தமான அவ்விரவில் நிர்மானுஷ்யமான அந்தப் பிரதேசத்தில் மைக்கேலினுடைய கனமான ராணுவ பூட்ஸ்ஸும் மெல்லியலாளின் குதிகாலை உயர்த்தித் தாங்கும் ஸாண்டல்களும் ஆண்மையையும் பெண்மையையும் பிரதிபலிக்கும் ஒலிகளை எழுப்பியது தெளிவாகக் கேட்டது.

நகரை விட்டு வெகு தூரத்தில் ஒதுக்குப்புறமாய் அமைந்திருந்த அந்த நீச்சல் கிளப்பைச் சுற்றிலும் ஆரவம் ஏதுமில்லை. அங்கு வரக்கூடிய உயர் வகுப்பைச் சேர்ந்தவர்களில் பெரும்பான்மையோர் பினாங்குத் தீவை விட்டு வெளியேறி இருப்பார்கள் என்பதோடு எஞ்சியுள்ளோரும் சிங்கைக்குத் தப்பிச்செல்ல எந்தக் கப்பலில் இடம் பிடிக்கலாம் என்று பார்ப்பதில்தான் மும்முரமாய் இருப்பார்கள். அந்தகாரம் கவிந்த அன்றையச் சூழ்நிலையில் உல்லாசமாக நீச்சலடித்துப் பொழுது போக்க யாருக்கு மனம் வரும்? மரணத்தின் பிடியிலிருந்து எப்படியோ தங்களைப் பாதுகாத்துக் கொள்ள ஓட்டமெடுப்போருக்கும் மைக்கேலைப் போன்ற சாவை எதிர்நோக்கிச் சென்றுகொண்டிருப்போருக்கு மிடையே வித்தியாசம் உண்டுதான். என்றாலும் இப்படியே இன்னும் எவ்வளவு நேரம் இங்கே காத்திருக்கும்படி நேரிடுமோ, தெரியவில்லையே? இவ்வாறு வடிவேலு தன் மனத்துக்குள்ளாகவே அலுத்துக் கொண்டான்.

காற்று வருவதற்காகக் காரின் கதவைத் திறந்து வைத்துக் காலை வெளியே தொங்கப் போட்டபடி உட்கார்ந்திருந்த அவன் பாதங்களுக்கருகே இப்போது சிகரெட் துண்டுகளின் ஒரு சிறு குவியலே கிடந்தது. எனினும் நீச்சல் கிளப்பின் நெடிய மதில் சுவருக்கு அப்பாலிருந்து நீரைக் கரங்களால் அளைந்து கும்மாளம் போடும் சத்தமும் குதூகலத்வனியில் ஆணும் பெண்ணுமாய்ச் சேர்ந்து நகைக்கும் ஓசையும் நின்றபாடில்லை. வடிவேலு அன்று மாலைப் பொழுதுவரை பகைவனுடன் போராடிச் சலித்திருந்தான். கடமையில் துஞ்சுவதற்கு அவனுக்கு விருப்பமில்லை. என்றாலும் அசதி மிகுதியில் அவனையுமறியாமல் அவன் இமைகள் கனத்து மூடிக் கொண்டன. சோர்வுற்றிருந்த அவன் உடலுக்கு உறக்கத்தின் அரவணைப்பு மிகுந்த ஆறுதலை அளித்தது....

எவ்வளவு நேரம் இப்படிக் காரினுள்ளேயே முன் ஸீட்டில் படுத்துத் தூங்கினேம் என்பதொன்றும் அவனுக்குத் தெரியாது. மைக்கேல் அவன் தோளைத் தட்டி அவனை எழுப்பிக் காரைக் கிளப்புமாறு கூறியபோது, அவ்விருவரும் ஏற்கனவே காரின் பின்புறத்தில் ஏறி அமர்ந்திருந்தார்கள். "இவளை வீட்டிலே இறக்கி விட்டு விட்டு நாம் முகாமுக்குத் திரும்ப வேண்டியதுதான்" என்று மைக்கேல் வாய் திறந்து கூறிய சமயம் யாருமே தவறிழைக்காது இன்னதென்று கண்டுபிடித்து விடக் கூடிய ஒரு வாடை அங்கு பரவியது.

மோட்டார் கார் கிளம்பி வேகமாகச் சென்றது. அவள் வீட்டை நெருங்குகிற சமயத்தில், "ஏய்! எழுந்திரு! சரிதான்! எல்லாரும் இப்படி ஒரே தூக்கமாய்த் தூங்க ஆரம்பித்து விட்டீர்களே!" என்றான் மைக்கேல்.

"என்னைப் பற்றியா சொன்னீர்கள்?" என்று மன எரிச்சலைக் கட்டுப்படுத்த முடியாமல் தலையை ஒடித்துப் பின்புறம் நோக்கியபடி கேட்டான் வடிவேலு. மைக்கேலின் நெஞ்சில் முகம் புதைத்து அவள் நித்திரையில் ஆழ்ந்திருப்பதையும் அவன் அவளுடைய தோள்களைப் பற்றி உலுக்கி விழிப்படையச் செய்ய முயலுவதையும் கண்டான்.

பார்வை மீண்டும் சாலையில் நிலைக்க, "இதற்குத்தான் அவசர வேலை என்று சொல்லிப் பினாங்குக்குக் கிளம்பினீர்களா?" என்று வடிவேலு விஷமத்தனமாகக் கேட்டான். "ஏதோ முக்கியமானதும், ரகசியமானதுமான ராணுவ அலுவலாகப் புறப்பட்டீர்கள் என்று நினைத்தேன்."

"வடிவேலு! இவளைக் கவனித்து விட்டாயா நீ?"

அவன் குரலில் கலவரத்தின் சாயல் இருப்பதாகப் பாவித்துக் கொண்ட வடிவேலு, "அடடா! நான் எதையுமே பார்க்கவில்லை; எதையுமே கேட்கவுமில்லை; அதனால் ஒன்றுமே பேசப் போவதுமில்லை. பயப்படாதீர்கள்!" என்றான். 'நம்பகமான ஓர் ஆள் வேண்டும்; என்ன நடந்தாலும் அவன் அதிசயப்படக் கூடாது' என்றெல்லாம் முன்னெச்சரிக்கையுடன் சொல்லித் தானே என்னை அழைத்து வந்தீர்கள்?

# நரம்புத் தளர்ச்சி

உள்ளச் சோர்வு மற்றும் உடல் பலவீனம் இவைகளைப் போக்கி நல்ல ஆரோக்கியத்தை அளிக்கக்கூடிய ஒரு சிறந்த டானிக்



அறிகுறிகள்

★ நரம்புத் தளர்ச்சி, பலவீனம்
★ வேலை மிகுதியால் ஏற்படும் களைப்பு, உடல் தளர்ச்சி
★ உற்சாகமின்மை & ஞாபகக் குறைவு
★ சோகை, ஆபரேஷன் மற்றும் நீண்ட நாள் வியாதிக்குப் பின்பு ஏற்படும் பலக்குறைவு
★ ஆழ்ந்த தூக்கமின்மை




57 ஆண்டு அனுபவத்தை பின்னணியில் கொண்டது




ஹக்ஸ்லியின்

## நெர்-விகர்

டானிக்

ஃபாஸ்பேட்டுக்கள், விட்டமின்கள் உடன் கூடிய கிளிஸிரோ பாஸ் பேட்டுக்களை மூலப் பொருளாகக் கொண்டது.

**ஹக்ஸ்லி & கோ., (இந்தியா)**
25, தலால் தெரு, த. பெ. தெ. 1992, போர்ட், பம்பாய்-1

---

எல்லா நரம்பு வலிகளுக்கும், கீல் வாயுவினால் ஏற்படும் உபாதைகளுக்கும்

ஹக்ஸ்லியின் **வின்டோஜெனோ**

கீல் வாயு, முதுகு, இடுப்பு பிடிப்பு, மற்றும் நரம்பு வலி மார்ச் சளி போன்ற உபாதைகளுக்கு உடனடியாகக் குணமளிக்கும்

எல்லா கெமிஸ்டுகளிடமும் கிடைக்கும்




**ஹக்ஸ்லி & கோ. (இந்தியா)**
25, தலால் தெரு, பம்பாய்-1

தென்னிந்தியாவுக்கு விநியோகஸ்தர்கள்

பிடில்லையர் & கோ. (இந்தியா) பிரைவேட் லிமிடெட்
20, அங்கப்பநாயக் தெரு, சென்னை

நாதர் & கோ.
86, மருவியப்பநாயக் தெரு, சென்னை

அப்படியிருக்க நான் உங்களைக் காட்டிக் கொடுத்து விடுவேனா? உங்கள் பக்கத்திலிருப்பது ஆணா, பெண்ணா, மனிதனா, மிருகமா என்று எதுவுமே எனக்குத் தெரியாது.

இவ்வாறு வேடிக்கையாகவும் பாதி ஏளனமாகவும் கலந்து பேசியவாறே அவள் வீட்டு வாசலெதிரே காரை நிறுத்தினான் வடிவேலு. மைக்கேல் கதவைத் திறந்து பிடிக்க, அவள் கீழே இறங்கினாள். அரைத் தூக்கத்தில் தட்டுத் தடுமாறியபடி நடந்து போகும் அவளை அசுவாரஸ்யத்துடன் பார்த்த வடிவேலு, ''எங்கேயாவது தடுக்கி விழுந்து வைக்கப் போகிறாள்'' என்றான்.

மைக்கேல் அவளைப் பின்தொடர்ந்து சென்று பற்றி அணைத்துப் போய் வீட்டினுள்ளே சேர்த்து விட்டுத் திரும்பினான். வடிவேலுவுக்குப் பக்கத்திலேயே இப்போது அமர்ந்து கொண்டான்.

## அத்தியாயம் 33

# உள்ளம் புகைந்தது!

பினாங்குத் தீவின் படகுத் துறையை மோட்டார் கார் சென்றடையும் வரை மௌனமாக வந்த மைக்கேல், நீராவிப் படகுக்குள் காரைச் செலுத்தியானதும், ''நீ அவளைச் சரியாகப் பார்க்கவில்லையல்லவா?'' என்று மறுபடியும் கேட்டான். வடிவேலுவுக்குச் சிரிப்பே வந்துவிட்டது. ''இதெல்லாம் உங்கள் சொந்த விஷயம். நான் தலையிடப் போவதில்லை.''

''நீ ஒரு நாடகக்காரியைப் பற்றி இன்று மாலை விசாரித்தாயே நினைவிருக்கிறதா?'' என்று கேட்டான் மைக்கேல்.

''ஆமாம்.''

''அவள்தான் இவள்!''

இந்த வார்த்தைகள் வடிவேலுவைச் சற்று நேரம் அப்படியே வெலவெலத்துப் போய் ஸ்தம்பிக்கச் செய்து விட்டன. சிந்தனையும் செயல்படாது அந்தச் சமயம் இருண்டு விட்டது. ஆரம்பத்தில் ஏற்பட்ட அதிர்ச்சி சற்று நீங்கிய பின்னர் அவன் உதடுகள் 'வஞ்சகி! பாதகி! கிராதகி! சண்டாளி!' என்றெல்லாம் அவளைத் திட்டின. 'அன்று தன் கண்ணெதிரே ஒருவனுடன் ஓடிப் போனாள். இன்று சாகசச் செயல்களின் சிகரத்தையே எட்டிப் பிடித்து விட்டான். தன்னை வெளியே நிறுத்தி வைத்து விட்டு இன்னொருவனுடன் சல்லாபித்திருக்கிறாள். மைக்கேல் அவளுடன் தொடர்பு கொண்டிருப்பான் என்று எதிர்பார்க்காததும், அவளுடைய நவீனமான அலங்காரத் தோற்றமும் இருளும் அவளை இன்னாரென்று அடையாளம் கண்டு கொள்ள முடியாது ஏமாற்றி விட்டன!'

வடிவேலுவினால் இந்த அவமானத்தைத் தாங்கவே முடியவில்லை. அவன் மேனியெல்லாம் தகித்தது. சட்டென்று அவன் கோபமெல்லாம் பக்கத்திலிருந்த காப்டன் மீது பாய்ந்தது. பற்களை நறநறவென்று கடித்த அவன் படகு அக்கரையை அடையும் வரையில் மிகுந்த சிரமத்துடன் தான் வாய்மூடி மௌனியாக இருக்கத் தீர்மானித்தான்.

ஆனால் மீண்டும் காரின் சக்கரங்கள் சாலையைத் தொட்டதுதான் தாமதம், அது பத்து மோட்டார்களின் சக்தியை ஒன்று திரட்டித் தன்னுள் அடக்கிக் கொண்டது போல் பிய்த்துக் கொண்டு புறப்பட்டது. நகர்ப்புறத்தையெல்லாம் தாண்டி வாயுவேக மனோவேகமாகப் பறந்தது. இருபுறமும் காடுகள் இப்போது அடர்ந்திருந்தன. மனித சஞ்சாரமற்ற பிரதேசம். இருள் சூழ்ந்திருந்தது.

''வடிவேலு! நீ மனத்துக்குள் என்ன நினைக்கிறாய் என்பது எனக்குப் புரிகிறது'' என்றான் மைக்கேல். ''அவள் உனக்குச் செய்து விட்ட அநீதிக்கு நீ என்னிடம் பழி வாங்க எண்ணுகிறாய். இந்தக் காரை அதி விரைவாக ஓட்டிப் போய் எதன் மீதாவது மோதி நாசமாக்க வேண்டுமென்பது உன் திட்டம். அம்முயற்சியில் நீ இறந்தாலும் பரவாயில்லை, எப்படியும் நான் சாக வேண்டும் என்பது உன் ஆசை! ஆனால் வடிவேலு! யதேச்சையாக உன் உயிர் பிரிந்து போக நான் தப்பிப் பிழைத்து விட்டால்?''

வடிவேலு வேகத்தைக் கூட்டும் விசையிலிருந்து வலது காலை எடுத்து, பிரேக்கில் வைத்துப் பலமாக அழுத்தினான். வேதனையைத் தாங்க மாட்டாமல் ரப்பர் சக்கரங்கள் வீறிட்டு அலறின. கார் தட்டாமாலை சுற்றுவது போல் சுழன்று வந்த திக்கையே திரும்பிப் பார்த்து நின்றது.

சட்டென்று மைக்கேலின் கரம் இடைக்குத் தாவியது. அங்கே பெல்டில் செருகப் பட்டிருந்த உறையில் துப்பாக்கியைக் காணாது ஏமாந்தது. அந்தக் கைத் துப்பாக்கிதான் இப்போது வடிவேலுவின் கரத்தில் சிக்கியுள்ளது என்பது அவனுக்குத் தெளிவாயிற்று. திடுமெனக் கார் நிற்கும் என்று கிஞ்சித்தும் நினைக்காத

## கவலை வேண்டாம்!

ராணியானால்தான் என்ன? பாட்டி என்றால் பாட்டிக்கு ஏற்படுகிற தொல்லைகள் இல்லாமலா போகும்?

இங்கிலாந்தில் விக்டோரியா மகாராணியின் பேரன்களில் ஒருவன் ரொம்பவும் ஊதாரியாகப் பணத்தைச் செலவழித்துத் 'தத்தாரி'யாகத் திரிந்து கொண்டிருந்தான். ராணிக்கு மிகுந்த வேதனை அளித்தது. பேரனைக் கண்டிக்க வேண்டும் என்று நினைத்துக் கொண்டிருந்தார். அச்சமயம் அப்பேரனிடமிருந்து ஒரு கடிதம் வந்தது. அதில் தனக்குச் சமீபத்தில் பிறந்த நாள் வருகிறது என்றும் அந்தப் பிறந்த நாள் பரிசு பணமாகவே அனுப்பி விட்டால் ரொம்பச் சௌகரியமாக இருக்கும் என்றும் அவன் எழுதி யிருந்தான்.



ராணி விக்டோரியா, பேரனுடைய ஊதாரித்தனமான செலவுகளைக் கண்டித்தும், பணத்தின் அருமையைப் பற்றியும், சிக்கன வாழ்க்கை முறையை வற்புறுத்தியும் அவனுக்கு ஒரு கடிதம் எழுதினார்.

அந்தக் கடிதத்தைப் பெற்றதும், பேரன் விக்டோரியா மகாராணிக்குப் பின்வரும் பதில் எழுதினான்:

''அன்புள்ள பாட்டிக்கு,

நீங்கள் எனக்குப் புத்திமதி கூறி எழுதிய கடிதத்துக்கு மிக்க நன்றி. நான் அந்தக் கடிதத்தை இருபது பவுன்களுக்கு விற்று விட்டேன்.''

நான் இப்படி நடுக் காட்டில் அனாதை போல் செத்து விழுந்து கிடக்க வேண்டு மென்பதுதான் ஆண்டவனுடைய விருப்பம் என்றால் அது நிறைவேறட்டும். ஆனால் இதற்கு மட்டும் நீ பதில் சொல்லிவிடு. உண்மையாகவே இவ்வளவு பெரிய தியாகத்தை நீ செய்யுமளவுக்கு அவள் தகுதியுடையவள் என்று கருதுகிறாயா? ஒருவன் உயிரைப் பறிப்பதென்பது சாமான்யக் காரியமல்ல. அதுவும் உன் மேலதிகாரி, உன் உற்ற நண்பன் ஒருவனை அந்த நடத்தை கெட்டவளுக்காகப் பரிந்து கொண்டா கொலை புரியப்போகிறாய்? இதனால் அவள் மானம் காப்பாற்றப்பட்டு விடுமா? உன் வீட்டிலிருந்து விலைமதிப்பற்ற மாணிக்கத்தை ஒருவன் கவர்ந்து சென்றால் அவனை அடித்துஉதைத்து அதனைத் திரும்பப் பெற வேண்டியதுதான். ஆனால் குப்பையைத் திரட்டிக் கொண்டு போனவனுக்கு நன்றியல்லவா செலுத்த வேண்டும்?'' வடிவேலுவின் பிடி தளர்ந்தது. அதிசயத்துடன் அவன் மைக்கேலை ஏறிட்டு நோக்கினான். கோபத்தில் தன் உடம்பு பற்றி எரிந்ததும், தான் அவன் மீது வெறுப்புடன் பாய்ந்ததும் இயல்புதான். ஆனால் மைக்கேல் கூறிய சில வார்த்தைகள் தன் மனத்தைக் குழப்புகின்றனவே? 'அவள் உனக்கு இழைத்து விட்ட அநீதிக்குப் பழி வாங்க எண்ணுகிறாய்' என்றல்லவா அவன் சொன்னான்? 'என் மனத்தில் இருக்கும் விஷயம் இவனுடைய சிந்தனைக்கு எப்படி எட்டியது?' அதிசயத்தில் ஆழ்ந்தவனாய்ச் சற்றுப் பின் வாங்கிய வடிவேலுவை நோக்கிப் புன்னகை புரிந்தான் மைக்கேல்.

''என்ன யோசிக்கிறாய் வடிவேலு? எனக்குத் தெரியும், இவளுக்கும் உனக்கும் உள்ள தொடர்பு பற்றி. பினாங்கில் நான் வசித்த காலத்தில் இவள் எனக்கு அறிமுகமானாள் என்றேனல்லவா? அந்நாட்களிலேயே இவள்

அவன் தன்னைச் சமாளித்துக் கொள்ள முடியாது அல்லல்பட்ட போது, அந்தத் தருணத்துக்காகவே காத்திருந்த வடிவேலுவோ சட்டென்று சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு ரிவால்வரை அவன் இடையிலிருந்து விடுவித்திருக்கிறான்!

பயங்கரமாய்ச் சிரித்தான் வடிவேலு. ''காரை எதன் மீதாவது இடித்தால் நீ பிழைத்துக் கொள்ள நான் சாவதற்கு இடமுண்டுதான். ஆனால் இப்போது?.. சந்தேகத்துக்கு இடமில்லை அல்லவா?'' என்று மைக்கேலின் மேல் சட்டையைப் பற்றி உலுக்கி அடித் தொண்டையில் அதட்டிக் கேட்டான் அவன்.

காப்டன் அமைதி இழக்கவில்லை. ''வடிவேலு! நீ என்னைக் கொன்று விடுவது பற்றி எனக்கு அக்கறை இல்லை.

# ஊல்லில் மிகச் சிறந்தவற்றிற்கு

# தாரிவால் வாங்குங்கள்

எடுப்பான, கவர்ச்சிகரமான தோற்றத்திற்கு ஆடைகளில் வுல்லனுக்கு முக்கியமாக தாரிவால் துணிமணிகளுக்கு இணை ஏதுமில்லை. அது தைப்பதற்குச் சிறந்தது. எப்பொழுதும் பார்ப்பதற்கு நன்றாக இருக்கிறது. மேலும் அலுவலர்க்காக தினந்தோறும் அணியும் போது நன்கு உழைக்கிறது. தவிர, இந்த வருஷம் பல டிசைன்களிலும், நிறங்களிலும் தேர்ந்தெடுப்பதற்குக் கிடைக்கும் வுல்லன் ஒவ்வொருவரின் விருப்பத்திற்கும் இசைந்ததாக இருக்கும்.





தாரிவால்
உத்தரவாதமுள்ள
ஊல்

விற்பனை பிரதிநிதிகள்:

T. R. S. ஐயங்கார் & சன்ஸ், N-1,
சிக்பேட், பங்களூர்—2,

T. R. S. ஐயங்கார் & ஸன்ஸ்,
20/17, கனி மார்க்கெட்,
கிடங்குத் தெரு, மதராஸ்—1.

நியூ ஈகர்டன் வுல்லன் மில்ஸ், தாரிவால், பஞ்சாப், இந்தியா.

வீட்டுக்கு இரண்டொரு முறை சென்றிருந்தேன். அப்போது ஒரு சமயம் மேஜை மேல் இருந்த ஒரு புகைப் படம் என் கவனத்தைக் கவர்ந்தது. அதிலே அவளும் பக்கத்திலே கட்டு மஸ்தான தேகமும், ஆண்மை பொருந்திய களையான முகத் தோற்றமும் கொண்ட ஒரு யுவனும் காட்சியளித்தார்கள். 'யார் இது?' என்று வினவினேன். 'என் கணவர்' என்று பதில் கூறிய படியே படத்தை அலட்சியமாக எடுத்து



மேஜை டிராயரை இழுத்துத் திறந்து அதனுள்ளே வீசினாள் அவள். டிராயரைத் தள்ளி மூடிவிட்டு என் பக்கமாகத் திரும்பிப் புன்னகை புரிந்தாள். 'அவன் எங்கே இருக்கிறான்?' என்று நான் கேட்டதும், 'பயப்படாதீர்கள்!' என்று என்னைப் பரிகசித்தாள் அவள். 'இங்கே அவர் வந்து விடமாட்டார்! இந்தியாவின் எங்கோ ஒரு மூலையில் குக்கிராமத்தில் வயலில் இறங்கி உழுது கொண்டிருப்பார்' என்று கூறிச் சிரித்தாள். உன்னைப் பற்றி இன்னும் என்னவெல்லாமோ ஏளனமாகப் பேசினாள். கையாலாகாதவன் என்று சபித்தாள். சுகபோகத்துடன் வாழலாம் என்று ஆசை காட்டி அவளை அழைத்து வந்தாயாம். பிறகுதான் ஓட்டாண்டி என்று தெரியவந்ததாம். வறுமையில் கிடந்து அவதிப்படுவதை அவளால் சகிக்க முடியவில்லையாம். நீ அவளைப் பாது காப்பதைவிடத் தன்னைத் தானே மேலும் சிறப்பாகக் கவனித்துக்கொள்ள அவளால் முடியும் என்பதால் சொல்லாமல் கொள்ளாமல் ஓடி வந்து விட்டாளாம்....

''இதை யெல்லாம் கேட்ட போது நான் நேரில் பார்த்தறியாத, புகைப் படத்திலிருந்த அந்த மனிதனிடம் இரக்கமும் அனுதாபமும் கொண்டேன். இப்படிப்பட்ட ஒரு மனைவியை அடைய வேண்டியிருந்த அவன் தலைவிதியை எண்ணி வருந்தினேன். உழவுத் தொழிலை அவள் மட்டப்படுத்திப் பேசியது எனக்கு அவள் மீது வெறுப்பும் உன்னிடம் பிணைப்பும் உருவாக்க மேலும் துணை புரிந்தது. ராணுவத்தில் நான் சேர்ந்திருந்த போதிலும் நானும் பரம்பரையாக விவசாயக் குடும்பத்தைச் சேர்ந்தவன்தான். தாய் நாட்டின் மானத்தைக் காக்க உலக யுத்த அரங்கின் நான்கு மூலைகளில் நான்கு பிள்ளைகளையும் அனுப்பிவிட்டு அவர்களுக்கும் அவர்களைப் போன்ற ஏனைய வீரர்களுக்கும் தேவையான உணவு உற்பத்தியில் வயதான என் பெற்றோர்கள் முழு மூச்சுடன் ஈடுபட்டிருக்கிறார்கள்.''

வடிவேலு அப்படியே பிரமித்துப் போய் உட்கார்ந்திருந்தான். துப்பாக்கி அவன் கரங்களிலிருந்து நழுவி அவன் மடியில் விழுந்தது. பேச்சுவாக்கில் மைக்கேல் அதைக் கைநீட்டி

எடுத்துக் கொண்டதைக் கூட அவன் கவனிக்கவில்லை. மைக்கேல் கூறிய செய்தி அவனை அவ்வாறு அதிசயத்தில் ஆழ்த்தியதோடு அவன் வாய்விட்டுக் கூறாத இரண்டொரு விஷயங்களையும் தெளிவாக்கியது. ஆரம்ப முதலே சிப்பாய் வடிவேலுவிடம் மைக்கேல் பிரத்தியேகமான அன்பு பாராட்டி வந்தது எதனால் என்பது விளங்கியது. சிங்கப்பூரில் மைக்கேலைத் தான் சந்திக்கு முன்னரே அவன் தனக்கு நண்பனாகியிருக்கிறான்! நேரில் பார்த்ததும் உடனே அவனுக்குப் பினாங்கில் அவன் பார்த்த புகைப்படம் ஞாபகம் வந்திருக்கும். தன்னை அடையாளம் கண்டு கொண்டிருக்கிறான். கடமையில் பிசகிய போதெல்லாம் கண்டித்தாலும் பிற்பாடு பரிவு காட்டி வந்ததற்குக் காரணம் அதுதான்!

''இதை யெல்லாம் நீங்கள் ஏன் என்னிடம் முன்னமேயே கூறவில்லை?''

''சொல்லிப் பயன் என்ன? அப்போதே நீ என்னைப் பகைத்துக் கொண்டிருப்பாய். சற்று முன்னால் என்னைச் சுட்டுக் கொல்ல நினைத்தது போல் பரபரப்படைந்து எதையாவது செய்திருப்பாய். இன்று அவள் எப்படிப்பட்டவள் என்பதை நிரூபித்துக் காட்டி வாதாடுவது போல் அன்று என்னால் உன்னை நம்ப வைத்திருக்க முடியாது. மனமாற்றத்தை உன்னிடத்தில் உண்டு பண்ணுவது சாத்தியமாயிருந்திராது. எனக்குக் கீழ் நீ வேலை பார்க்கவேண்டும் என்று எப்போது ஏற்பட்டு விட்டதோ, பிறகு புகைச்சலுடன் நீயும் நானும் எப்படிப் பழகுவது? நாட்களை ஓட்டுவதே கடினமாயிருந்திருக்கும். அவளுடைய உண்மையான சொரூபத்தை நீ சரிவரப் புரிந்து கொள்ள வேண்டும், அவள் விரித்திருக்கும் மோக வலையிலிருந்து நீ இன்னும் முழுமையாக விடுபடவில்லையென்றால் இப்போதேனும் நீ அதனை அறுத்தெறிந்து உதறித் தள்ள வேண்டும் என்ற கருத்தில்தான் நான் உன்னை உடன் வரச் சொன்னேன். நம் நட்புக்கு இடையூறாக இருக்கும் ஓர் அம்சமும் நீங்கி நம் சிநேகம் நிலைக்க வேண்டும் என்று விரும்பினேன். அதற்காகவே இந்த நாடகத்தை நடத்தினேன். என்னுடன் அவள் இன்றைக்கு நீச்சல் கிளப்புக்கு வர எதனால் சம்மதித்தாள், தெரியுமா? சிங்கப்பூருக்குத் தப்பி ஓட அவளுக்குக் கப்பலில் இடவசதி செய்து தருவதாய் நான் வாக்களித்தபடியால். ஜமாலுடைய பரிதாபகரமான நிலையைப் பற்றிக் கூறியதும் அவள் எப்படி உடல் குலுங்கச் சிரித்தாள்! பித்துப் பிடித்துக் கோணங்கி சேஷ்டைகளைப் புரியும் ஜமாலைக் கற்பனை செய்து பார்த்தாலே அவளுக்குச் சிரிப்புப் பொத்துக் கொண்டு வந்ததாம்! பிறகு 'அவன் எக்கேடாவது கெட்டுப் போகட்டும். சிங்கப்பூர் செல்ல எனக்கு ஒரு வழி சொல்லுங்கள்!' என்றாள். இத்தகைய சுயநலப் பிசாசை நீ அடியோடு மறந்து விட வேண்டும், வடிவேலு!''

''ஒரே ஒரு விஷயம் மட்டும் சொல்லுங்கள். கார் ஓட்டி வந்தது நான்தான் என்று அவளுக்குத் தெரியுமா?''

''முதலில் அவள் கொஞ்சம் கூடச் சந்தேகிக்கவில்லை. வீட்டில் திரும்பக் கொண்டு போய் விடும்போது, நீ என்னிடம் ஏதோ வேடிக்கையாகப் பேசினாயல்லவா? அப்போதுதான் அவள் உன் குரலை அடையாளம் புரிந்து கொண்டு துணுக்குற்றதாய் எனக்குத் தோன்றியது. பின்வர் காரிலிருந்து இறங்கிச் செல்கையில் நடை தடுமாறியது இதனை உறுதிப்படுத்தியது.''

''அப்படியானால் நான் அவளை மறக்க மாட்டேன், மன்னிக்க மாட்டேன். தண்டிக்காமல் விடவும் மாட்டேன்!'' என்று சொன்னான் வடிவேலு. (தொடரும்)








# murphy radio



## Delights the home!




# மர்பி ரேடியோ



மாடல் 0452

8 வால்வ், 9 வகை ரேடியம் திறனுடன்
ஆல்-வேவ், 3 பாண்ட்
கிராமபோன்-க் ஸ்விட்ச், AC அல்லது AC/DC
விலை ரூ. 330.00
சுங்க வரி ரூ. 30.00
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 0704

4-வால்வ், ஆல்-வேவ் 2 பாண்ட் AC/DC
விலை ரூ. 125.00
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 0298

ஆல்-வேவ், 5-வால்வ்
3-பாண்ட், AC/DC மற்றும்
மாடல் 0299: (டிரை பாட்டரி)4-வால்வ்
விலை ரூ. 200.00
சுங்க வரி ரூ. 15.00
உள்ளூர் வரிகள் தனி



மாடல் 0752

5-வால்வ், ஆல்-வேவ்
3-பாண்ட், AC அல்லது AC/DC
(இரு மாடல்கள்)
மற்றும் மாடல் 0751 : 5-வால்வ்
விலை ரூ. 250.00
சுங்க வரி ரூ. 15.00
உள்ளூர் வரிகள் தனி

# இல்லத்திற்கு இன்பமளிக்கிறது!

# யார் இவர் அறிவாயோ?

ஒல்லியான, உயரமான, பார்ப்பவர் கடுத்து முகம் சுளிக்கும் தோற்றத்துடன், அழுக்கும் அலட்சணமுமான முகத்துடன் கோணல் பார்வை பார்த்துக் கொண்டு ஓர் இளைஞன் இரண்டு கௌரவமான பிரபுக்களைப் பின் தொடர்ந்து போய்க் கொண்டிருந்தான். அவர்களுக்கு அந்த இளைஞன் ஒரு பிரபல எழுத்தாளன், கவி, கட்டுரையாளன், எஞ்சினியர், வக்கீல் இப்படி எல்லாமாக விளங்குபவன் என்று தெரியுமா? யாரோ ஒரு சாதாரண வழிப்போக்கன் என்று எண்ணிக் கர்வத்துடன் அலட்சியமாகப் போய்க் கொண்டிருந்தார்கள்.

ஆங்கில இலக்கியத்தில் தமக்கென்று ஓர் அழியாத புகழைத் தேடிக் கொண்ட இந்த மேதை இப்படி உருமாறி உலாவுவானேன்?



வாழ்க்கையின் இன்னொரு பக்கத்தைப் பற்றி அறிந்து கொள்ளுவதற்காக மாலுமிகள், திருடர்கள், புகைக்கூண்டைத் துப்புரவு செய்பவர்கள் என்று வாழ்க்கையின் கீழ்நிலையில் உள்ளோர்களிடமெல்லாம் நெருங்கிப் பழக அவர்களாகவே உருமாறி அவர்களில் ஒருவராக வாழ்ந்து, தம் இலக்கியங்களைச் சிருஷ்டித்தார் இந்த நாவலாசிரியர். தம்மைப்போலவே தம் மகனும் எஞ்சினீயராக வேண்டுமென்று விரும்பிய தந்தையிடம் தாம் ஓர் எழுத்தாளனாகப் போவதாகச் சொல்லி அவர் கனவுகளைத் தகர்த்தெறிந்தார் இவர். மகனிடம் உயிரையே வைத்திருந்தார் தந்தை. ஆனால் என்ன செய்வது? இப்படி இரட்டை வாழ்க்கை நடத்திய இந்த மேதை இதை அடிப்படையாகக் கொண்டே உலகம் போற்றும் ஓர் ஒப்பற்ற கதையை உருவாக்கினார். டாக்டர் ஜெகில் அண் மிஸ்டர் ஹைட் என்பது அந்தக் கதையின் பெயர்.

இவர் வாழ்ந்த நாற்பத்திநான்கு வருடங்களும் நோயாளியாகவே அவதிப்பட்டார். வாழ்க்கையின் பெரும் பகுதியை வறுமை விழுங்கியது. இருந்தாலும், இவரது சிருஷ்டிகளில் வீரமும், தீரமும், உற்சாகமும்தான் ததும்பி நின்றன. நோயின் உபாதையால் தூக்கமின்றி இவர் அவதிப்படும்போது இவர் தந்தை படுக்கை அருகே உட்கார்ந்து கப்பல், கடல் கொள்ளைக்காரர்கள், வீர மாலுமிகளின் கதைகளைச் சொல்லுவாராம், மகனை உறக்கத்தின் பிடிக்குள் சிக்க வைக்க. தந்தையின் முயற்சி அப்போது பயனளித்ததோ இல்லையோ, பிற்காலத்தில் இவர் கடல் கொள்ளைக்காரர்களைப் பற்றி எழுதிய கதைகள்தான் இவரை உலகப் பிரசித்தமாக்கின. 'புதையல் தீவு' என்ற முதல் நாவலே இவரைப் புகழேணியின் உச்சிக்கு உயர்த்தியது. தந்தை விட்டுச் சென்ற பொருளுடன் இவர் ஒரு படகில் தென்கடல் தீவுகளுக்குப் பயணமானார்.

ஸமாய் தீவுகளின் அழகு இவர் சிந்தையைக் கவர்ந்தது. அங்கேயே தங்குவதென்று தீர்மானித்தார். அதன்படியே அந்த இயற்கைச் சூழலில் இருந்தபடியே எலும்புருக்கி வியாதியின் துன்பத்தையும் பொருட்படுத்தாமல் ஏராளமான இலக்கியங்களைச் சிருஷ்டி செய்தார். இவருக்கு ஏற்பட்ட முடிவோ, அதிகமாக வேலை செய்ததினால்தான். ஸ்காட்லாந்தைச் சேர்ந்த இவர் பிறந்தது 1850ம்வருடம் நவம்பர் 13ம் தேதி எடின்பர்க் நகரில். இறந்தது 1894ம் வருடம் டிசம்பர் மாதம் 3ம் தேதி. ஸமாய் தீவுகளில், 'டுஸிடாலா' என்று அந்தத் தீவுவாசிகள் இவரைச் செல்லமாக அழைப்பார்களாம். 'டுஸ்டாலா' என்றால் கதை சொல்லுபவர் என்று பொருள். இந்த இலக்கியகர்த்தா யார் என்று இன்னும் தெரியவில்லையா? இவர் தான் ராபர்ட் லூயி ஸ்டீவன்ஸன். இவரது அமரசிருஷ்டிகளை நீங்கள் மேல் வகுப்புக்களில் படித்து ரஸிக்கப் போகிறீர்கள்.



**உங்கள் ஆல்பத்துக்கு**

'அரசகுமாரன் வான வீதியில் பறந்து செல்கிறான்' என்பதற்குத்தான் இப்படி இந்தத் தாய்லாந்து நாட்டைச் சேர்ந்த ஒரு கலைஞர் நடித்துக் காட்டுகிறார். தாய்லாந்து நாட்டில் நாடக மேடைகள் எளிமையாக இருந்தாலும் நடிகர்களின் அங்க அசைவுகளின் லாகவத்திலிருந்து சபையோர் பாத்திரங்களின் மனோபாவத்தைச் சுலபமாகப் புரிந்து கொண்டு விடுவார்கள்.

பிறந்த கதை

## ஸ்டெதாஸ்கோப்

காய்ச்சல், தலைவலி என்று நீ டாக்டர் வீட்டுக்குப் போனதும் அவர் முதலில் செய்யும் காரியம் என்ன? மேஜை மீதுள்ள ஸ்டெதாஸ்கோப்பை எடுத்துக் தம் காதுகளில் செருகிக் கொண்டு உன் மார்பிலும் முதுகிலும் வைத்துப் பார்க்கிறார், இதயத்துடிப்பின் தன்மையை அறிந்து கொள்ளுவதற்காக. இந்த ஸ்டெதாஸ்கோப் யாரால், எப்போது, எப்படிக் கண்டுபிடிக்கப்பட்டது தெரியுமா? பிரான்ஸ் தேசத்தைச் சேர்ந்த ரெனி லீனெக் என்ற டாக்டர்தான் இந்த உபகரணத்தைக் கண்டுபிடித்தவர். இதை உருவாக்குவதற்கு முன்பு டாக்டர்கள் நோயாளியின் திறந்த மார்பில் தங்களது காதுகளை வைத்துப் பார்ப்பது வழக்கம். ரெனி லீனெக்கும்கூட இப்படித்தான் நோயாளிகளைச் சோதித்து வந்தார். ஒவ்வொரு நோய்க்கும் இதயத்தின் துடிப்பு வேறாக இருக்கும். இப்படி நோயின் தன்மையைக் காண ஒவ்வொரு நோயாளியின் மார்பிலும் காதை வைத்துச் சோதிப்பது அநாகரிகமாகத் தோன்றியது ரெனிக்கு. இதற்கு ஏதாவது ஒரு வழி காண நினைத்தார். ஒரு நாள் ஏதோ கடிதம் எழுதிக் கொண்டிருக்கும் போது யாரோ ஒரு நோயாளி வந்தான். ஏதோ நினைவாக, எழுதிய கடிதத்தைக் குழல் போலச் சுருட்டிய வரின் மூளையில் பளிச்சென்று ஒரு யோசனை தோன்றியது. அந்தக் காகிதக் குழலின் ஒரு முனையை நோயாளியின் மார்பிலும் மறுமுனையைத் தம் காதிலும் வைத்து இதயத் துடிப்பைக் கேட்டார். இதயஒலி தெளிவாக, பலமாகக்கூடக் கேட்டது. அன்றைக்கே பிறந்தது ஸ்டெதாஸ்கோப். ரெனி லீனெக் செய்த முதல் ஸ்டெதாஸ்கோப் மரக் குழாய்தான். நாளாவட்டத்தில் இது பல முன்னேற்றங்களடைந்து இன்றைய நிலைக்கு வந்திருக்கிறது.

உலக விளையாட்டு

## எலியும் பூனையும்

பிரேஸில் நாட்டுக் குழந்தைகள் விளையாடும் விளையாட்டு ஒன்றைப் பற்றி இப்போது உங்களுக்குச் சொல்லப் போகிறேன். இதை விளையாடப் பத்துப் பேர்களுக்குக் குறையாமல் இருக்க வேண்டும். இரண்டு பேரைத் தவிர மற்றவர்கள் வட்டமாகக் கையைக் கோத்துக் கொண்டு நிற்க வேண்டும். இரண்டு பேரில் ஒருவன் எலி. இவன் வட்டத்துக்குள்ளும் மற்றவனை பூனை வட்டத்துக்கு வெளியிலும் இருக்க வேண்டும்.

இனிமேல்தான் விளையாட்டு ஆரம்பம். வெளியில் இருக்கும் பூனை உள்பக்கம் நோக்கியபடி, எலியை அரண் கட்டிக் காத்துநிற்கும் வட்டத்திலுள்ளவர்களின் முதுகைத் தட்ட வேண்டும்.

''என்ன வேண்டும்?'' என்பான் அவன்.

''எலியைப் பார்க்க வேண்டும் எனக்கு'' என்று பதில் சொல்லும் பூனை.

''இப்போது உன்னால் அதைப் பார்க்க முடியாது'' என்ற பதில் வரும்.

''எப்போது நான் அதைப் பார்க்க முடியும்?'' என்று கேட்கும் பூனை.

''பத்து மணிக்கு'' என்று பதில் வரும். (ஏதாவது ஒரு நேரத்தைக் குறிப்பிடலாம்.)

எலியின் பேட்டிக்கு நேரம் குறிப்பிட்டானதும் வட்டம் மெதுவாக நகர்ந்து சுழல ஆரம்பிக்கும். வெறுமனேயல்ல. தாளகதியோடு, ''டிக் டாக் டிக், மணி ஒன்னு. டிக் டாக் டிக் மணி இரண்டு''—இப்படிப் பாடியபடியே முன்னும் பின்னுமாக அசைந்தாடியபடி வட்டத்தைச் சுழல வைக்க வேண்டும். குறிப்பிட்ட நேரமான மணி பத்து வந்ததும் வட்டம் சுழலுவதும் பாட்டும் நின்றுவிடும். உடனே காத்திருந்த பூனை வந்து முன்போலவே ஒருவரின் முதுகைத் தொட்டுத் தட்டும். மறுபடியும் சம்பாஷணை தொடரும்.

''உனக்கு என்ன வேண்டும்?''

''நான் எலியைப் பார்க்க வேண்டும்.''

''இப்போது மணி என்ன?''

''மணி பத்தாகி விட்டதே!'' என்று கூறும் அந்தப் பூனை.

''சரி, உள்ளே வா!'' என்றதும், பூனை வட்டக் கோட்டைக்குள் எலி எந்த முனையில் இருக்கிறது என்பதை ஊகித்தறிந்து குபீரென அங்கே உள்ளே பாய்ந்து எலியைப் பிடிக்க வேண்டும். இதற்குள் எலி அதனிடம் அகப்படாமல் வெளியேறிவிட வேண்டும். அகப்பட்டுக் கொண்டால் பூனைக்கு எலி உணவாக வேண்டியதுதான். அதாவது எலிக்குத் தோல்வி. தப்பி வெளியே சென்றால் பூனைக்குத் தோல்வி. விளையாடிப்பார்த்தால்தான் இதன் சுவாரசியம்தெரியும்.

# விமானம் பறப்பது எவ்வாறு?

நமது எல்லையிலே தொல்லை கொடுக்கும் சீனாவின் சின்னத்தனத்தை அடக்கி ஒடுக்க அமெரிக்காவிலிருந்து விமானங்கள், ஆயுதங்களைத் தாங்கியபடி பறந்து வந்து கொண்டிருக்கின்றன — என்றெல்லாம் இப்போது பத்திரிகைகளில் படித்து வருவீர்களே! இந்த விமானங்கள் ஆகாயத்தில் எப்படிப் பறக்கின்றன என்ற கேள்விக்குப் பதில் சொல்ல வேண்டுமானால் லேசான காரியமல்ல. கேள்வி சிறியது. ஆனால் அதற்கு விடை மிகப் பெரியது. இருந்தாலும் அதன் தத்துவத்தை இங்கு சில உதாரணங்களால் விளக்கப் போகிறேன்.

இரண்டு ஆப்பிள் பழங்களை ஒரு கெஜ நீளமுள்ள கயிற்றில் சில அங்குல இடைவெளிகள் விட்டுக் கட்டித் தொங்க விடுங்கள். தொங்கும் ஆப்பிள்களுக்கிடையே பலமாக ஊதினீர்களானால் என்ன ஏற்படும்? இரண்டும் விலகிப்போகும் என்றுதானே நினைப்பீர்கள். அப்படித்தான் நினைக்கவும் தோன்றும். ஆனால் நடப்பது அப்படியல்ல. ஊதிப் பாருங்கள். கண்ணுக்குத் தெரியாத கரங்கள் அந்த இரண்டு ஆப்பிள்களையும் ஒன்றோடு ஒன்று மோத வைக்கும். ஏன் இப்படி?

இன்னோர் உதாரணம். வால் போன்ற ஒரு நீண்ட காகிதத்தை இரண்டு கைகளின் ஆள்காட்டி விரல், கட்டை விரல்களால் பற்றியபடி வாயின் அருகே பிடித்துக் கொள்ளுங்கள். காகிதம் தொய்ந்து கீழே தொங்கும். காகிதத்தின் மேலாக வேகமாக ஊதுங்கள். நடப்பது என்ன? துவண்டு தொங்கிய காகிதம் சீன ஆக்கிரமிப்பால் வீறு கொண்டு எழுந்த பாரத வீரனைப் போலப் படபடத்துத் துள்ளிஎழுந்து விறைப்பாக நிற்கும். இது எப்படி? ஆப்பிள் பழங்களை ஒன்றோடு ஒன்று மோத வைத்த அதே சக்திதான் இந்தக் காகிதத்தையும் விறைப்பாக நிற்க வைத்திருக்கிறது. அது என்ன சக்தி?



காற்றின் வேகம் அதிகமானால் அங்கு காற்றின் அழுத்தம் குறையும். இது பர்னௌலி என்ற விஞ்ஞானி இருநூறு ஆண்டுகளுக்கு முன்பு கண்டறிந்த உண்மை. ஊதியதும் ஆப்பிள்களுக்கு இடையேயுள்ள காற்றின் வேகம் அதிகமாகிறது. அதாவது அங்குள்ள காற்று வேகமாக வெளியேறுகிறது. அப்போது அங்கு காற்றின் அழுத்தம் ஆப்பிள்களுக்கு மறு பக்கத்திலுள்ள சலனமில்லாத காற்றின் அழுத்தத்தை விடக் குறைகிறது. அதிக அழுத்தமுள்ள காற்று குறைவான அழுத்தமுள்ள இடத்தை இட்டு நிரப்ப மோதி வருகிறது. அதனால் ஆப்பிள்கள் விலகிப் போகாமல் ஒன்றை நோக்கி ஒன்று மோதிக் கொள்கிறது.

காகிதத்தின் மேல் பக்கமாக ஊதும்போது அங்கு காற்றின் அழுத்தம் குறைகிறது — ஓடும் காற்றின் வேகத்தினால். காகிதத்தின் அடிப் பாகத்துக் காற்றில் சலனமில்லை. அங்கு அழுத்தம் ஒரே நிலையிலிருக்கிறது. மேலே குறைவான அழுத்தம், கீழே அதிக அழுத்தம். ஆகவே அழுத்தம் குறைவான இடத்தை இட்டு நிரப்பக் காற்று மேல் நோக்கிக் கிளம்பும்போது காகிதமும் விறைப்பாக நிற்கிறது.

பர்னௌலி தாம் கண்டுபிடித்த இந்தத் தத்துவம்தான் பிற்காலத்தில் வான மண்டலப் பிரயாணத்தின் திறவுகோலாக அமையப் போகிறது என்பதை அறியவில்லை.



ஆகாய விமானம் பறப்பதற்கும் ஆப்பிள்கள் மோதிக்கொள்வதற்கும் என்ன சம்பந்தம் என்று திகைப்பு உண்டாகிறதல்லவா? கேளுங்கள் சொல்லுகிறேன்.

இதோ மேலே உள்ளது ஆகாய விமான இறக்கையின் குறுக்கு வெட்டுத் தோற்றம். மேல் பாகம் வளைவாகவும், கீழ்ப் பாகம் நேராகவும் இருக்கிறது இல்லையா? விமானம் கிளம்பும்போது முன் பக்கம் உள்ள பெரிய விசிறி (புரொபல்லர்) வேகமாகச் சுழல ஆரம்பித்ததும் ஏராளமான காற்று உண்டாக்கப்படுகிறது. இந்தக் காற்று விமானத்தின் இறக்கைகளின் வழியாகச் செல்கிறது. வளைந்த மேல் பாகத்தின் வழியாகச் செல்லும் காற்றின் வேகமும் தூரமும் அதிகம். அதே சமயத்தில் அடிப் பாகத்தின் வழியாகச் செல்லும் காற்றின் வேகமும் தூரமும் குறைவு. பர்னௌலியின் நியாயப்படி அதிக வேகம், குறைந்த அழுத்தம். அதன்படி விமான இறக்கையின் மேல் பாகத்தை விட அடிப் பாகத்தில் காற்றின் அழுத்தம் அதிகம். அதிக அழுத்தம், குறைந்த அழுத்தப் பிரதேசத்தை இட்டு நிரப்ப விரைகிறது. அப்படிக் கிளம்பும்போது அதற்குத் தடையாக இருக்கும் விமானத்தின் இறக்கையை மேல் நோக்கித் தள்ள விமானமே மேலே தூக்கப்படுகிறது. விமானம் பறப்பதன் தத்துவம் இப்போது ஓரளவுக்காவது உங்களுக்கு விளங்குகிறதல்லவா?






புதுமலர்ச்சி, புதுமலர்ச்சி என்று 'ஆடுவோமே,
பள்ளுப் பாடுவோமே,' ஆனந்தமாய் லைப்பாய் தேய்த்து நீராடுவோமே!
அழுக்கிலுள்ள கிருமிகளைக் கழுவிக் களைவது லைப்பாய் சோப்!
நம் குடும்ப முழுமைக்கும் நல்வாழ்வு நல்குவது
லைப்பாய் நல்லுறவு ... 'எல்லாம் இன்பமயம்!'

**லைப்பாய்** இருக்குமிடம், அதுவே ஆரோக்கியம் இருக்குமிடம்!

L.33-X52 TM

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு




# நாட்டின் பாதுகாப்பைப் பலப்படுத்துங்கள்

# இந்திய விமானப் படையில் சேருங்கள்

## இந்திய விமானப் படையில் கமிஷன் அந்தஸ்துக்காக உங்கள் தகுதியை சோதித்துக் கொள்ளுங்கள்

| பிரிவுகள் | வயதும், கல்வி யோக்யதாம்சங்களும் |
|---|---|
| பொது வேலைகள் : (விமான ஓட்டி) | நேஷனல் டிபென்ஸ் அகாடமி மூலம் மெட்ரிகுலேட்டுக்கு - 15 முதல் 17½ வயது. இதர மெட்ரிகுலேட்டுக்கு - 17½ முதல் 21 வயது. |
| டெக்னிகல் : இன்ஜினீயரிங் எலக்ட்ரிகல் சிக்னல்ஸ் ஆர்மமெண்ட் | வயது : 18 - 28 ஆண்டுகள் கல்வி யோக்யதாம்சங்கள் : மெக்கானிகல், எலக்ட்ரிகல், எலக்ட்ரானிக், ஏரனாடிகல் அல்லது கெமிகல் இன்ஜினீயரிங் டிகிரி அல்லது அதற்கு சமம். |
| நிர்வாகம் : | வயது : 21 - 28 ஆண்டுகள். யோக்யதாம்சம் : சர்வகலாசாலை பட்டம். |
| கணக்குப் பிரிவுகள் : | வயதும், கல்வி யோக்யதாம்சங்களும். பி. காமுக்கு 21 - 28 ஆண்டுகள். சார்ட்டர்ட் அக்கௌண்டண்டு களுக்கு 21 - 27 ஆண்டுகள். |
| கல்வி : | வயது 21-25 ஆண்டுகள். உயர்ந்த யோக்யதாம்சங்கள் உள்ளவர்களுக்கு 28 வயது வரை தளர்த்தப்படும் கல்வி யோக்யதாம்சங்கள் : போதிக்கும் யோக்ய தாம்சம் அல்லது அநுபவத்துடன், ஹானர்ஸ் டிகிரி அல்லது இன்ஜினீயரிங் டிகிரி. |
| சாதனம் : | வயது : 21 - 23 ஆண்டுகள். யோக்யதாம்சம் : சர்வகலாசாலைப் பட்டம் |
| மெட்டர்லாஜிகள் : | வயது : 19 - 23 ஆண்டுகள். உயர்ந்த யோக்யதாம் சங்கள் உள்ளவர்களுக்கு 25 வயது வரை தளர்த்தப் படும். கல்வி யோக்யதாம்சங்கள் : எம். எஸ். ஸி. முதல் வகுப்பு அல்லது இரண்டாம் வகுப்பு. அல்லது பிஸிக்ஸ், அப்ளைய்ட் மாத்தமாடிக்ஸ், பிஸிகல் கெமிஸ்ட்ரி, அப்ளைய்ட் பிஸிக்ஸ் அல்லது மெட்டர்லாஜியில் ஹானர்ஸ் டிகிரி. |

**சம்பளம் :** பொதுவேலைப் பிரிவுகளுக்கு, கமிஷன் அந்தஸ்து ஆனவுடன் மாதம் ரூ. 475/- சம்பளம். இத்துடன் விமானத்தில் பறப்பதற்கான சன்மானம், இதர படிகளுக்காக மாதம் ரூ. 250/-ம் அளிக்கப்படும். இதர பிரிவுகளுக்கு மாதச் சம்பளம் ரூ- 400/- மற்றும் இதர படிகளும்.

**விவரங்களுக்கு அருகிலுள்ள விமானப்படை ரெக்ருட்டிங் ஆபீசருக்கோ அல்லது ADP(O) 4, Air Headquarters, New Delhi அவருக்கோ எழுதுங்கள். அல்லது நேரில் சென்று காணுங்கள்.**

**தேவை ஏற்படும்போது பிரபல செய்திப் பத்திரிகைகளில் விளம்பரம் செய்து விண்ணப்பங்கள் வரவேற்கப்படும்.**

DA 62-588

## அஞ்சலி



டிசம்பர் 13-ந் தேதியுடன் ஆண்டுகள் இரண்டாகின்றன, ஸ்ரீமதி சுந்தரம்மாள் மறைந்து. ஆனால் நீண்டகால அன்பு நினைவுகள் இரண்டாண்டில் மறையுமா? இன்று ஸ்ரீமதி சுந்தரம்மாளின் பிரியக் கணவர் திரு வி. தியாகராஜன் (முன்னாள் 'அபீஷியல் அஸ்ஸைனி') அவர்களும் அவரது குடும்பத்தினரும் சுந்தரம்மாளின் சுந்தரமான குண நலன்களை எண்ணி எண்ணித் தங்கள் அன்பை அவரது ஆன்மாவுக்கு அளிக்கிறார்கள்.







# ஆலயமணி

காதலித்தவனை விட்டு விட்டுக் கைகொடுத்துக் காப்பாற்றிய பணக்காரனை மணக்கிறாள் ஓர் ஏழைப் பெண். அவ்வேழைப் பெண்ணைக் காதலித்த அப்பாவி சேகர் அவளை மறக்கவும் முடியாமல் துறக்கவும் முடியாமல் தவிக்கிறான். பணக்காரத் தியாகுவும், சேகரும் ஆப்த நண்பர்கள். சந்தேகப் பேய் குறுக்கிட்டு இருவர் வாழ்வையும் பாழாக்குகிறது.

சிவாஜி கணேசன்தான் தியாகு. முதலில் விளையாட்டு வீரராகத் துள்ளுகிறார். பிறகு கருணைக் கடலாக விளங்கி ஏழைக் குடும்பத்துக்கு வாழ்வளிக்க வாரி வழங்குகிறார்; வழியோடு போன ஏழைப் பெண்ணிடம் மனத்தைப் பறிகொடுத்து நண்பன் சேகரின் உதவியினால் அந்தப் பெண்ணை மணக்கிறார்; கார் விபத்தில் கால்கள் ஊனமுற்றுத் தள்ளு வண்டியில் தள்ளப்படுகிறார்.

சிவாஜி கணேசன் அபாரமாக நடித்திருக்கிறார். ஒவ்வொரு கட்டத்திலும் அவர் நடிப்பில் உயர்ந்து நிற்கிறார்.

ஆனால் தியாகுவைத் தவிர மற்றவர்களுக்குப் படத்தில் அதிக வாய்ப்பு இல்லாமற் போய்விடுகிறதே!

சரோஜாதேவியின் நடிப்பு பளிரென்று ஒளி விடுகிறது. காதலித்தவனைக் கைவிட்டுக் கைப்பிடிக்க நிச்சயதார்த்தம் செய்யப்பட்டவரோடு நெருங்கிப் பழகும்போது அவர் படும் வேதனை உருக்குகிறது. வருங்காலக் கணவன் வீட்டிலேயே தங்கிக் கார் விபத்துக்குள்ளான அவனுக்குப் பணிவிடைகள் செய்வதை நம் நாட்டு மரபுக்கு ஒத்ததென்று கூறலாமோ?

சரோஜா தேவி தியாகு எழுதும் சித்திரத்துக்குப் 'போஸ்' கொடுப்பது மிக நன்றாயிருக்கிறது. எழில் பொங்கும் தோற்றத்துடன் சகுந்தலை வேடத்தில் சரோஜா தேவி பொருத்தமாய்த் தோன்றுகிறார். அப்பொழுது தியாகு பாடும் ''கல்லெல்லாம் மாணிக்கக் கல்லாகுமா?'' என்னும் பாட்டு இனிமையாக ஒலிக்கிறது. ''பொன்னை விரும்பும் பூமியிலே'' என்னும் பாட்டும் நன்றாயிருக்கிறது. கடைசியில் பாடும் ''சட்டி சுட்டதடா'' என்ற பாட்டுக்குச் சிவாஜியின் முகபாவம் நன்றாயிருக்கிற தென்றாலும் ''வீடுவரை உறவு'' என்ற பாட்டை நினைவூட்டுகிறதே!

சேகராக வரும் எஸ். எஸ். ராஜேந்திரன் நன்றாக நடித்திருக்கிறார். அவரைக் காதலிக்கும் பிரேமாவாக நடிக்கும் விஜயகுமாரிக்கு அதிக வாய்ப்பில்லை.

''ஆலயமணி'' என்ற பெயர் படத்துக்குப் பொருத்தமாக இருக்கிறதோ இல்லையோ, செவிகளில் நன்கு ஒலிக்கிறது.

ஒளிப்பதிவு மிகத் திறமையாகக் கையாளப்பட்டிருக்கிறது. மிஸ்டர் தம்பு பாராட்டுக்குரியவர்.

''ஆலயமணி''யில் சுவையூட்டும் பல காட்சிகளோடு நல்ல உருக்கமான நடிப்பும் இருக்கிறது. —காந்தன்

## 50. மாலதி

"இந்தச் சென்னை நகரத்துக்குப் புறப்படுவதற்கு இரண்டு நாட்களுக்கு முன் என் வாழ்க்கையில் ஒரு முக்கியமான, மிகவும் முக்கியமான நிகழ்ச்சி நடந்தது. என்னுடைய தாயாரிடம்கூட அதை நான் சொல்லவில்லை. உன்னிடந்தான் முதன்முதலாக அதைக் கூறப் போகிறேன்!" என்று பேசத் தொடங்கினான் சிவகாமிநாதன்.

கடற்கரையிலே காற்று வேகம் அடங்கி வீசியது. அலைகள் மடங்கித் தவழ்ந்து கொண்டிருந்தன.

"வேறு யாரிடமும் சொல்லாத ஒரு நிகழ்ச்சியை, உங்களுடைய தாயாரிடங்கூடச் சொல்லாத நிகழ்ச்சியை, நீங்கள் என்னிடம் சொல்லப் போகிறீர்களா? அப்படியானால் நான் அதிர்ஷ்டசாலிதான்!" என்றாள் மாலதி.

"உன்னிடம் அந்த நிகழ்ச்சியைச் சொல்ல வேண்டும் என்று ஓர் ஆசை உண்டாகிறது. இன்று மாலை இந்தக் கடற்கரைக்கு வந்த வேளையிலிருந்து ஏதேதோ விசித்திரமான உணர்ச்சிகள் சூழ்ந்து கொண்டிருக்கின்றன அல்லவா? அந்த விசித்திர உணர்ச்சிகளிலே இந்த ஆசையும் ஒன்று. உன்னிடம் அந்த நிகழ்ச்சியைக் கூற வேண்டுமென்று!"

# நந்தவனம்

சோழ



"கட்டாயம் சொல்லுங்கள். இன்று மாலை சிமெண்ட் பெஞ்சில் உட்கார்ந்த விநாடியிலிருந்து நாம் இருவருமே விநோதமான அனுபவங்களைக் காணுகிறோம் அல்லவா? நீங்கள் சொல்ல வருகிற நிகழ்ச்சியும் ஒரு விநோதமான அனுபவத்தில் முடியும் என்று தான் நினைக்கிறேன். ஏனென்றால் நீங்கள் என்னிடம் சொல்லப் போகும் நிகழ்ச்சிக்கும் நான் உங்களிடம் சொல்ல நினைக்கும் நிகழ்ச்சிக்கும் ஒரு சம்பந்தம் இருக்கக்கூடும் என்று தோன்றுகிறது!" என்றாள் மாலதி.

சிவகாமிநாதன் பிறகு பேச ஆரம்பித்தான்:

"மாலதி! நீ சொல்லுகிறபடியே அப்படி ஒரு சம்பந்தம் இருக்கலாம் என்றே நானும் நம்புகிறேன். ஏனென்றால் திவான்பகதூர் செந்தில் நாயகம் அவர்கள் எனக்குச் சொன்ன அந்த முக்கிய நிகழ்ச்சி இந்த அடையாற்றின் கரையிலே தான் நடந்தது!"

"அடையாற்றின் கரையிலா? திவான் பகதூர் செந்தில் நாயகம் சொன்னாரா?"

"ஆமாம். உனக்குச் செந்தில் நாயகத்தைத் தெரியுமா?"

"தெரியும். எங்களுடைய தாத்தாவின் நெருங்கிய நண்பர் அவர். அதோடு எங்கள் குடும்பத்துக்கு வக்கீல். ஜமீன்ஒழிப்புச் சட்டம் அமுலுக்குவருகிற வரை, அவர் அநேகமாக எங்கள் வீட்டுக்கு வாரந்தோறும் வந்து போய்க் கொண்டிருந்தார்!"

"அப்படியானால்?" என்று வியப்போடு மாலதியைப் பார்த்தான் சிவகாமிநாதன்.

"ஆம்! சிங்கம்புத்தூர் ஜமீந்தார் அனவரத புவனபதி என்று கேள்விப்பட்டிருக்கிறீர்களோ என்னவோ, அந்த ஜமீந்தாருடைய பேத்தி நான்!"

"பேத்தியா? என்ன ஆச்சரியம்! இதை ஏன் நீ இதுவரை என்னிடம் சொல்லாமலே இருந்தாய்?"

''உங்களுக்கு அனவரதபுவனபதியைப் பற்றித் தெரியும் என்று எனக்குத் தெரியுமா ?''

''மாலதி! என்ன ஆச்சரியம் இது! உன்னுடைய தாயார்தான் தாமரைச் செல்வியா? இதை ஏன் என்னிடம் சொல்லவில்லை திவான்பகதூர்?''

''அவர் என்னதான் சொன்னார் உங்களிடம்?''

''தாமரைச் செல்விக்கு ஒரு பெண் குழந்தை பிறந்தது என்று மட்டும் சொன்னார். அதோடு நிறுத்தி விட்டார். மற்றப்படி வில்வநாதனைப் பற்றியும் அவருடைய தந்தையான முதிய ஓவியர் சிவகாமிநாதனைப் பற்றியுமே விரிவாகச் சொன்னார். கடற்கரையில் அந்தக் கிழவரும் சென்னை ஜமீந்தாரும் பேசிக்கொண்டிருந்தபோது, முதிய ஓவியர் எதிர்பாராத விதமாக மரணம் அடைந்ததை உருக்கமாகச் சொன்னார். நான் சென்னைக்குப் போய்ச் சித்திர ஆராய்ச்சி நடத்தப் போகிறேன் என்று அவரிடம் தெரிவித்ததும், அவர் உன்னைப் பற்றி ஒன்றுமே சொல்லாமல் நிறுத்தி விட்டார்'' என்றான் சிவகாமிநாதன்.

''இப்போதுதான் எனக்குப் புரிகிறது! உங்கள் பெயரும் சிவகாமிநாதன் — ஆம். நீங்களும் உங்களுடைய தாயாரும் கல்கத்தாவிலேயே



இதுநாள்வரை இருந்து விட்டீர்கள் அல்லவா? எனக்கு இப்போது நன்றாகப் புரிந்து விட்டது! உங்களையும் என்னையும் விதிதான் இப்படி ஒன்று சேர்த்திருக்கிறது. ஏனெனில் நீங்கள் வில்வநாதனின் ஆசைக்கனவு. நானோ, நானோ, அவருடைய அன்புக்கு உரிய மாணவியின் மகள். அவர்கள் இருவருடைய வாழ்விலும் எந்த இலட்சியம் நிறைவேறாமல் போய்விட்டதோ, அந்த இலட்சியத்தை நாம் இருவருமே



ஸ்ரீ வைத்தியசுப்பிரமணிய அய்யர் அவர்களின் புதல்வி சௌ. சுசீலாவுக்கும் பரோடா உதவி கலெக்டர் திரு கிருஷ்ணமூர்த்திக்கும் வெகு விமரிசையாக விவாகம் நடந்தேறியது.

❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖❖

நிறைவேற்றப் போகிறோம். இல்லையென்றால் நாம் எதற்காக இவ்வாறு சந்தித்திருக்க வேண்டும்? ஒருவரையொருவர் பார்த்ததும் எதற்காக நம்மிடையே ஒரு பாசம் உதித்திருக்க வேண்டும்...?''

இவ்வாறு பலப் பல எண்ணங்களை மேலே மேலே சொல்லிக் கொண்டே போனாள் மாலதி. சிவகாமிநாதன் சொன்னான்:

''மாலதி! நீ சொல்வது முற்றிலும் உண்மை. விட்ட குறை, தொட்ட குறை என்று ஒன்று, மனித வாழ்வை இயக்கிக் கொண்டு செல்கிறது என்பதில் சந்தேகமில்லை. இல்லையென்றால் வாழ்வில் முன்பின் தெரியாத இருவர்கள் ஒருவரையொருவர் சந்தித்ததும் அவர்களுக்குள் ஏன் ஒரு விசித்திரமான அதிசயமான நேசம் உண்டாகிறது? எத்தனையோ மனிதர்களை நமது தினசரி வாழ்வில் நாம் சந்திக்கிறோம். எத்தனையோ பேரோடு பழகுகிறோம். என்றாலும் சிலர் மட்டும் நமது அளவற்ற அன்புக்கு உரியவர்களாக ஆகி விடுகிறார்கள். சிலர் மட்டும் பார்த்தவுடனேயே நமது உள்ளத்தைக் கவர்ந்து விடுகிறார்கள். அவர்களைப் பற்றி அதிகம் தெரிந்துகொள்ளும் முன்பே, உள்ளமும் உள்ளமும் கலந்து விடுகின்றன. மாறாத ஒரு நேசம் பிறந்து விடுகிறது. ஜன்மாந்தரத் தொடர்பு என்பது இதுதான்!'' என்றான் சிவகாமிநாதன்.

நீண்ட நேரம் மௌனம் நிலவியது. பிறகு மாலதி கேட்டாள்:

''திவான்பகதூர் செந்தில்நாயகம் கல்கத்தாவுக்கு எப்படி வந்து சேர்ந்தார்....?''

''அதுதான் ஆச்சரியம். இந்த உலகில் பென்ஷன் இல்லாத ஒரு தொழில் உண்டு என்றால் அதுதான் வக்கீல் தொழில்! அந்தத் தொழிலில் ஓய்வு எடுத்துக் கொள்ள விரும்பினாராம் செந்தில்நாயகம். அந்த முடிவுக்கு வந்ததும் காசி வரையில் தீர்த்த யாத்திரை போய் விட்டுத் திரும்ப வேண்டும் என்று நினைத்தாராம். கல்கத்தாவுக்கு வந்து சேர்ந்தார். அவருக்கும் சித்திரக் கலையில் அளவுகடந்த ஆர்வம் உண்டு அல்லவா? எங்கள் சித்திரப் பள்ளித் தலைமை ஆசிரியரை அவருக்கு நன்றாகத் தெரியும்! அங்கே தங்கியபோது எங்கள் ஆசிரியரிடம் என்னைப் பற்றிக் கேட்டிருக்கிறார். அப்படியே எங்கள் வீட்டுக்கு வரக் கூடாதோ? என்ன காரணத்தாலோ வரவில்லை. ஆசிரியர் வீட்டிலேயே என்னை வரவழைத்துப் பேசினார். இந்தக் கதைகளையெல்லாம் சொன்னார். சென்னைக்கு நான் வருவதாக இருக்கிறேன் என்று எங்கள் ஆசிரியர் அவரிடம் சொன்னதும், அவர் அந்த யோசனையை வரவேற்றார். சென்னையில் என்னுடைய சித்திரப் பணியை முடித்துக் கொண்டு திருநெல்வேலியில் அவரைக் கட்டாயம் பார்த்துப் போகும்படி சொன்னார். இன்னுங்கூட ஒரு விஷயம் சொன்னார்'' என்று இழுத்தான் சிவகாமிநாதன்.

''அது என்ன?'' என்று கேட்டாள் மாலதி.

'''தம்பிக்குப் பொருத்தமான ஒரு பெண்ணாகப் பார்த்துக் கலியாணம் முடித்து வைக்கிறேன். கட்டாயம் என்னை வந்து பாருங்கள்!' என்று சொன்னார் செந்தில்நாயகம்!''

இப்படிச் சொல்லி விட்டுச் சிரித்தான் சிவகாமிநாதன்.

''ஏன்? ஏன் சிரிக்கிறீர்கள்?'' என்று கேட்டாள் மாலதி.

''இல்லை. இப்படிச் சொல்லி விட்டு அவர் ஒரு—''

''ஓ! குறளும் சொன்னாரோ?''

''ஆமாம். இப்போதுதான் அந்தக் குறளின் பொருள் எனக்குப் புரிகிறது.

சென்னை நகரில்
சிறப்பான பெண்ணுண்டாம்
அன்னை அனுப்பினால்
வா !

என்றார் செந்தில்நாயகம்!''

சிவகாமிநாதன் இப்படிச் சொல்லி விட்டு மேலும் சிரித்தான். மாலதி சிரித்துக் கொண்டே கேட்டாள்:

''திவான்பகதூர் உங்கள் தாயாரைச் சந்திக்கவில்லையா?''

## ஆராய்ச்சியால் வளம்பெற்ற தொழில்



''வேறெந்தத் தொழிலையும் விட சாயத் தொழில் தான் ஆராய்ச்சியினால் அதிக வளம் பெற்று வளர்ந்த தொழில்'' என்று யாரோ சொல்லியிருப்பது எவ்வளவு உண்மை! சாயங்களின் உற்பத்தி, பல்வேறு பொருள்களைக் கொண்டு பல சிக்கலான முறைகளைப் பின்பற்றிச் செய்து முடிக்கவேண்டிய மிகத் தொல்லையான தொழில். இதில் கவனிக்கவேண்டியது என்னவென்றால் இந்தத் தொழில் வியக்கத்தக்க வகையில் உத்வேகத்துடன் முன்னேறி வருகிறது...மக்களின் பலதிறப்பட்ட ரசனைக்கும் தேவைக்கும் ஏற்றபடி இத்தொழிலும் மாறுதலடைந்துகொண்டே வருகிறது. இதனுடைய வளர்ச்சி காட்டில் ஆர்கானிக் கெமிஸ்ட்ரியில், முக்கியமாக சாயங்கள் சம்பந்தப்பட்ட ரசாயனத்தில், ஆராய்ச்சி முன்னேறுவதைப் பொருத்திருக்கிறது. சாய உலகில் நாளுக்கு நாள் ஏற்படும் முன்னேற்றங்களுக்குப் பின்தங்காமல் ஈடு கொடுக்கும் பொருட்டு அமர் டை ஸ்தாபனம் தன் ஆராய்ச்சி ஏற்பாட்டைப் பரந்த, உறுதியான அடிப்படையில் அமைத்துள்ளது. சாயப் பொருள்களின் உற்பத்தியில் உயர்ந்த முக்கிய நாடுகளுக்கு ஒப்பான ஸ்தானத்தை நம் நாடும் பெறவேண்டும் என்ற நோக்கத்தோடு தான் அமர் டை ஸ்தாபனத்தின் பரந்த ஆராய்ச்சித் திட்டங்கள் விரிவான முறையில் வகுக்கப்பட்டுள்ளன.

**அமர் டை-கெம் லிமிடெட்**



ஈங்க் உத்யான், சீதளாதேவி டெம்பிள் ரோட், மாஹிம், பம்பாய்-16

''இல்லை. ஏனோ எங்கள் வீட்டுக்கு வர மறுத்து விட்டார். சித்திரானந்தரும் அவரும் ஒன்றாகச் சேர்ந்து வந்து அம்மாவைப் பார்க்கப் போவதாகச் சொன்னார். அப்படி நாங்கள் இருவரும் வந்து சந்திப்பதற்குரிய காலம் வரும். அப்போது நாங்கள் உங்கள் வீட்டுக்கு வருவோம் என்று பதில் போட்டு விட்டுக் கல்கத்தாவிலிருந்து போய் விட்டார் அவர்!''

''சித்திரானந்தர் யார்?'' என்று கேட்டாள் மாலதி.

''அவரைத் தெரியாதா உனக்கு? அவர்தான் நான் இந்த ஊருக்கு வருவதற்குக் காரணம்! அவர் எங்கள் வீட்டுக்கு வந்திரா விட்டால் நானும் இங்கே வந்திருக்க மாட்டேன்.''

''எங்காவது ஒரு வங்காளிப் பெண்ணைக் கலியாணம் பண்ணிக் கொண்டு கல்கத்தாவிலேயே இருந்திருப்பீர்கள்! அப்படித்தானே?''

''கலியாணமா? எனக்கு அப்படி ஒரு நினைப்பே இல்லை. அதாவது இந்தத் தமிழ்நாட்டுக்கு வந்து சேர்கிற வரை அப்படி ஒரு நினைப்பு இருக்கவில்லை!'' என்றான் சிவகாமிநாதன்.

''நல்ல வேளை! வாழ்வு முழுதும் பிரம்மசாரியாகவே இருந்து விடுவதாக ஒருவேளை தீர்மானித்திருந்தீர்களோ என்று பார்த்தேன்!''

''மாலதி! உன்னைச் சந்தித்திருக்கா விட்டால் அப்படியும் ஒரு தீர்மானத்துக்கு வந்திருக்கக் கூடும் நான்! ஏன் என்றால் செந்தில்நாயகம் அவர்களிடம் அந்த வரலாறுகளையெல்லாம் கேட்ட பிறகு, எனக்கு மனம் வேறு எந்த நினைவிலும் இல்லை. சித்திரக் கலை ஒன்றே வாழ்வின் இலட்சியமாகத் தோன்றியது. என்னுடைய தந்தையின் வாழ்வில் அவர் முடிக்க முடியாமல் அரை குறையாக விட்டுச் சென்ற இலட்சியங்களையெல்லாம் பூர்த்தி செய்யக் கூடிய ஒரு சந்தர்ப்பம் எனக்குக் கிடைக்காதா என்று மனம் ஏங்கியது. இப்போது அந்த ஏக்கத்துக்கு ஒரு சிறு நம்பிக்கை உண்டாகியிருக்கிறது'' என்றான் சிவகாமிநாதன்.

''உங்களுடைய இந்த வார்த்தைகளைக் கேட்கும்போது எனக்குப் பரவசம் உண்டாகிறது. இந்த வார்த்தைகளை என்னுடைய அம்மா கேட்டால் எத்தனை மகிழ்ச்சி அடைவாள் தெரியுமா?''

''உன் அம்மாவா? அவள் மகிழ்ச்சி அடைவாள் என்று சொல்லுகிறாய்?''

''ஆமாம். செண்பகநாயகி கோவிலின் சித்திரங்களுக்கு அப்படி ஒரு எதிர்பாராத முடிவு வந்தது குறித்து. இன்றைக்கும் கண்ணீர் வடிக்கிறவள் அவள்! ஏதேதோ எண்ணி எப்படி எப்படியோ ஆரம்பித்த பணியானது. இவ்வாறு முடிந்ததே என்று அவளுக்கு எல்லையில்லாத துயரம்!''

சிவகாமிநாதன் மாலதியின் இந்த வார்த்தைகளைக் கேட்டு வியப்பு அடைந்தான். அந்த வார்த்தைகளை அவனால் நம்ப முடியவில்லை!

''மாலதி! இது உண்மைதானா? உன்னுடைய அன்னையின் மனத்தில் இன்னும் அந்த இலட்சியம் உயிர் வாழ்கிறதா? மடிந்துபோன சுவர் ஓவியங்களோடு மடிந்து விடாமல் அந்த இலட்சியம் இன்றளவும் வாழ்ந்து கொண்டிருக்கிறதா? ஆகா! அப்படியானால் நான் உண்மையிலேயே அதிருஷ்டசாலிதான்! சந்தேகமில்லை!''

இவ்வாறு பரவசத்தோடு கூறினான் சிவகாமிநாதன்.

மாலதி கூறுவாள்:

''சிவகாமிநாதன்! தாயுள்ளத்தின் அன்புதான் எத்தனை விதமாகப் பரிணமிக்கிறது! உங்களுடைய தாயாருக்கு உங்களிடமிருந்த எல்லையற்ற பாசத்தினால், உங்கள் வரலாற்றை உங்களிடமிருந்து மறைத்து வைத்தார் உங்கள் அன்னை! ஆனால் என் அன்னையோ என்னிடமுள்ள அளவுகடந்த பாசத்தினால் என் வரலாறு முழுவதையும் ஒன்று விடாமல் என்னிடம் கூறினாள்!''

''அப்படியா? உன் அன்னையே இந்த வரலாறுகளையெல்லாம் சொன்னாளா?'' என்று ஆச்சரியத்தோடு கேட்டான் சிவகாமிநாதன்.

''ஆமாம். வயதான பிறகு எப்படியாவது யாரிடமிருந்தாவது இந்த வரலாறுகளை ஒருநாள் தெரிந்து கொள்ளத்தான் போகிறேன். பிறரிடமிருந்து அரைகுறையாகத் தெரிந்து கொள்ளப் போவதைத் தானே என்னிடம் முழுமையாகச் சொல்லி விடலாம் என்று கருதினாள் என் அன்னை. அதோடு தனது வாழ்வில் அந்தச் சித்திர இலட்சியம் எப்படி ஒரு நிறைவேறாத கனவாக நின்று, தனது உள்ளத்தைத் துயரமுறச் செய்கிறது என்பதையும் என்னிடம் கூற வேண்டும் என்று அவள் எண்ணினாள்! ஒரு நாள் எங்கள் மாளிகையின் நிலா முற்றத்தில் என்னைத் தனியாக அழைத்து இதையெல்லாம் சொன்னாள்!''

இவ்வாறு பேசும்போது மாலதியின் கண்கள் கலங்கின. அவளருகே நகர்ந்து வந்து கலங்கிய கண்களைத் துடைத்தான் சிவகாமிநாதன்.

''மாலதி! ஏன் உன் கண்கள் கலங்குகின்றன? எதற்காக நீ இவ்வாறு துயரம் அடைகிறாய்?''

''அன்னையின் மனக்குறையை உங்களிடம் சொல்லி விட்டேன். இனி அது எப்படி நிறைவேறப் போகிறதோ என்று ஒரு விநாடி எண்ணிப் பார்த்தேன்!'' என்றாள் மாலதி.

''ஏன், இனியும் என்ன தடை இருக்க முடியும்? உன் அன்னையே அந்த இலட்சியத்தில் இத்தனை ஆர்வத்தோடு இருக்கும்போது—''

''இல்லை. என் அன்னையின் இலட்சியம் அது! ஆனால் எங்கள் தந்தையின் மனப்போக்கு வேறு விதம்! சித்திரம் என்றால் ஆரம்பத்திலிருந்தே அவருக்குப் பிடிக்காது. வாழ்வில் ஏற்பட்ட அந்தத் துயர அனுபவங்களுக்குப் பிறகோ என்றால், அந்த வெறுப்பு பல மடங்கு அதிகமாகி விட்டது! அது மட்டுமில்லை—''

இப்படிச் சொல்லி மீண்டும் கண் கலங்கினாள் மாலதி.

''வேறு என்ன காரணம்? மாலதி, உன் அப்பாவின் வெறுப்புக்கு வேறு என்ன காரணம் இருக்க முடியும்?'' என்று கேட்டான் சிவகாமிநாதன்.

''அன்பே, எந்த வல்லாளவேலர் இத்தனை விபரீதங்களைச் செய்தாரோ, அவர் இன்னும் உயிரோடுதான் இருக்கிறார். அந்தப் பொல்லாத வைத்தியரிடம் வல்லாளவேலர் என்ன காயகல்பம் சாப்பிட்டாரோ, தெரியவில்லை. நமக்கெல்லாம் ஆண்டுக்கு ஒரு வயது கூடுகிறது. அவருக்கு ஒவ்வொரு வருஷமும் இரண்டு வயது குறைகிறது —'' இப்படிச் சொல்லிச் சிரித்துக் கொண்டே மேலும் தொடர்ந்தாள் மாலதி.

'' வல்லாளர் கீறிய கோட்டைத் தாண்ட மாட்டார் எங்கள் அப்பா! ஜமீன் ஒழிப்புச்சட்டம் வந்தபோதிலும், இவரை ஒழித்துக் கட்டுவதற்கு ஒரு சட்டம் வராதா என்று ஏக்கமாக இருக்கிறது!'' மாலதி இப்படிச் சொன்னதும் சிவகாமிநாதன்யோசனையில்ஆழ்ந்தான். கேட்டான்:

''மாலதி! உங்களுடைய கல்லூரி விடுமுறை எப்போது ஆரம்பமாகிறது?''

''இன்னும் இரண்டு வாரங்களில் ஆரம்பமாகிறது! பிறகு இரண்டு மாதம் ஊரில் தினந்தோறும் அந்த வல்லாளவேலரையும் பார்த்துக்கொண்டிருக்க வேண்டும்!''

''மாலதி! திவான்பகதூர் செந்தில் நாயகம் எந்த விஷயத்திலும் தீர்க்கமான யோசனை உள்ளவர். சித்திரானந்தரும் அவரும் ஏதோ ஒரு முடிவைக் குறித்துப் பேசியிருப்பார்கள் என்று தோன்றுகிறது. ஒரு வேளை கல்கத்தாவுக்கு வக்கீல் வந்ததற்குக் காரணமே திட்டமிட்ட ஒரு யோசனையாக இருக்கலாம்'' என்றான் சிவகாமிநாதன்.

''சித்திரானந்தரா? பார்த்தீர்களா? அப்போதே அவரைப் பற்றிக் கேட்டேன். பேச்சு எங்கோ சென்று விட்டது. அந்தச் சித்திரானந்தர் யார்? கடலையாண்டி எங்கோ சாமியாராகப் போய் விட்டார் என்றும், பெரிய கல்விமான்களுடைய கூட்டுறவினால் இப்போது எப்படி எப்படியோ மாறிவிட்டார் என்றும், அம்மா கேள்விப்பட்டாளாம். ஒரு வேளை—''

''ஆமாம். உன் அன்னை கேள்விப்பட்டது உண்மைதான். அந்தக் கடலையாண்டிதான் எனக்கு மறுவாழ்வு அளிக்க வந்த சித்திரானந்தர்—''

இதைக் கேட்டதும் ஒரே உற்சாகத்தோடு துள்ளி எழுந்தாள் மாலதி.

''சிவகாமிநாதன்! அப்படியானால் நாம் துயரம் அடைவதற்குக் காரணமே இல்லை. இந்த உலகத்தில் வல்லாளவேலர் யாராவது ஒரு மனிதரிடம் பயபக்தியோடு நடந்து கொள்வார் என்றால், அது சித்திரானந்தராகத்தான் இருக்க முடியும். திவான்பகதூரும் அவரும் ஒன்றுகூடி விட்டால் இந்த வையகத்தில் எந்த இலட்சியமும் நிறைவேறி விடும். சந்தேகமில்லை. வில்வநாதனுடைய வாழ்விலும்கூட அவர் ஆத்திரப்பட்டுச் செண்பகநாயகி கோயிலை நோக்கி அன்று அவ்வாறு ஓடிச் சென்றிராவிட்டால், வேணுலிங்கமும், கடலையாண்டியும் சேர்ந்து விபரீதங்கள் நடவாமல் காத்திருப்பார்கள்—''

வேணுலிங்கம் என்ற பெயர் வந்ததும் ஒரு துள்ளுத் துள்ளி எழுந்தான் சிவகாமிநாதன்.

''மாலதி! இத்தனை வரலாறுகளையும் தெரிந்துகொண்ட எனக்கு ஒரே ஒரு சந்தேகம் மட்டும் இன்னும் இருக்கிறது. அது வேணுலிங்கத்தைப் பற்றித்தான். அதைச் செந்தில்நாயகத்திடம் கேட்கத் தவறி விட்டேன்!''

''வேணுலிங்கம் என்ற பெயரைக் கேட்டாலே அப்படியே அன்பினால் மனம் உருகி விடுவார் திவான்பகதூர். அதனால் அவரைப் பற்றிய வரலாற்றை விரிவாக உங்களிடம் சொல்லியிருக்க மாட்டார் அவர்! மற்ற யாரையும் விட வேணுலிங்கத்திடம் அவருக்கு அத்தனை ஈடுபாடு'' என்றாள் மாலதி.

''நானாக ஒரு ஊகம் செய்தேன். அது சரிதானா என்று தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறேன்!'' என்றான் சிவகாமிநாதன்.

''வேணுலிங்கத்தைப் பற்றித்தானே? நீங்கள் என்ன ஊகம் செய்தீர்கள் ?'' என்று கேட்டாள் மாலதி. (தொடரும்)


சிக்கனமாகவே
அவள் குடித்தனம்
நடத்தினுள்...
செலவினங்களைக் கட்டுப்படுத்தி, கணவனுக்கு
அனுசரணையாக இருந்தாள் அவள். ஆயினும்
ஒரு விஷயத்தில் சற்று கவனக்குறைவாக இருந்து
விட்டாள். தான் வாங்கிய பருத்தித் துணியில்
'ஸான்ஃபோரைஸ்ட்' முத்திரை இருக்கிறதா என்பதைக்
கவனிக்கவில்லை. முடிவு? ஒரேயொரு
சலவைக்குப்பிறகு அவளுடைய புதுச் சேலை
சுருங்கிப் போய்விட்டது.
யார் கூறுவதையும் நம்பிவிடாதீர்கள்.
நீங்கள் வாங்கும் பொருள்கள் முழுப்பயனளிக்குமா
என்பதை உறுதிசெய்து கொள்ளுங்கள்—
லேபில மேல்
·SANFORIZED·
என்ற முத்திரையுள்ளதா
'உடைகள் உடம்புக்குப் என்று பாருங்கள். உங்கள்
பொருந்தாதபடி சுருங்காது.
விவரங்களுக்கு: 'ஸான்ஃபோரைஸ்ட்' ஸர்வீஸ்,
95, மெரீன் டிரைவ், பம்பாய்-2

# சிறந்த அமிலநாசினியும், மலமிளக்கியும்




## நம்பிக்கை

ஒவ்வொரு துறையிலும சில தயாரிப்புகள்தான் சிறந்த குணமும், பல வருடங்களாக நம்பிக்கையானதாகவும் பெயர் பெற்று உயர்ந்த இடம் பெற்றிருக்கின்றன. இந்தநம்பிக்கையான தன்மைதான் பிலிப்ஸ் மில்க் ஆப் மக்னீஷியா உலகில் எல்லோராலும் அங்கீகரிக்கப்பட்டும் 75 வருடங்களுக்கு மேலாக சிபார்சு செய்யப்பட்ட உலகமறிந்த தயாரிப்பும் ஆகும்.

அதிகாரம்பெற்ற தயாரிப்பாளர்கள் :

டேஸ் மெடிகல் ஸ்டோர்ஸ் : மான்யுபாக்சரிங் : பிரைவேட் லிமிடெட்



# ஐஹோளே துர்க்கை

தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான்



நானும் ஒரு நண்பரும் சில வருஷங்களுக்கு முன் கம்பன் பிறந்த தேரெழுந்தூருக்குச் சென்றிருந்தோம். அங்குள்ள கம்பன் மேடு, ஆமருவியப்பன் கோயில் எல்லாம் செல்லுமுன் அங்குள்ள வேதபுரீசர் கோயிலுக்குச் சென்றோம். அங்குள்ள இறைவன் சம்பந்தரால் பாடப் பெற்றவன் ஆயிற்றே. 'அலையார் புனல் சூழ் அழுந்தைப் பெருமானை' நினைந்து அவன் புகழைப் பாடிக் கொண்டே கோயிலுள் சென்றோம். கோயில் தர்மகர்த்தர் ஒருவரும் அர்ச்சகர் இருவரும் எங்களை வரவேற்று உள்ளே அழைத்துச் சென்றனர். நாங்கள் மகாமண்டபம் சென்றதும் அங்குள்ள ஒருபீடத்தில் சமயகுரவர் நால்வரையும் செப்புச் சிலையாக நிறுத்தி யிருப்பதைப் பார்த்தோம். அங்கு சமய குரவர்களை வரிசைப்படுத்தியிருந்த முறை நண்பருக்குக் கோபம் மூட்டியது. அங்கு முதலில் மாணிக்கவாசகரையும் பின்னர் சம்பந்தரையும் அதன் பின் நாவுக்கரசரையும் வரிசைப்படுத்தி வைத்திருக்கிறார்கள். நண்பர் சொன்னார்: ''இந்த முறை வைப்பு தப்பு. காலத்தால் மற்ற மூவருக்கும் பிந்திய மணிவாசகரை முதலில் வைத்திருக்கக் கூடாது. அவரை எடுத்துக் கடையில் வையுங்கள்' என்றார். அர்ச்சகர்களும் தருமகர்த்தரும் அப்படிச் செய்துவிட வேண்டி வருதானோ என்று என் முகத்தைப் பார்த்தார்கள். நான் சொன்னேன்: ''அப்படி ஒன்றும் செய்ய வேண்டாம். காலத்தால் மணிவாசகர் மூவருக்கும் முந்தியவரா பிந்தியவரா என்ற விவாதமே இன்னும் தீர்ந்த பாடாக இல்லை. காலத்தால் அவர் பிந்தியவராக இருந்தாலும் சீலத்தால் அவர் மூவருக்கும் முந்தியவர் என்று காட்டத்தானோ என்னவோ அந்த அழுந்தை மறையோர், அந்தக் காலத்திலேயே இந்த முறை வைப்பைச் செய்திருக்கிறார்கள். அந்த முறை வைப்பை மாற்ற நாம் யார்?'' என்றேன். அப்பாடா, எவ்வளவோ காலமாக இருக்கும் முறை வைப்பை மாற்றாது பழமைப்படியே இருக்கும்படி செய்த என்னை அர்ச்சகர்களும், தருமகர்த்தரும் வாழ்த்தினார்கள்.

இந்தச் சம்பவம் நான் அந்தப் பழைய சாளுக்கிய சாம்ராஜ்யத்தின் பிரபல நகரமாக இருந்த ஐஹோளே என்ற ஊருக்குப் போகும்போது என் ஞாபகத்துக்கு வந்தது. ஆம், பாதாமி சாளுக்கியர் என்னும் அந்த முந்தைய சாளுக்கிய மன்னர்கள், பாதாமி பட்டடக்கல், ஐஹோளேயிலிருந்து அரசு புரிந்திருக்கிறார்கள் என்று சரித்திரத்தில் படித்திருக்கிறேன். இவற்றில் பாதாமிக்கும் பட்டடக்கல்லுக்கும் போய் அங்குள்ள கலைக் கோயில்களை, சிற்ப வடிவங்களை யெல்லாம் கண்டு விட்டோம். ஐஹோளே இவற்றுக்கெல்லாம் பிந்தியதாகத்தானே இருக்கும். அதைப் பார்க்க வேண்டியது அவசியந்தானா என்றுகூட எண்ணினேன். ஆனால் இதைப்பற்றி விசாரித்தால் காலத்தால் ஐஹோளே பாதாமிக்கும் பட்டடக்கல்லுக்கும் முந்தியது மாத்திரம் அல்ல. சீலமிக்க சிறப்பால்கூட அது முன்னணியில் நிற்கக் கூடியதே என்று தெரிந்து கொண்டேன். அதனால்தான் செல்லும் வழி கொஞ்சம் சிரமம் என்றாலும் ஐஹோளே என்னும் ஊருக்கும் உங்களை இழுத்தடிக்கிறேன். சிரமம் கருதாது என் பின் வரவும் வேண்டிக் கொள்கிறேன்.

இந்திய நாட்டின் வடபகுதியிலும் மத்திய பகுதியிலும் கி. பி. 20 முதல் 530 வரை குப்தர்கள் இருந்து அரசாண்டனர் என்று சரித்திரம் கூறுகிறது. அவர்கள் தங்கள் ஆட்சிக் காலத்தில் பல கோயில்களைக் கட்டியிருக்கிறார்கள். இட்டத்தட்ட அதே காலத்தில் தென்னாட்டிலும் நல்ல கலைக் கோயில்களை அமைத்த பெருமையை இந்தச் சாளுக்கிய மன்னர்கள் தட்டிக்கொண்டு போகிறார்கள். ஆம், மல்லபுரத்தை உருவாக்கிய நரசிம்மவர்மன், அவன் தந்தை மகேந்திர வர்மன், அவன் தந்தை சிம்மவிஷ்ணு முதலிய பல்லவ மன்னர்கள் எல்லாம் கலை வளர்ப்பதற்கு முன்னாலேயே இந்தச் சாளுக்கியர்கள் கலை வளர்க்க முனைந்திருக்கிறார்கள். அப்படி அவர்கள் உருவாக்கிய பாதாமி, பட்டடக்கல் என்னும் தலங்களையும் முந்திக் கொண்டு இந்த ஐஹோளே கோயில்கள், குடைவரைகள் உருவாகியிருக்கின்றன. இங்குள்ள கோயில்களெல்லாம் கி. பி. ஐந்து ஆறும் நூற்றாண்டில் உருவானவை என்று சரித்திர ஆசிரியர்கள் பேசும்போதும் நாம் வாயடைத்துத்தான் நிற்க வேண்டியிருக்கிறது.

ஐஹோளே, பாதாமிக்கு வடகிழக்கே பதினாறு மைல் தூரத்தில் இருக்கிறது. என்றாலும் அங்கு செல்ல நல்ல வசதியான ரோடு கிடையாது. முன்னரே சொன்னபடி ரயிலிலே பாகல்கோடு போய் அங்கிருந்து பட்டடக்கல் வந்து அதன் பின் மல்லப்பிரபா நதியையும் கடந்து

ஐஹோளே செல்லவேணும். ஐஹோளே தான் சாளுக்கிய மன்னர்கள் அமைத்த முதல் தலைநகரம். பின்னால் தங்கள் தலைநகரைப் பாதாமிக்கு மாற்றி யிருக்கிறார்கள்.

பாதாமியிலிருந்து அரசாண்ட சாளுக்கிய மன்னன் சத்தியாச்சிரய புலிகேசி பெற்றிருந்த புகழ் காரணமாகச் சரித்திர ஆசிரியர்கள் எல்லாச் சாளுக்கியரையுமே பாதாமி சாளுக்கியர் என்று அழைக்க ஆரம்பித்திருக்கிறார்கள். நாம் அந்தச் சரித்திர வரலாற்றையெல்லாம் ஆராய வந்தவர்கள் அல்லவே. ஆதலால் ஐஹோளேயில் உள்ள கோயில்கள், குடைவரைகளைக் காணக் கொஞ்சம் விரைந்து செல்லலாம்.

இந்த ஐஹோளேயில் கிட்டத்தட்ட எழுபது கோயில்கள் இருக்கின்றன. அவைகளில் முப்பது கோயில்கள் ஒரு கோட்டைக்குள்ளே இருக்கின்றன. மற்றவை கோட்டைக்கு வெளியே சிதறிக் கிடக்கின்றன. இங்குள்ள கோயில்களில் பழமையானது லட்கான் கோயில் என்பதுதான். எதற்காக அந்தக் கோயில் அந்தப் பெயர் பெற்றது என்று தெரியவில்லை. ஐஹோளே என்ற பெயருக்கே காரணம் கண்டுபிடிக்க முடியவில்லையே. சாளுக்கிய மன்னர்கள் ஆரம்பத்தில் ஆர்யபுரம் என்றே இவ்வூரை அழைத்திருக்கின்றனர். பின்னர் ஐயாவொள் என்று வழங்கி இன்று ஐஹோளே என்று சுருங்கியிருக்கிறது என்று மட்டும் தெரிகிறது. லட்கான் கோயில் ஐந்தாம் நூற்றாண்டின் மத்திய காலத்தில் உருவானதொன்று. முன்னால் முக மண்டபத்துடன் கூடிய சிறிய கோயில்தான் அது. சாய்வான கூரையுடன் கூடிய கல் கட்டடம் அது. சிகரம் ஒன்றிருக்கிறது. ஆனால் கோயில் கட்டிப் பல வருஷங்களுக்குப் பின்தான் அது கட்டப்பட்டிருக்க வேண்டும் என்று கட்டடக் கலை நிபுணர்கள் அபிப்பிராயப்படுகிறார்கள். என்றாலும் கோயிலின் பூரணப் பொலிவோடு ஐந்தாம் நூற்றாண்டிலேயே, ஆம், ஆயிரத்து ஐந்நூறு வருஷங்களுக்கு முன்பே கட்டப்பட்டுள்ளது என்றால் அது ஓர் அதிசயம்தானே. இதற்குப் பக்கத்திலே உள்ள கோயிலைத்தான் கோண்டிகுடி என்கின்றனர். அதற்குப் பக்கத்தில் இன்னும் இரண்டு கோயில்கள் இருக்கின்றன. எல்லாம் ஒன்றைப் போல் ஒன்றாகத்தான் இருக்கின்றன. எல்லாம் ஐம்பது அடி நீளத்துக்கும் உட்பட்டவைதான். மூன்று பக்கங்களும் அடைத்து இருக்கும். முன்பக்கத்தில் மட்டும் தூண்களோடு கூடிய திறந்தமுக மண்டபம் இருக்கும். இங்கெல்லாம் நந்தி பெரிய வடிவில் அமைக்கப்பட்டிருக்கிறது. இக்கோயில்களில் சிறப்பான மண்டபம் சாந்தகாரம் எனப்படும்; மக்கள் கூடும் இடம்தான் இந்தச் சாந்தகார மண்டபங்கள். நான்கு பக்கங்களும் திறப்புடைய மண்டபங்களாகத்தான் அமைந்திருக்கின்றன. கிராமத் தலைவர்கள் பலர் கூடவும், மற்றவர்கள் சுற்றியிருந்து பார்க்கவும் வசதியாக அமைந்திருக்கிறது. இங்கு தலைவருக்கு ஆசனமாக ஒரு பீடம் இருக்கிறது. லட்கான் கோயிலிலே இந்த மண்டபத்தைப் பார்க்கலாம். ஆனால் தூண்களுக்கு இடையில் உள்ள வெளியை இன்று சுவர் வைத்து மூடியிருக்கிறார்கள். கோண்டிகுடிக்குப் பக்கத்தில் உள்ள கோயில் ஒன்றில் இரண்டு சிற்ப வடிவங்கள்: ஒன்று பிரம்மா, மற்றொன்று அனந்தநாராயணர். பிரம்மாவின் மூன்று முகங்கள் தெரிகின்றன. ஒரு முகம் பின்புறம் இருப்பதாகக் கற்பனை. தாமரை மலரில் ஒரு காலை மடக்கி, மற்றொரு காலைத் தொங்கவிட்டிருக்கும் அழகு பிரமாதமாக இருக்கிறது. நான்கு திருக்கரங்களுடன் இந்த நாரணர் திருமகனை நான்முகனைப் பார்த்தபோது இவன்தான், பின்னர், சோழ மன்னர்கள் உருவாக்கிய பிரம்மாவுக்கெல்லாம் அச்சாக இருந்திருப்பானோ என்று எண்ண இடம் இருக்கிறது. திருவையாற்றை அடுத்த கண்டியூரில் உள்ள பிரம்மாவோ அல்லது தஞ்சைக் கலைக்கூடத்தின் நடுநாயகமாய் அமைந்திருக்கும் பிரம்மாவோ இங்கு எழுந்தருளி வந்திருக்கிறாரோ என்ற பிரமைதான் ஏற்பட்டது எனக்கு. அனந்த நாரணர் அவ்வளவு அழகாக இல்லைதான்.

இங்குள்ள கோயில்களில் எல்லாம் அழகான கோயில் துர்க்கை கோயில்தான். அதுதான் பெரிய கோயிலும்கூட. கோயில் என்பது அடி நீளமும் முப்பது அடி அகலமும் உடையது. இக்கோயிலை அமைப்பில் பார்த்தால் தாராசுரம் ஐராவதேசுவரர் போலவே இருக்கும். மாடக் கோயில் போல் பத்தடி உயரத்துக்கு மேல்தான் கோயிலின் தளமே இருக்கிறது. முன் மண்டபம் நல்ல ராஜ கம்பீரன் மண்டபம் போலவே இருக்கிறது. அது இருபத்துநாறு அடி நீளம் இருக்கிறது. மண்டபத்தின் தூண்களில் எல்லாம் எண்ணிறந்த சிற்ப வடிவங்கள். ரிஷபாந்திகராய சிவன், கருடவாகன விஷ்ணு, மஹிஷமர்த்தினி, வராகமூர்த்தி எல்லாம் உருவாகியிருக்கிறார்கள். எல்லாம் பெரிய வடிவங்கள், சிறந்த வடிவங்களும்கூட. வழக்கம்போல் தூண்களைப் பல ஆடவரும் பெண்டிரும் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிறார்கள். உள்கோயிலைச் சுற்றி வெளியே நல்ல வராந்தா போட்டதுபோல் கோயிலை அமைத்திருக்கிறார்கள். இந்தக் கோயில் சிகரம் சிறியதுதான், அதுவும் சிதைந்திருக்கிறது.

இந்தத் துர்க்கை கோயிலுக்கு அடுத்தபடியாக நாம் காண வேண்டியது ஹுச்சப்பையா கோயில். இது துர்க்கை கோயிலைப் போல் பெரிய கோயில் அல்ல. இக்கோயிலிலும் ஒரு சிறு முன் மண்டபம் இருக்கிறது. சிகரம் கலசம் இல்லாது மொட்டையாகவே நிற்கிறது. இங்கு பிரம்மா ஒருவரும் கஜலக்ஷ்மியும் சிற்ப வடிவங்களாக இருக்கிறார்கள். இருவரில் கஜலக்ஷ்மிதான் கொஞ்சம் கலை அழகு உடையவளாக இருக்கிறாள். கோயில் விதானத்தில் மயில் மேல் ஆரோகணித்து வரும் கார்த்திகேயனது போர்க்கோலம் உருவாகியிருக்கிறது. எல்லாமே அர்த்த சித்திர வடிவங்கள்தாம். பின்னர், ஹுச்சிமல்லிகுடி என்று ஒரு கோயில். அதுவும் பெரிய கோயில் அல்ல; முன் மண்டபத்துக்குத் தூண்களிலும் சுவர்களிலும் சிற்ப வடிவங்கள் இல்லை. இக்கோயிலின் சிகரம் பிந்திய காலத்தில்தான் கட்டப்பட்டிருக்க வேண்டும் போலும். அதுவும் இன்று மொட்டையாகவே நிற்கிறது.

இத்தனை கோயில்களோடு கோயிலாய் ஒரு சமணக் கோயிலும் உருவாகியிருக்கிறது. அதனையே மேகுடி சமணக் கோயில் என்கின்ற

னர். இவ்வட்டாரத்தில் உருவான கடைசிக் கோயில் இதுதானும். 634-ல் கட்டியிருக்கிறார்கள். சில பகுதிகள் முற்றுப் பெறாமலே நின்றிருக்கின்றன. என்றாலும் மற்றக் கோயில்களை விடத் திறமையான முறையில் கட்டப்பட்ட கோயில் இதுதான். ஆம்! ஆண்டுகள் செல்லச் செல்ல அனுபவம் வளர வளரத் திறமையும் அதிகரிக்கத்தானே செய்யும்.

இனி இந்தக் கோயில்களையே சுற்றிக் கொண்டிருக்க வேண்டாம். இங்கு குடைவரைக் கோயில்கள் இரண்டு பிரசித்தமானவை. அவற்றையும் பார்த்து விட்டுத் திரும்புவோம். அவற்றில் ஒன்றுதான் ராவண படிக்குகை. இக்குடைவரை ஊருக்கு வடமேற்கு மூலையில் இருக்கிறது. குடைவரை என்பதினாலே மலையைக் குடைந்து அமைத்த கோயில் என்பதைத் தெரிந்து கொள்ளலாம். இக்குடைவரையில் முன்னே ஒரு முக மண்டபம் இருக்கிறது. இதனை அடுத்து ஒரு கருவறை; முக மண்டபத்தின் முன்னால் இருப்பது இரண்டு தூண்கள். எல்லாம் மலையைக் குடைந்து செதுக்கி அமைக்கப்பட்டவை. இந்த முகமண்டபத்தின் இரு மூலைகளிலும் இரண்டு அறைகள். அங்குதான் அழகு அழகான சிற்ப வடிவங்கள், இடப் பக்கத்தில் பத்துத் திருக் கரங்களோடு கூடிய நடராஜர். இதுபோன்ற சந்தியா தாண்டவ மூர்த்தியை நான் தமிழ் நாட்டில் பார்க்கவே இல்லை. இவர் அளவில் பெரியவர் என்பது மட்டுமல்ல; அழகிலுமே உயர்ந்தவர்தான். தாண்டவருக்கு இடப்புறம் பார்வதி. அவளை ஒட்டிக் குதிரைத் தலையுடன் ஒரு பெண். இது யாரென்று அறிந்து கொள்ள முடியவில்லை. வலப்புறம் மோதகம் ஏந்திய கையுடன் விநாயகர். சுவரை ஒட்டிய தூண் ஒன்றில் அர்த்தநாரியின் வடிவம். இதற்கு எதிர்ப்புறம் பாம்பு ஒன்றின் வாலைத் தூக்கிப் பிடித்து நிற்கும் சூலபாணி. அடுத்த பக்கத்தில் ஹரிஹர வடிவம். இன்னும் இங்குள்ள வராகர் நல்ல காத்திரம் உள்ளவராகவும் கம்பீரம் நிறைந்தவராகவும் இருக்கிறார். நமக்குத்தான் தெரியுமே. சளுக்கியர் கொடியிலே வராகம்தான் எழுதப்பட்டிருக்கும் என்று. சொல்லப் போனால் வராகரே சாளுக்கிய மன்னர்கள் வழிபடு கடவுளர் போலும். வராகருக்கு அடுத்தபடியாகத் துர்க்கை வழிபாடு சாளுக்கியர்களிடையே சிறந்திருந்திருக்கிறது. அதனாலேயே துர்க்கைக்கு என்று ஒரு தனிக்கோயில். இன்னும் இந்தக் குடைவரையில் ஒரு மகிஷமர்த்தினியின் சிற்ப வடிவம். அவள் ஏந்தியுள்ள திரிசூலம் மகிஷத்தின் உடலில் பாய்ந்து வெளி வந்திருக்கிறது. இக்குடைவரையில் இன்னும் ஓர் அதிசய வடிவம். அது சிவபெருமானுடையது; பக்கத்தில் பார்வதியும் பிருங்கி முனிவரும் இருக்கின்றனர். சிவனது சடா மகுடத்துக்கு மேலே மூன்று பெண்களின் தலை தெரிகிறது. அவர்களே கங்கை, யமுனை, சரஸ்வதி என்கின்றனர். ஆம் கங்காதரனான சிவன் கங்கையைத் தலையில் ஏற்றபோது யமுனையையும் சரஸ்வதியையும் சேர்த்துத்தானே ஏந்தியிருக்க வேண்டும் என்று எண்ணியிருக்கிறான் சிற்பி. அந்தக் கற்பனை இப்படி வடிவெடுத்திருக்கிறது.

இன்னும் இக்குடைவரை மலையின் அடுத்த பக்கத்தில் அதையே மீனுபஸ்தி என்கின்றனர். இது சமணக் குடைவரை. இங்குள்ள பிரதான மூர்த்தி பார்சவநாத சேஷபாணி. நாக நாகினியருடன் உருவாகியிருக்கிறார் இவர். இங்கு விதானத்தில் ஒரு பெரிய தாமரை நடுவிலும், நான்கு மூலைகளிலும் நான்கு சிறு தாமரைகளும் செதுக்கப்பட்டிருக்கின்றன. இருக்கின்ற இடைவெளியில் எல்லாம் மீன்கள், இப்படி ஒரு சிற்ப கோலம். இக்குடைவரை வாயிலில் இரண்டு துவாரபாலகர்கள் கம்பீரமாக மணிமகுடம் அணிந்து நிற்கின்றனர். முன்னர் கோயிலில் கண்ட சிற்ப வடிவங்களை விட இக்குடைவரையில் காணும் சிற்பங்கள் அழகானவை. இச்சிற்ப வடிவங்கள்தாம் பின்னர் தமிழ் நாட்டில் பல்லவ மன்னர்கள் உருவாக்கிய சிற்பங்களுக்கு எல்லாம் ஆதாரமாக இருந்திருக்க வேண்டும். ஆம்! தமிழன் நல்லது எங்கே இருந்தாலும் அதை எடுத்து அதற்கு ஒரு தனித்தன்மையையும் அளித்து அதனைத் தனதாக்கிக் கொள்வானே. ஐஹொளே குடைவரையில் இருக்கும் போது ஏதோ தமிழ்நாட்டின் குடைவரை ஒன்றில் தானிருக்கிறோம் என்ற பிரமையே தோன்றும். ஆம்! அன்றே உருவாக்கியிருக்கிறார்கள் நல்லதொரு தேசிய ஒருமைப் பாட்டைக் கலையுலகம். இந்த உணர்ச்சி நமக்கு வந்தால் போதும்;

# தேநீர் குளிர்ந்தது!

ஸ்ரீராமச்சந்திர டாகுர்



"எங்கே போய் விட்டான் அந்தச் சோமாறி ராஸ்கல் பயல்?"

ஸ்டுடியோவுக்குள் நுழைந்த கதாநாயகியின் கால்கள் இலேசாக நொடித்துக்கொண்டவே, டைரக்டர் கன்னையால் பறந்து பாய்ந்துப் போய்விட்டார். ஓடிப் போய் அவள் காலடிகளில் அமர்ந்து இலேசாகப் பாதங்களைப் பிடித்து உருவி விடலானார். அவர் கவலை முறையைப் பார்த்தால், 'கதாநாயகி ஒரு வேளை நாட்டியமாட வந்திருப்பாளோ? அந்த விபத்து அவளை அப்படிக் கதிகலங்கிப் போகச் செய்துவிட்டதோ?' என்ற பிரமையை உண்டுபண்ணியது.

கதாநாயகியின் கால்களைத் தடவிக் கொடுக்கும்பொழுதுதான். ஆகா! அவருக்கு என்ன இன்பம்! அவர் பதற்றக் குரல் காதில் விழுந்ததோ இல்லையோ, என்ன, ஏது என்று சமாசாரம் விளங்காத புரொட்யூஸர் பதறிப் போய் ஓடி வந்தார். வந்த வேகத்தில் அவருக்கு மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கியது. தம் சிரமத்தைச் சிறிதும் பொருட்படுத்தாமல் அவரும், "எங்கே போய் விட்டான் அந்தச் சோமாறி ராஸ்கல் பயல்?" என்று கத்தினார்.

ஆனால் உண்மையில் அன்று கதாநாயகி படத்தில் நடனமாட வேண்டிய கட்டமோ, அதைப் படமெடுக்க வேண்டிய திட்டமோ இல்லை. பார்க்கப் போனால், தன் கவர்ச்சி மிகுந்த எழிலைக் காட்டி, டைரக்டரையும், புரொட்யூசரையும் ஆட்டிப் படைக்க வந்திருந்தாளேயொழிய வேறு ஒன்றும் இல்லை.

பெட்ரோல் கூப்பன்கள் காரணமாக அந்தப் புரொட்யூஸரின் கையில் எப்படியோ கொஞ்சம் பணம் சேர்ந்திருந்தது. அதைக்கொண்டும், டைரக்டர் கன்னையாவின் உதவியையும் கொண்டு 'ஷீரோயின்' கமலாவைக் கதாநாயகியாக்கி அவர் ஒரு படக் கம்பெனியைத் தொடங்கினார்.

டைரக்டர் கன்னையாவுக்குத் தெரிந்த வரையில் உலகத்தில் ஒரே ஒரு பெண்மணிதான் அறிவு மிக்கவளாகத் திகழ்ந்தாள். அவள்தான் ஷீரோயின் கமலா. கன்னையா தமது ஆசிரியரான டைரக்டர் ஷேர் கானுக்கு. நாளொன்றுக்கு ஆறு பீடா வீதம் ஆறு ஆண்டுகள் விடாமல் வாங்கிக் கொடுத்ததன் பயனாக உதவி டைரக்டராகிப் பிறகு டைரக்டராகவும் ஆனவர். அதுமட்டுமா? ஷீரோயின் கமலாவைக் கிட்டத் தட்டப்



பத்து வருடங்கள் விடாமல் பைத்தியமாகச் சுற்றியும் பானையைச் சுரண்டாமல் தப்பியவர். கமலாவும் என்ன சாமான்யப்பட்டவளா? பந்தயத்தில் ஓடி இளைத்த குதிரையைப் போல் ஸ்டுடியோக்களில் பிரபல கதாநாயகியாகவே வாழ்ந்து ஓய்வு பெற்றவள். எரிந்து சாம்பலாகியும் முறுக்குப் பிரியாத முப்புரிக் கயிற்றைப் போலத் தன்னை இன்னும் பெருங் கதாநாயகியாகவே பாவித்து வருபவள்.

ஒரு காலத்தில் அவளுக்கு இணை அவளேதான் என்று சொல்லுமளவுக்குப் புகழ் பெற்றிருந்தவள். இன்றுகூட அந்த மிடுக்குக் குறையவில்லை. பெருங் காயம் வைத்த பாண்டமாக மணப்பவள். அவளது அந்தப் பழைய நிலையைப் பாதுகாப்பதற்காகவே அரைக் காசுக்கு விதியற்ற இந்த டைரக்டரும் புரொட்யூஸரும் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தார்கள்; கால்களைப் பிடித்துக் கரிசனம் காட்டினார்கள்.

அது எப்படியாவது போகட்டும்.

இன்று மன்னர் விக்கிரமரின் மாபெரும் மாளிகையைப் படம் பிடிப்பதாகத் தீர்மானமாகியிருந்தது. எனவே காமிராமேனும், கனம் தூக்கம் தாங்கிய கண்களோடு அரியாசனத்தின் மீது ஒளியைப் பாய்ச்சி, 'காரெக்ட்' என்று கூப்பாடு போட்டார்.

அவர் குரலைத் தொடர்ந்து தான் டைரக்டர் தன்னுலாலும், "எங்கே போய் விட்டான் அந்தச் சோமாரி ராசாப் பயல்?" என்று கூவினார்.

அப்புறம்.... அப்புறம் என்ன? டைரக்டர் தன்னுலாலின் உதவியாளனான சக்கூரும் தன்னுலாலைத் திருப்திப்படுத்தும் நோக்கத்துடன் கூப்பாடு போட்டான். "டேய் சோமாரி ராசா! எங்கேடா போய்த் தொலைஞ்சே! திருட்டுப் பயலே!"

சக்கூர் கூவவே, அவன் உதவியாளனை நிரஞ்லால் மட்டும் பேசாமல் இருக்கலாமா? இருந்தால்தான் நன்றா யிருக்குமா? அவனை உரக்கப் பெயர் சொல்லி அழைத்ததுடன் வசைமாரியும் பொழிந்தான்.

மூவர் குரலும் ஸ்டுடியோ முழுவதுமே எதிரொலி போல் எழும்பியது. எங்கு பார்த்தாலும் 'ராசா! ராசா!' என்ற குரல் ஒலித்தது. சிறிது நேரம் சும்மா இருந்த டைரக்டர் தன்னுலால் புரொட்யூஸரை ஒருமுறை பார்த்து விட்டு ராசாவை ரசாபாசமாகத் திட்டலானார்.



இந்தத் தடவை திட்டுக்குத் தகுந்த பலன் கிடைத்தது. ஸ்டுடியோவுக்கு வெளியே சில எக்ஸ்ட்ரா நடிக நடிகைகள் கூடி ஒருவரை யொருவர் கேலி செய்து சிரித்துப் பேசியவண்ணம் தேநீர், சிகரெட் முதலியவை அருந்தி மகிழ்ந்து கொண்டிருந்தனர். அவர்களுக்கிடையே தான் அகிலம் புகழ் சக்கரவர்த்தியும் மகா பராக்கிரமசாலியுமான மகா ராஜாதி ராஜ விக்கிரம மன்னர், மகன் லால் டிரஸ் வாலா, ஊதல் மல்ஜி ஆகிய கடைகளிலிருந்து வாடகைக்கு வாங்கப்பட்ட பகட்டான ஜரிகை ஆடைகள் அணிந்து கம்பீரமாக அமர்ந்திருந்தார். அவரை அழைப்பதற்காக வேண்டித்தான் அத்தனை வசவுகளும் திட்டுக்களுமாக ஸ்டுடியோ அமர்க்களப் பட்டுக் கொண்டிருந்தது.

அந்த மன்னரின் உண்மைப் பெயர் குலாம் நபியாகும். அன்று அவன் அரியாசனத்தில் அரச வேடம் தாங்கி அமருவதாக இருந்தமையால் எல்லோரும் அவனை ராசாவென்று அழைத்தனர். பார்க்கப் போனால் அவனும் ஓர் 'எக்ஸ்ட்ரா' நடிகன்தான். குலாம் நபி நல்ல உயரமானவன். கட்டு அமைந்த உடல் படைத்தவன். இரண்டு நாளைக்கு அவன் அரசனாக்கப்பட்டிருந்தான். அவன் கவனம் முழுவதும் அந்த நேரத்தில் கேலிப் பேச்சிலும் சிரிப்பிலும் ஈடுபட்டிருந்தது என்பதைக் காட்டிலும் தேநீர்க் கோப்பைகளின் சலசலப்பு ஒலியில் லயித்திருந்தது என்றுதான் சொல்ல வேண்டும்.

## தலைவலி உங்களைத் தொல்லைப் படுத்தும்போது...









ஸாரிடான் வலிகளிலிருந்தும், நோவுகளிலிருந்தும், துரிதமாக, நிச்சயமாக, கெடுதல் எதுவுமின்றி நிவாரணம் அளிக்கிறது. தலைவலி, உடல் வலி, பல்வலி, ஜுரம் வரும்போலிருப்பது, சாதாரண உடல் கோளாறுகள், இவற்றிலிருந்து நிவாரணம் பெற ஸாரிடான் சாப்பிடுங்கள்.

பெரியவர்களுக்கு: 1 வில்லை.
குழந்தைகளுக்கு: ¼ லிருந்து ½ வில்லை வரை.




# ஸாரிடான்

'ரோஷ்'

ஒரே வில்லை போதும்
ஒரு வில்லை 13 ந. பைசா

துரிதமாக, நிச்சயமாக, அபாயமின்றி, வலியைப் போக்குகிறது, ஆசுவாசப்படுத்துகிறது, புத்துணர்ச்சி பூட்டுகிறது

'ரோஷ்' தயாரிப்பு ஸோல் டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: வால்டாஸ் லிமிடெட்

JWT/VT-3526

நொடித்துக் கொண்டதால், ஹீரோயின் கமலா தாங்க முடியாத வேதனையைப் பொறுத்துக் கொண்டு, பணிப்பெண் உருவத்தில் டைரக்டரையும், புரொட்யூசரையும் ஆட்டிப் படைத்துக் கொண்டு ஒரு மூலையில் வந்து நின்றாள். புரொட்யூஸரும், டைரக்டரும் அவளுடைய இந்த அருளுக்கு அடிபணிந்து நின்றனர். அந்நேரம் ஹீரோயின் கமலாவின் முகத்திலே அவள் மாபெரும் தியாகம் ஒன்று புரிந்துவிட்டது போன்ற பாவனை துளிர்த்தது.

ஒளி பாய்ச்சப்பட்டது. செட்டு முழுவதும் ஒளியினால் தகதகவென்று பிரகாசித்தது. நூற்றுக்கணக்கான 'எக்ஸ்ட்ரா'க்கள் தலை வணங்கி நின்றனர். அது மன்னாதி மன்னர் விக்கிரமரின் அவையல்லவா? காலில் விழுந்து கெஞ்சாத தோஷமாகக் கேட்டுக் கொண்ட பின், விள்ளாமல், குறையாமல் பத்தாயிரம் ரூபாயைப் பெற்றுக் கொண்டு கதா போக்கிரியாக நடிக்க ஒப்புக் கொண்டவன் ராசாவுக்கு ஒருபுறத்தில் நின்றிருந்தான். அதேபோல் இருபதினாயிரம் ரூபாய் பெற்ற கதாநாயகி பணிப்பெண் உருவத்தில் ராசாவுக்கு எதிரே தலை குனிந்த வண்ணம் நின்றாள். மன்னாதி மன்னர் விக்கிரமராக நாளொன்றுக்கு ஒரு ரூபாய்க் கூலி பெற்றுக் கொண்டு குலாம்நபி அரியாசனத்தில் அமர்ந்திருந்தான். நாற்புறமும் அமைதி நிலவியிருந்தது. காட்சி தொடங்கியது. எல்லோருடைய பார்வையும் ராசாவையே நோக்கின. ராசாவுக்குப் பசி மயக்கம் சற்றுத் தெளிந்தாற்போலிருந்தது.

மன்னர் விக்கிரமர் ஒருமுறை எல்லோரையும் பார்த்தார். எல்லோரும் கைகூப்பிய வண்ணம் அவர் எதிரே நின்றனர். இடரென்று ராசாவின் பார்வை ஒரு மூலையில் நின்ற எலெக்ட்ரீஷியனை நோக்கியது. அவன் கையில் ஒரு தேநீர்க் கோப்பை காட்சி அளித்தது. அவன் சிறுகச் சிறுகச் சுவைத்தவண்ணம் தேநீர் பருகிக் கொண்டிருந்தான். அதைக் கண்டதும் ராசாவின் நாவறட்சி பன்மடங்கு மேலோங்கியது.

காட்சி தொடங்கிற்று.

கதா போக்கிரி மன்னாதி மன்னரின் பெருமையைப் பறைசாற்றி ஒரு நிமிட நேரம் உணர்ச்சி மிகுந்த வசனங்களை உதிர்த்தான். கடைசியில் தலை வணங்கி மிகுந்த விசுவாசத்துடன், ''மன்னர் உத்தரவு என்னவோ?'' என்று கேட்டான்.

மன்னர் விக்கிரமர் அதற்குப் பதில், ''கொண்டுவா அந்தப் பணிப் பெண்ணை!'' என்று கூறவேண்டும். டைரக்டர் இதை முன்கூட்டியே பலமுறை படித்துப் படித்துச் சொல்லிக் கொடுத்திருந்தார். காட்சி நடக்கும்போது தருணம் பார்த்து அந்த வசனத்தைச் சொல்லுமாறு சமிக்ஞையும் செய்தார். ஆனால் ராசா வெறும் ராசாவல்லவே! மன்னாதி மன்னராயிற்றே! எனவே, கதா போக்கிரியை திரும்பிப் பார்த்து, ''கொண்டுவா தேநீர்க் கோப்பையை!'' என்றார்.

இதைக் கேட்டதும், பத்தாயிரம் ரூபாய் கதா போக்கிரியும், இருபதினாயிரம் ரூபாய் ஹீரோயினும் வியப்பினால் வாயடைத்துப் போனார்கள். டைரக்டருக்கு வந்த கோபத்தைக் கூற முடியாது. ''எங்கிருந்து இந்தக்

கழுதைப் பாலைப் பிடித்து வந்தீர்கள்?'' என்று வடிவேலு சீறி விழுந்தார்.

உதவியாளர்களும் அவரது அந்தச் சொற்றொடர்களைத் திரும்பக் கூறினர். ராசாவின் ஒரு புறம் டைரக்டரும், மறுபுறம் புரொட்யூசரும் நல்ல பாம்பெனச் சீறிக் கொண்டு நின்றனர்.

ராசா தன் தவற்றை உணர்ந்தான். அக் காட்சியை மீண்டும் படம் பிடிக்க ஏற்பாடாயிற்று. ஒவ்வொருவராகத் தன் எதிரே நிற்கும் சகலரையும் ஒரு முறை பார்த்தான். அவனுக்குத் தான் ஒரு மன்னர் மன்னவன் என்ற நினைப்பே வந்து விட்டது. அவன் ஒரு வார்த்தை சொன்னால் போதும். நூற்றுக் கணக்கானவர்கள் வாளை உருவத் தயாராக நின்றார்கள். அவனெதிரே யாருமே குனிந்த தலை நிமிரவில்லை. அப்படியே பார்வையை ஓட்டி வந்தவனுக்குக் காலரியில் நின்று கொண்டு எலெக்ட்ரீஷியன் தேநீர் அருந்தும் காட்சி மீண்டும் தென்பட்டது. நாற்புறமும் அமைதி நிலவி இருந்தது. மணி போட்டால் அந்தச் சத்தம் கூடத் தெளிவாகக் கேட்கும் அளவுக்கு அமைதி.

டைரக்டர் குரல் கொடுத்தார்: "ரெடி கிபார் டேக்! — ரெடி!''

உதவியாளனும் கவினான்: "சைலன்ஸ்'' உதவியாளனின் குரல் கேட்டு எல்லோரும் மௌனமாயினர்.

ராசா சிறிது சிறிதாகத் தன்னையே மறந்து கொண்டிருந்தான். ஆவேசத்திலும் அவன் உடல் கொதித்துக் கொண்டிருந்தது. அவன் மீண்டும் மன்னர் விக்கிரமாதித்தர் என்ற முறையில் ஒவ்வொருவராக அனைவரையும் பார்த்தான். இம்முறை அவன் கண்களில் தீப்பொறி பறப்பதாகத் தோன்றியது. எதிரே பத்தாயிரம் வாங்கும் கதாபோக்கிரியும், இருபதாயிரம் வாங்கும் ஹீரோயினும் விக்கிரமனுடைய மாறும் அந்த முகபாவத்தைத் திகைப்புடன் நோக்கினர்.

இதற்குள் டைரக்டர், "கோ ஆன்!'' என்று உத்தரவிட்டார்.

காமிரா இயங்கத் தொடங்கியது. முன் போலவே கதா போக்கிரி இரண்டு நிமிடங்கள் மன்னர் புகழ் பாடிக் கடைசியாக, "மன்னர் உத்தரவிட வேண்டும்!'' என்று வேண்டுகிறான்.

உடனே எல்லோருடைய பார்வையும் மன்னர் விக்கிரமர் பக்கம் திரும்பியது. மன்னர் விக்கிரமர் வாய் திறந்து சொல்வதற்கு முன்பாக அவரது பார்வை காலரியில் கிடந்த தேநீர்க் கோப்பை மீது விழுந்தது. கண நேரத்துக்கு அவன் உலக விஷயங்கள் அனைத்தையும் மறந்து, தன் முழு பலத்தையும் ஒன்று கூட்டி, "கொண்டு வா உடனே ஒரு தேநீர்க் கோப்பை!'' என்று உத்தரவிட்டான்.

டைரக்டர் இரண்டு கைகளாலும் தம் தலையைப் பிடித்துக் கொண்டார். "அப்பன் மகனே!'' என்று இரைக்கத் தொடங்கினார்.

"ஜாக்கிரதை! மேலே பேசினால் தெரியுமா சேதி?'' என்று சிங்கம் போல் கர்ஜித்துக் கொண்டே ராசா பாய்ந்து டைரக்டரின் எதிரில் போய் நின்றான்.

அவனது குரல் ஸ்டுடியோ முழுவதும் எதிரொலித்தது. அப்படிப்பட்ட பயங்கரக் கர்ஜனையை இதுவரை யாரும் கேட்டதில்லை. ராசா அரியாசனத்தை ஒருமுறை அலட்சியமாகப் பார்த்துவிட்டு, "முட்டாள்கள்! ஒரு கப் தேநீர் கொண்டு வாருங்களடா! நீங்கள் எல்லோரும் என் ஊழியர்கள். நான் உங்கள் மன்னன்; மன்னாதிமன்னன்! ஆமாம், போய்த் தேநீர் கொண்டு வாருங்கள்! 'எக்ஸ்ட்ரா ஸ்ட்ராங்'காகக் கொண்டு வாருங்கள்! உம், சீக்கிரம் போங்கள்! நின்று கொண்டு எதற்காக என் முகத்தைப் பார்க்கிறீர்கள்?" என்று கேட்டான். அடுத்த கணம் அதே உணர்ச்சி வேகத்தில் தடாரென்று மன்னர் விக்கிரமர் தரையில் விழுந்தார்.

அப்புறம் என்ன? ஸ்டுடியோ முழுதும் அங்கே கூடிவிட்டது. அங்கே குழுமியிருந்த ஒவ்வொருவர் கையிலும் ஒரு கோப்பைத் தேநீர் இருப்பதாக அவனுக்குத் தோன்றியது. ஆனால் அவன் விழிகளைக் கண்ணீர் நிறைந்து அடைத்து மறைத்தது. தரையில் கிடந்த வண்ணமே அவன் மீண்டும் ஒருமுறை உரக்கக் கூவினான்: "நல்ல தேநீராக ஒரு கோப்பை உடனே கொண்டு வாருங்கள்!"

அப்புறம் அவன் காதுகளில் ஏராளமான தேநீர்க் கோப்பைகள் உராயும் ஒலி கேட்டது. மகா ராஜாதி ராஜ மகா பராக்கிரம சாலியான விக்கிரம மன்னர் அமைதியே உருவாகத் தரையில் கிடந்தார். இரண்டாயிரம் ரூபாய் செலவழித்து ஜோடனை செய்யப்பட்ட காட்சிகள் வீணாகும் டைரக்டர், அவரது உதவியாளர்கள் ஒவ்வொருவரும் மாறி மாறிக் குலாம் நபியைத் திட்டலாயினர். ஸ்டுடியோ முழுவதும் ஒரே சந்தை இரைச்சலாகிவிட்டது. இரண்டொருவர் மட்டும்தான் ராசாவைக் கவனித்துக்கொண்டு அவனருகில் அமர்ந்திருந்தனர்.

ஆனால் இப்பொழுது ராசாவுக்கு எந்தக் குரலுமே கேட்கவில்லை. அவனுக்கு இடையிடையே தேநீர்க் கோப்பைகள் ஒலிப்பது போன்ற பிரமைமட்டுமே ஏற்பட்டது. கொஞ்சம் கொஞ்சமாக ராசாவின் கண்களுக்கெதிரே அந்த ஸ்டுடியோவே ஒரு பெரும் கோப்பையாக உருவெடுத்துக் காட்சி தரத் தொடங்கியது. உலகத்துச் சத்தம் முழுவதும் அவனைப் பொறுத்தவரை அடங்கிக் கொண்டே வந்தது. அவன் கண்களுக்கெதிரே ஆவி பறக்கும் தேநீர் மட்டும் தோன்றியது. அவன் தன்னை மறந்து முணுமுணுத்தான்: "ஆகா! என்ன தேநீர்! என்ன ருசி! என்ன சூடு!"

தேநீர் என்னும் கற்பனைப் பொருளிலே ராசா தன் தாகமனைத்தையும் தணித்துக் கொள்ள முயல்கிறானோ என்று கூட எண்ணத் தோன்றியது. நேரம் ஆக ஆக அவன் இனம் தெரியாத இருட்டுக் குகைக்குள்ளே புகுந்து போய்க் கொண்டிருப்பதாகவும் பட்டது.

பத்தாயிரம் ரூபாய் வாங்கிய வில்லனும், இருபதினாயிரம் ரூபாய் வாங்கிக்கொண்ட ஹீரோயினும் அலுத்துச் சலித்துக் கொண்டு ஒருபுறம் சென்று அமர்ந்து தேநீர் அருந்தலாயினர். டைரக்டரும் கவலையைத் துறந்து, இன்னும் சிறிது நேரத்தில் ராசாவின் மூர்ச்சை தெளிந்து விடும், மீண்டும் படப் பிடிப்பு தொடங்கலாம் என்ற நம்பிக்கையோடு தேநீரைச் சுவைத்துப் பருகலானார்.

ஆனால் அவர் உதவியாளர் மட்டும் தொடர்ந்து திட்டிக் கொண்டிருந்தார். ராசாவின் உடலில் ஒருவிதத் துடிப்பையும் காணவில்லை. மூன்று கோப்பைத் தேநீர் அவனுக்காகத் தருவிக்கப்பட்டிருந்தது. அவ்வருகிலேயே அவனுடைய உடலைப் போலவே அதுவும் குளிர்ந்து கொண்டும் இருந்தது.

ஆம்! இரண்டு ரூபாய் ஊதியம் பெற்று நடிக்க முன் வந்த மன்னர் மன்னரான விக்கிரமாதித்த சக்கரவர்த்தி தம் வாழ்க்கைக்குக் கடைசி வணக்கம் செலுத்தி விட்டு மீளா உறக்கம் கொண்டிருந்தார்.

குஜராத்திக் கதை: தமிழாக்கம்:—ரா. வீ

### நல்ல வைத்தியர் !

ஒரு வெளிநாட்டு யாத்திரிகர் சீனாவில் சுற்றுப் பிரயாணம் செய்து கொண்டிருந்தார். அவருக்குத் திடீரென்று தலைவலியும், ஜுரமும் ஏற்பட்டன. நல்ல டாக்டரிடம் மருந்து வாங்கிச் சாப்பிட வேண்டும் என்று நினைத்து ஒரு கடைக்காரரை அணுகி, "இந்த ஊரில் யார் நல்ல டாக்டர்?" என்று கேட்டார்.



"இதோ இருக்கிறாரே சிங் கங் — சூ அவர் ரொம்ப நல்ல டாக்டர். ஒரு சமயம் அவர் என் உயிரையே எமன் வாயிலிருந்து காப்பாற்றினார்."

"அதெப்படி?"

"எனக்கு ஒரு தடவை ஜுரம் வந்தது. டாக்டர் வின்யூ சிங்கிடம் மருந்து வாங்கிச் சாப்பிட்டேன். ஜுரம் அதிகமாகி விட்டது. அவரை விட்டுவிட்டு டாக்டர் மின் க்யூ சின்னிடம் என் உடம்பைக் காண்பித்தேன். அவர் கொடுத்த மருந்தைச் சாப்பிட்டதில் முன்பை விட ஜுரம் ரொம்பக் கடுமையாகி மரண வாயிலை எட்டிவிட்டேன். அப்போதுதான் ஊரில் உள்ளவர்கள் எல்லோரும் டாக்டர் சிங் கங் சூவிடம் வைத்தியம் செய்து கொள்ளச் சொன்னார்கள். அவரிடம் போனேன். அப்போது அவர் வெளியூர் போயிருந்தார். வருவதற்கு ஒரு வாரம் ஆகும் என்றார்கள். இப்படி டாக்டர் சிங்கங் சூ என்னைக் காப்பாற்றி விட்டார்!"

# இந்த காமிராவைப்பற்றி நவீனம் ஒன்றும் இல்லை

ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா எப்பொழுதும் ஒரேமாதிரிதான். வலுவுள்ளதாகும், நம்பகமானதாகும், மறுபடியும் மறுபடியும் நீங்கள் நல்ல படங்களை எடுப்பதற்கு அதை நம்பலாம். அதற்காக நீங்கள் மூளையைக் குழப்பவேண்டியதில்லை, கொக்கியை அழுத்தவேண்டியதுதான். உல்லாசப் பயணக்காட்சியோ குடும்பக் கோஷ்டியோ, அல்லது மிக முக்கியமான சம்பவங்களோ, இவையெல்லாம் மிக அழகாகப் படமாகிவிடுகின்றன.

ஜெர்மன் ஆக்பாவை புகைப்படத் தொழிலில் உலகப்புகழ்பெற்ற பெயராகச்செய்த அதே தொழிலியல் திறனுடன் ஆக்பா ஸிங்க்ரோ பாக்ஸ் காமிரா இப்பொழுது இந்தியாவில் தயாரிக்கப்படுகிறது. விலை ரூ. 32/- உள்ளூர் வரி தனி.







ஏகபோக
விநியோகஸ்தர்கள்: **ஆக்பா இந்தியா லிமிடெட்**

பம்பாய் . நியு டில்லி . கல்கத்தா . மதராஸ்

# பத்தினிக்கோட்டம்

### அத்தியாயம் முப்பத்தொன்று

## அக்கினி உறவு

நாழிகைப் பறை முழங்குவதுபோல் கடகடவெனச் சிரித்த பழையாறைச் சோழர், ''உண்மைதான் நண்பரே! இது முற்றிலும் உண்மை!'' என்றார்.

கையில் இருந்த ஓலை நறுக்கின் மீது மீண்டும் தன் பார்வையை அவசரமாக ஓட்டிய பெரும்பிடுகு முத்தரையர், ''என்னால் இதை நம்பவே முடியவில்லையே!.... சளுக்கிய விக்கிரமாதித்தனின் மகனான விநயாதித்தனுக்கா தங்கள் குமாரி இளங்கோப்பிச்சியைத் திருமணம் செய்து தர முடிவு செய்திருக்கிறீர்கள்?'' என்று சொற்கள் சிதறிக் குழறக் கேட்டார்.

''ஆமாம். காஞ்சிக் கோட்டையைக் காவல் புரிந்து வரும் அந்த வீரச் சளுக்கிய இளவரசனுக்குத்தான் என் மகளை வழங்க நிச்சயித்திருக்கிறேன்!'' என்று பெருமை வழியச் சொன்னார் பழையாறைச் சோழர்.

முத்தரையரின் முகம் அனற் பிழம்பாகச் சிவந்தது. வெறுப்பும் வேதனையும் திமிறவிட அவரை வெறித்து நோக்கி, ''பல்லவ இளவரசர் கோவிந்தவர்மருக்கே சோழ இளவரசியார் சொந்தம் என்பது நாடறிந்த விஷயமாக நிச்சயிக்கப்பட்டு விட்டபின், அதில் திடீரெனக் குறுக்கிட்டு இப்படி ஒரு முடிவுக்கு வர நீங்கள் எப்படித் துணிந்தீர்கள்?'' என்று மிகுந்த ஆத்திரத்துடன் வினவினார்.

''எண்ணங்களை இனிமையான எதிர் காலத்தின் மேல் திருப்ப முயலும் போது எத்தகைய துணிவுகளும் தாமாகவே பிறந்து விடும்!'' — சாவதான

ஜெகசிற்பியன்

மாகச் சொல்லிக் கொண்டே சாளரத்துப் பக்கம் போய் எட்டிப் பார்த்து விட்டுத் திரும்பிய பழையாறைச் சோழர் சட்டென்று நிமிர்ந்து, ''இந்தத் துணிவு எப்படி வந்ததென்று கேட்பதைவிட ஏன் வந்ததென்று கேளுங்கள், நண்பரே!'' என்றார் இரைந்த குரலில். ''எனக்கு இருக்கும் ஒரே செல்வமான என் அருமை மகளைப் பல்லவ இளவரசனுக்குத் தாரை வார்த்துத் தரவே நான் பெரிதும் விரும்பினேன். என்னுடைய அரசியல் நலன்கள் இந்த உறவினால் வளம் பெறும் என்ற ஆசை ஒரு புறம் இருந்தாலும், என் மகளின் இன்ப வாழ்க்கை ஒன்றையே அதில் பிரதான நோக்கமாகக் கொண்டிருந்தேன். அதன்பொருட்டே சளுக்கியப் படையெடுப்பின்போது பல்லவருடன் சேர்ந்து பணியாற்றியும், பிறகு வெற்றி பெற்ற சளுக்கியரோடு வளைந்து போகாமல் தோல்வியுற்ற பல்லவ மன்னருக்குத் துணையாகவும் இருந்து வந்தேன். எனது இந்த உறுதிப்பாட்டான நோக்கத்தை ஒரே விநாடியில் தகர்த்து விட்டான் உங்கள் பல்லவ இளவரசனான கோவிந்த வர்மன். ஆம், அன்பரே! பல்லவபுரம் அரண்மனைக் கோட்டையில் சிறைப்பட்டிருந்த அவன், என் மகளின் துணை கொண்டு வெளியே வந்த விஷயத்தைத்தான் குறிப்பிடுகிறேன். அன்றொரு நாள் மண்டபப்பட்டுக் குகைக் கோயிலில் அவன் அவ்விஷயத்தைத் தெரிவித்த அக்கணமே அவன் மீது நான் வைத்திருந்த உயர்வான எண்ணம் அனைத்தும் உலர்ந்து போயின. ஒரு பெண்ணின் துணையால் சிறையிலிருந்து தப்பி வருபவன் நிச்சயமாக வீரனாயிருக்க முடியாது. அப்படிப்பட்ட ஒரு கோழை இளவரசனிடம், வீர சோழிய பரம்பரையில் உதித்த வீராங்கனையான என் மகளை ஒப்படைக்கவும் இயலாது. உலகமறியா இளம் பெண்ணின் மனத்திலே காதல் என்னும் பொய்யான மயக்கத்தை ஏற்றி, அவளைத் தன் காரிய சாதனைகளுக்காகப் பயன்படுத்திக் கொள்ளும் ஒரு சுயநலக்காரனாகவே அவனைத் தீர்மானித்து விட்டேன். என் அன்பு மகள் இந்த அரண்மனையிலிருந்து வெளியேறி, ஆலம்பாக்கம் என்னும் சிற்றூரின் சிறு குடிலில் போய் இருந்து வருவதற்குக் காரணகர்த்தனே அவன் தான் என்றும் எனக்குத் தோன்றுகிறது. தன் சுயநலத் திட்டங்களுக்குத் தந்திரமாக அவளைப் பயன்படுத்திக் கொள்ளவே அப்படி ஒரு சதி செய்திருக்கிறான் அவன். அது மட்டுமல்ல; பெற்று வளர்த்த தந்தையாகிய என் மீது சிறிதும் கவலை கொள்ளாது — என்னைப் பார்க்க வேண்டுமென்ற பாச உணர்ச்சிகூடத் துளியுமின்றி — அவனைப் பற்றியும் அவனது நலன்களைப் பற்றியுமே சதா நேரமும் எண்ணிக் கொண்டிருக்குமாறு அவள் மனத்தை மாற்றி வைத்திருப்பவனும் அவனே என்று இப்போது எனக்குப் படுகிறது. எனவேதான் அந்தச் சுயநலக்காரக் கோழையின் கையில் என் மகளை ஒப்படைக்க விரும்பாமல், அவனிடமிருந்து அவளை வெட்டிப் பிரித்து, மாவீர விக்கிரமாதித்தனின் மைந்தனான வினயாதித்தனுக்கு வழங்கிவிட முடிவு செய்திருக்கிறேன். இந்த ஓலை, தளபதி வில்வேலியால் எழுதப் பெற்றதாகும். சளுக்கியச் சக்கரவர்த்தியின் பேராதிக்கத்தை நான் ஏற்றுக் கொள்வதாகத் தெரிவித்துவிட்டு வந்தேன் அல்லவா? அதை உறுதிப்படுத்தும் வகையில், 'அவனது மைந்தனுக்கு என் மகளை மணம் செய்து தர இயலுமா?' என்று இதில் எழுதிக் கேட்டிருக்கிறான். நானும் அதற்கு என் மனப் பூர்வமான ஒப்புதலை இன்று கொடுத்தனுப்பி விட்டேன்.''

வியப்பால் வெலவெலத்து நின்ற முத்தரையர், ''இது அபத்தமான வீண் பழி! அவசரப்பட்டுச் செய்த கொடுமையான முடிவு!'' என்று கூவினார். ''இந்தப் பழையாறை அரண்மனையிலிருந்து சோழ இளவரசியை ஆலம்பாக்கத்துக்கு அனுப்பி வைத்ததே நீங்கள்தாம்! சளுக்கியர்களால் ஏதேனும் தொல்லைகள் ஏற்படுமோ என்று அஞ்சியே அவ்வாறு செய்தீர்கள்! பல்லவ இளவரசர் அப்போது சிறைப்பட்டிருந்ததால், அவள் அரண்மனையிலிருந்து வெளியேற அவர் எவ்வகையிலும் காரணகர்த்தராயிருந்திருக்க முடியாது; இது முற்றிலும் தவறான கற்பனை!'' என்றார்.

''நானும் முதலில் அப்படித்தான் நினைத்தேன், நண்பரே! ஆனால், பழையாறையிலிருந்து என் மகளைப் பாதுகாப்பான வேறோர் இடத்துக்கு அனுப்ப வேண்டும் என்று நான் தீர்மானிக்கவில்லை; அவளே அந்த யோசனையை வெளியிட்டு என் அனுமதியைப் பெற்றுக்கொண்டு போய்விட்டாள்! தந்தையைப் பிரிந்து ஒரு நாளும் தனியே இருந்தறியாத அவள் திடீரென்று அப்படிப் போகக் காரணம் என்ன? சிறையிலிருந்த கோவிந்த வர்மன்தான் தனது ஆபத்துதவி வீரனை இளங்காரிக்குடையானின் மூலம் அந்த யோசனையைத் தெரிவித்து




அவனை அரண்மனையிலிருந்து வெளியேறச் செய்திருப்பான் என்று எனக்குத் தோன்றுகிறது!''

''சரி; நீங்கள் நினைப்பது போலவே நடந்திருந்தாலும், இதில் என்ன தவறு இருக்கிறது? தான் மனப் பூர்வமாகக் காதலிக்கும் ஒருவனை — அவனுக்கு நேர்ந்த இக்கட்டிலிருந்து — காப்பாற்ற முற்படுவது தமிழ்க்குல வீரப் பெண்மணிகளின் வழி வழிக் குணம்தானே? அந்த வகையில் உங்கள் அருமைச் செல்வி ஆற்றிய மகத்தான சாதனைக்காக நீங்கள் பெருமையல்லவா கொள்ள வேண்டும்?''

''ஆமாம், நண்பரே! என் மகளின் அறிவார்ந்த தீரச் செயலால்தான் பல்லவ இளவரசன் சிறையிலிருந்து தப்பி வர முடிந்தது என்னும் சேதியைக்கேட்டு மெய்யாகவே நான் மனம் பூரித்து மகிழ்ந்தேன். ஆனால், அந்தச் சுய நலக்காரனின் அடுத்த திட்டத்தை அறிந்ததுமே எனக்கு ஏற்பட்ட பெருமையும் மகிழ்ச்சியும் போன இடம் தெரியாமல் மறைந்து போயின. நான் விழித்துக் கொண்டேன்.''

''அது என்ன திட்டம்? எனக்குத் தெரியாதே!''

''உங்களுக்குத் தெரியாதா?'' என்று அடித் தொண்டையில் கடுகடுத்துக் கேட்ட பழையாறைச் சோழர் சினம் கொப்பளிக்கக் கூறினார்: ''கோழையிலும் கோழையான அந்தக் கோவிந்த வர்மன், பல்லவபுரம் சிறையிலே அடைந்து கிடக்கும் தன் பெரிய அன்னை காடவன்மாதேவியை மீட்பதற்கு என் அன்புச் செல்வி இளங்கோப்பிச்சியை ஒரு கருவியாகப் பயன்படுத்திக் கொள்ளத் திட்டமிட்டிருக்கிறான்! புஜபல பராக்கிரமத்தைக் காட்டிச் சாதிக்க வேண்டிய ஒரு மாபெரும் காரியத்தை, ஏதுமறியாத சிறு பெண்ணொருத்தியின் உயிரைப் பணயம் வைத்து நிறைவேற்றிக் கொள்ள முற்படுகிறவன் எவ்வளவு பெரிய சுயநலக்காரனாகவும் இருதய மற்றவனாகவும் இருக்க வேண்டும்! அவனது பொய்யான காதலுக்காக என் மகள் அந்தக் காரியத்தைச் செய்ய முனைந்து சளுக்கியர்களிடம் சிக்கிக் கொண்டால் அவனுடைய கதியும் என் கதியும் என்ன ஆகும்? இத்தகையதொரு தன்னலக்காரனை நம்பி என் மகளைத் தாரை வார்த்துத் தரலாமா? எனவேதான் மேற்சொன்ன முடிவுக்கு வந்திருக்கிறேன்!''

முத்தரையர் இதைக் கேட்டுக் கலகலவெனச் சிரித்தார். ''என்ன அற்பமான காரணம்! துரோகிகள்

அசைந்து ஆடிக்கொண்டே ஆசுவாசம் பெறுங்கள். ஓய்ந்து போயிருக்கும் அவயவங்களுக்கு அதனுடைய அமைதியான அசைவு இதமாக இருக்கும். உள்வளைவு கொண்ட அதன் முதுகுப்புறம், உங்களை இன்பமாக இளைப்பாற அழைக்கிறது. அதன் மகிழ்வூட்டும் சொகுசை நீங்கள் அனுபவிக்கும்பொழுது. அதன் துணி உங்கள் உடல் வளைவுகளையெல்லாம் அணைத்துக் கொள்ளுகிறது. இந்த இன்பமான வசதியுடன், எஃகினுல் கச்சிதமாகச் செய்யப்பட்டிருக்கும் இந்தச் சாய்ந்தாடும் ஈசி சேர்கள் இடத்தை அடைத்துக் கொள்வதில்லை. அதோடு முதலில் வாங்கும் பொழுதும் பிறகு அதைப் பாதுகாப்பதிலும் செப்பனிடுவதிலும் செலவு குறைகிறது

# A CRADLE OF COMFORT



ரூ. 16.00
விற்பனை வரி,
உள்ளூர் வரிகள் தனி

அதுதான் மடக்கும்




எஃகு குழாய் பர்னிச்சரின் விசேஷ அழகு.



## தரத்தில் சிறந்த அடுக்கடுக்காக

ஒவ்வொரு உலோகப் பகுதியும் 'பாஸ்பனைஸ்' செய்யப்பட்டது. துருப்பிடிக்காமல் இருக்க. சீதோஷ்ணம் பாதிக்காத சிறந்த எனுமல் வர்ணம் வாட்டிவெறுக்கும் முறையில் தீட்டப்பட்டது.

- எடுப்பான நிறங்களில் உறுதியான எளிதில் கிழியாத முரட்டுத் துணி.
- மடக்கும் உறுப்புகள் விசேஷமாகத் தயாரானவை
- ஈரத் துணியைக் கொண்டு பளிச்சென்று துடைத்துவிடலாம்.

தயாரிப்போர்:
**க்ரோம் லைட் (இந்தியா) பிரைவேட் லிட்.**
*பி-35 இந்தியா எக்ஸ்சேஞ்ச் ப்ளேஸ், கல்கத்தா-1*

வினியோகஸ்தர்கள்:
மெஸ்ஸர்ஸ் ஆடிலைன் & கோ. லிட்., சென்னை, பெங்களூர். மெஸ்ஸர்ஸ் பாவர் க்ளாஸ் & க்ரோக்கரீஸ் பிரைவேட் லிட். சென்னை, பெங்களூர், எர்ணாகுளம், ஹைதராபாத். மெஸ்ஸர்ஸ் ஜெனரல் ரேடியோ & அப்ளையன்ஸஸ் லிட்., சென்னை, பெங்களூர், செகந்தராபாத். மெஸ்ஸர்ஸ் மனத் இப்ராஹிம் & கோ. பிரைவேட் லிட்., சென்னை, பெங்களூர், ஹைதராபாத். மெஸ்ஸர்ஸ் ரோனியோ லிட்., சென்னை, ஹைதராபாத். மெஸ்ஸர்ஸ் ஸ்பென்ஸர் & கோ லிட்., 1/153, மவுண்ட் ரோடு, சென்னை.

# சங்கிலியால் சங்கிலித் தொடர் போன்ற நிகழ்ச்சிகள்

அபாயச் சங்கிலியை அகாரணமாக இழுப்பதன் விளைவுகளைப் பற்றி என்றுவது நீங்கள் சிந்தித்தது உண்டா? இல்லை ... சிந்தித்திருக்க மாட்டீர்கள். ஓடும் ஒவ்வொரு ரயிலும் தேசத்தின் உயிர் நாடியாகும். அபாயச் சங்கிலி இழுக்கப்பட்டு வண்டி நிற்கும்போது அந்த ஓடும்வண்டி மட்டுமல்ல, தேசத்தின் உயிர்த்துடிப்பே ஒரு சிறுபொழுது நின்றுவிடுகிறது. அதன் விளைவுகளோ...? வண்டிகள் தாமதமாக ஓடுகின்றன...எண்ணிலடங்காப் பிரயாணிகளின் முக்கியமான வேலைகள் பாதிக்கப்படுகின்றன... தேசத்தின் பொதுச் சொத்தான ரெயில்வே பெரு நஷ்டம் அடைகிறது. அபாயச் சங்கிலி ஆபத்துக்காலத்தில் மட்டும் உபயோகிக்கப்பட வேண்டிய ஒரு சாதனம். அதை அகாரணமாக உபயோகிப்பவர்களை உடனடியாக அதிகாரிகளிடம் ஒப்படையுங்கள். இது நாட்டிற்கு நீங்கள் செய்யும் ஒரு பெரும் சேவையாகும்.



தக்ஷிண ரயில்வே

தாம் செய்யும் இழிந்த காரியங்களுக்கு இம்மாதிரி அர்த்தமற்ற காரணங்களைத்தான் தேடிப் பிடித்துக் கொள்வார்கள் போலும்!" என்று அலட்சியமாகக் கூறி மீண்டும் சிரித்தார் அவர். "பல காலம் கட்டிக் காத்து வந்த நம் பெருமை மிக்க நட்பை இன்று வெட்டிக்கொண்டு நிற்கும் என் இனிய நண்பரே, உங்களுக்கு இறுதியாக ஒன்று சொல்ல விரும்புகிறேன்: விதியரக்கன் விரித்திருக்கும் வலையை நோக்கி நீங்கள் நடை போடுகிறீர்கள்; அதன் விளைவை விரைவிலே அநுபவிக்கவும் தயாராயிருங்கள்!" — தம் கையில் இருந்த ஓலை நறுக்கை வீசியெறிந்து விட்டு விறைப்பாகத் திரும்பி நடந்தார்.

கற்சிலையாகச் சமைந்து நின்ற பழையாறைச் சோழர் சட்டென்று ஓரடி முன் சென்று, "சந்திரலேகைச் சிற்றரசே, சற்று நில்லுங்கள்!" என்று உரத்த குரலில் கர்ஜித்தார்.

முத்தரையரோ அவரைத் திரும்பியும் பார்க்காமல் முதுகைக் காட்டிக் கொண்டு அப்படியே நின்றார்.

"மாமன்னன் விக்கிரமாதித்தனோடு நான் உறவு பெறச் செய்த முடிவை இனி மாற்றிக் கொள்ளப் போவதில்லை. ஆனால், அதற்காகத் தலைமறைவாயிருக்கும் பரமேசுவர வர்மனையோ, அவரது இளவல் கோவிந்த வர்மனையோ, அவர்களைச் சார்ந்து நிற்கும் உங்களையோ சளுக்கியர்களிடம் காட்டிக் கொடுத்து விடுவேன் என்று மட்டும் கனவிலும் கருதாதீர்கள். விதிவசத்தால் அப்படி ஏதாவது நேர்ந்தாலும் அதற்கு நான்தான் காரணகர்த்தனாயிருப்பேனோ என்றும் ஐயுறாதீர்கள். இத்தனை காலம் உங்களுடன் நட்புக் கொண்டு பழகி வந்த நான்தான் இத்தகையதொரு வாக்குறுதியை உங்களுக்கு அளிக்கிறேன். சென்று வாருங்கள்."

சட்டென்று திரும்பிய முத்தரையர் அங்கே ஓங்கி உயர்ந்து நின்றுகொண்டிருந்த பழையாறைச் சோழரின் கண்கள் இரத்தமாகச் சிவந்து நீரிலே நீந்திப் பளிச்சிடுவதைக் கண்டு அதிர்ச்சியுற்றார். பிறகு, தம் நெஞ்சை அழுத்திப் பிடித்துக்கொண்டு அங்கிருந்து தள்ளாடித் தள்ளாடி நடந்தார்.

## அத்தியாயம் முப்பத்திரண்டு

# நவகண்ட காணிக்கை

**ப**ழையாறை நகருக்கு வடப்புறத்தே நொப்பும் நுரையுமாகச் சுழித்தோடிய அரிசிலாற்றங் கரையின் புதர் மண்டிய சூழலில் அமைந்திருந்த ஒரு காடுகிழாள் கோயிலுக்குப் பின்னால், பல்லவ இளவரசன் கோவிந்தவர்மனும் ஆபத்துதவி இளங்காரிக்குடையானும் அமர்ந்து எங்கோ தம் பார்வையைச் செலுத்திக்கொண்டிருந்தனர்.

சலிப்புடன் முகத்தைச் சுளித்துப் பெருமூச்சுவிட்ட கோவிந்தவர்மன், "என்ன இது! சோழ மாளிகைக்குப் போன முத்தரையர் இன்னமும் திரும்பி வரக் காணோமே!" என்று முணுமுணுத்தான்.

மௌனமாக எழுந்து நின்ற இளங்காரிக்குடையான் தன் நெற்றி மேட்டுக்கு மேல் இடக்கை விரல்களை வைத்துச் சூரிய ஒளியை மறைத்தவாறு அப்படியும் இப்படியுமாகச் சாய்ந்து நிமிர்ந்து தொலைதூரத்துக்கு அப்பால் பார்வையைச் செலுத்திப் பார்த்து விட்டுத் திரும்பி, "வருகிற நேரம்தான் இளவரசே, வந்து விடுவார்!" என்று சொல்லிக் கொண்டே அமர்ந்தான்.

நேற்றுக் காலை ஆலம்பாக்கத்திலிருந்து புறப்பட்ட அவர்கள், இன்று பகற்பொழுதுக்குப் பின் பழையாறை நகர் எல்லையை அடைந்தார்கள். நேற்றைய இரவைப் பல்லவபுரச் சாலையிலே சளுக்கிய வீரர்களின் துணையோடு பழையாறைச் சோழர் போனதைப் பார்த்ததாலும், இங்கே சோழ மாளிகையைச் சுற்றிச் சளுக்கியப் படைகள் நிறுத்தி வைக்கப்பெற்றிருந்ததாலும் கோவிந்தவர்மனைச் சோழ அரண்மனைக்கு அழைத்துப் போக முத்தரையருக்கு விருப்பமில்லை. எதிரிப் படை வீரர்களாலோ அல்லது புதிதாக இருக்கும் சோழச் சிற்றரசராலோ அவனுக்கு ஏதேனும் சங்கடம் நேரலாம் என்று எண்ணிய அவர், அவனை இந்த அரிசிலாற்றங் கரையிலே இருக்கச் சொல்லி விட்டுத் தாம் மட்டுமே பழையாறை அரண்மனைக்குப் போயிருக்கிறார். ஆனால், அவர் அங்கு போய் இவ்வளவு நேரமாகியும் திரும்பி வராமலிருக்கவே அவனுக்குச் சலிப்பு ஏற்பட்டு விட்டது. உள்ளூற ஒருவிதத் திகிலும் உண்டாகியது. என்ன ஆனாலும் ஆகட்டுமென்று சோழ அரண்மனைக்குப்

புறப்பட்டுப் போகலாமாவெனத் துடிப்படைந்த அவன், 'பொறுத்தது பொறுத்தோம்; இன்னும் சற்று நேரம் பொறுத்துப் பார்ப்போம்' என்று எண்ணித் தன் கவனத்தை வேறு பக்கம் திருப்ப முயன்றான்.

அந்த அழகிய நகரின் மேற்கோடியிலே நாணயங்கள் அச்சிடும் அக்கசாலையொன்று அமைந்திருக்க, அதற்கு இப்பால் பிரசித்தி பெற்ற பழையாறை வடதளியின் பொற்கும்பம் கதிரவனின் ஒளியில் தகத்தகாயமிட்டுக் கொண்டிருப்பது தெரிந்தது. அவ்வடதளிக்கு அப்பால் பட்டீச்சுர கோயிற் கோபுரம் மேகப் பொதிகளிடையே குலவி நிற்பதும் இலேசாகப் புலனாகியது. அக்க சாலையையும், பட்டீச்சுரத்தையும் தன் பார்வையிலிருந்து ஒதுக்கிய கோவிந்தவர்மன், அந்தப் பழையாறை வடதளியின் பொற்கும்பத்தை மட்டும் விழியசைக்காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அதைப் பார்க்கப் பார்க்க, அவனது பல்லவ குலத்தின் பெருமை மிக்க மாமணியாய் விளங்கி மறைந்த மகேந்திரவர்மனின் அருளாட்சியும், அந்த ஆட்சிக் காலத்தில் நடந்த ஓர் அற்புத சம்பவமும் அவன் நினைவைத் தொட்டன.

பூவுலக மாந்தருக்குப் பக்தி மார்க்கத்தை வகுத்துக் கொடுப்பதற்கென்று அவதரித்த ஞானமாமணியான திருநாவுக்கரசர் இந்தப் பழையாறை வடதளிப் பெருமானைப் பாடிப் பரவிப் போற்றுவதற்கென வந்தபோது இங்கிருந்த சிவலிங்கத்தைச் சமணர்கள் மறைத்து அவரை ஏமாற்றத்துக்கு உள்ளாக்கியதையும், அதனால் மனம் நொந்து வருந்திய அவர், தம் கண்ணில் காட்டாது மறைக்கப் பெற்ற சிவலிங்கத் திருமேனியைக் கண்டு வணங்காமல் திரும்பேன் என்று அறப் பிடிவாதம் செய்ததையும், அதனையறிந்து அப்போதிருந்த பழையாறைச் சோழனொருவன் ஓடோடி வந்து அடிகளாரின் துயர் நீக்கியதோடல்லாமல் அந்த வடதளிப் பெருமானுக்குச் சிறந்த விமானம் ஒன்றும் எடுப்பிக்கப் பண்ணியதையும் எண்ணி நெஞ்சம் குளிர்ந்து வியந்த அவன், ''ஆதியைப் பழையாறை வடதளிச் சோதியைத் தொழுவார் துயர் தீருமே!...'' என்று தன் வாய்க்குள்ளாகவே ஓசையுடன் மெல்ல முணுமுணுத்தான். இந்த முணுமுணுப்பினூடே அவனுக்குச் சட்டென்று இன்னொரு நினைப்பும் எழுந்தது. ஆந்திர இளவரசி உத்தமசீலியின் சிவிகையிலிருந்து எடுத்துப் படித்துப் பார்த்த அந்தப் பட்டோலையை ஏனோ அவன் இப்போது நினைத்துக் கொண்டான்! அதை நினைக்கவே அவனுக்குக் கசப்பாயிருப்பது போல் அங்குமிங்குமாகத் திரும்பி முகத்தைச் சுளித்தான். பிறகு, அந்தக் கசப்பான நினைப்பைத் தன் மனத்திலிருந்து அலம்பிக் கரைக்க வேறோர் இனிய நினைவை வலுக்கட்டாயமாகக் கொண்டுவர முயற்சி செய்தவன், அதில் உடனே வெற்றி பெற்று விட்ட மாதிரி அழகாகப் புன்முறுவல் பூத்தான்.

அது என்ன, அத்தனை சுவையான நினைவு?.... ஓ..... தன் இன்னுயிர்க் காதலி இளங்கோப்பிச்சியைத் தனது மானசீகக் கரங்களினால் ஏந்தி வந்து மனத்தில் இருத்திக் கொண்டானே!..

திடுக்குற்று எழுந்தான் கோவிந்தவர்மன். அவனைப் போலவே ஆத்துதளி இளங்காரிக்குடையானும் அவசரமாக எழுந்து நின்றான். இருவரும் தம் பார்வையை அந்தக் காடுகிழான் கோயில் பக்கம் திருப்பினர். அங்கு ஏதோ ஒருவித விம்மலும் பொருமலுமான குரல் கேட்டது.

கோவிந்தவர்மனும் இளங்காரியும் ஒருவரை யொருவர் பீதியுடன் பார்த்துக் கொண்டனர். இளங்காரி, இளவரசனுக்குக் கண் சாடை செய்து அவனைத் தன் பின்னே வரச் சொல்லி விட்டு, ஓசையின்றி நடந்து போய், காடுகிழான் கோயிலின் சிறிய வாயிலண்டை நின்று, மெள்ள உள்ளே எட்டிப் பார்த்தான்.





இடது காலை மடக்கி வலது காலைத் தொங்க விட்டுச் சுகாசன நிலையிலே அமர்ந்து நிமிர்ந்து, வீரமும் வெற்றியும் விழிகளில் பளிச்சிடப் பெருமிதமும் உறுதியும் வாயின் அமைப்பிலே தோன்ற, இரண்டு கோரைப் பற்கள் வெளியே நீண்டிருக்க, கட்டாரி தாங்கிய இரு கரங்களைத் தொடைகளின் மேல் ஊன்றவிட்டு, மற்றொரு வலக் கையில் மணியும் இன்னோர் இடக் கையில் கபால பாத்திரமும் ஏந்தி, வலக் காதில் பிணமும் இடக் காதில் பொற் குழையும் விளங்க, இடது தோளிலிருந்து மார்பின் வழியாகத் தொங்கும் பூணூலில் தலையோடுகள் சரம் கட்டியிருக்க, தலை முடியிலும் ஒரு தலையோட்டை அணிந்துகொண்டு வீரார்ந்த திருக்கோலத்தில் அங்கு எழுந்தருளியிருந்த காடுகிழாள் என்னும் கொற்றவையின் விக்கிரகத்துக்கு எதிரே—உறையிலிருந்து உருவி யெடுத்த வாளை ஓங்கிப் பற்றியவாறு தலைவிரிகோலமாக நின்று கொண்டிருந்தான் ஓர் ஆடவன்.

''என் குலதெய்வக் கொற்றவைத் தாயே! உனக்கு நான் என்ன தீங்கு இழைத்தேன்? ஏதுமறியாத இந்த எளியேனின்மேல் எதற்காக இவ்வளவு பெரிய பழியை ஏற்றி வைத்தாய்? உப்பிட்டுச் சோறிட்டு என் உடம்பை வளர்த்தவ ரான பழையாறைச் சோழருக்குப் பெரும் பாதகம் புரிந்தவனாகி விட்டேனே! என்னை யறியாமலே என் கடமையிலிருந்து வழுவிய குற்றத்துக்கு ஆளாகிவிட்டேனே! ஐயோ! எங்கள் இளவரசி இளங்கோப்பிச்சியை நான் எங்கு போய்த்



"என்ன கஞ்சத்தனம் உனக்கு? ஒரு படி பொங்க லேனும் இன்றைக்குச் செய் திருக்க வேண்டாமா?"

"ஏன் அவ்வளவு நன்றாக இருக்கா?"

"இல்லே. நீ போட்டிருக் கிற உப்புக்குப் பொங்கல் போறாது!"

---



"இந்த ஊருக்கு நான் நேற் றுத்தான் வந்தேன். என்னைப் பற்றிப் பேப்பரில் வந்திருக்கி றது சார்!"

"அப்படியா! என்ன போட் டிருக்கா?"

"இந்த ஊரின் ஜனத் தொகை 1,00001 என்று போட்டிருக்கா. அதில் அந்த ஒன்று நான்தான் என்று தனி யாகத் தெரியறது பாருங்கள்!"

---



மனைவி: நான் காரை ஓட்டிக் கொண்டு ரோட்டில் போகும் போது எதிரே வந்த கார் இந்தக் கார்மேல் மோதிவிட்டது.

கணவர்: (காரை நன்றாகப் பார்த்து விட்டு) எத்தனை தடவை எதிரே வந்தது?

தேடுவேன்? அவரை அழைத்து வரக் கட்டளை யிட்ட பழையாறைச் சோழரிடம் என்ன பதில் கூறுவேன்? பெருவளநல்லூர்ச் சேறியக் கிழவரி டம் பரமேசுவரவர்மரைப் பற்றிய விவரம் ஒன்றைச் சொல்லிவிட்டுத் திரும்பி வருவதற் குள் சோழ இளவரசியார் எங்கோ மாயமாய் மறைந்து விட்டாரே! அவருடன் இருந்த அநந்தமதியையும் காணோமே! அவனுடைய இல்லம் பூட்டிக் கிடக்கிறதே! இதை யாரிடம் சொல்லி, எப்படிக் கேட்பேன்? தேடாத இட மெல்லாம் தேடிப் பார்த்து விட்டேனே! ஏ, இரக்கமற்ற கொடியவனே! ஆபத்துதவி வீரன் என்ற இந்தப் பெருமை மிக்க பொறுப்பை ஏற்பதற்குமுன் உனது சந்நிதானத்தில் வந்து, 'எக்காரணத்தைக் கொண்டும் என் கடமையி லிருந்து வழுவிய குற்றம் புரிவேனாகில், எனது தலையை அரிந்து உனக்கு நவகண்டம் படைப் பேன்' என்று சபதம் எடுத்துக் கொண்டேனே, அந்த நவகண்டப் படைப்பை நீ பெற்றுச் சுவைக்க வேண்டும் என்பதற்காகவே இப்படி யொரு பெருஞ் சோதனையை எனக்குத் தந்து விட்டாயா? ஆகட்டும், தாயே! உன் ஆசை அதுவானால், இதோ, என் தலையை அரிந்து கொடுக்கிறேன்: பெற்றுக் கொள்! கடமையி லிருந்து தவறியவன் என்ற பழியோடு இழிமை யாய் உயிர் வாழ்வதைவிட உனக்கு நவகண்டக் காணிக்கை செய்து என் வாழ்க்கையை முடித் துக் கொள்வது எவ்வளவோ மேல்! ஆனால், அம்மையே! நான் அளிக்கும் இந்த நவகண்டப் படைப்பை ஏற்றுக் கொண்ட பின்னராவது சற்றே மனம் இரங்கி, சோழ இளவரசியார் எவ்வித இன்னலுக்கும் ஆளாகாமல் தனது தந்தையாரிடம் வந்து சேர்ந்துவிடக் கிருபை செய், மாதாவே!"

கண்ணீர் சோர இவ்வாறு, கதறிப் புலம் பிய அந்த ஆடவன், ஏதோ ஆவேசம் வந்த வன்போல் ஒற்றை முழந் தாளிட்டு அமர்ந்து, காடுகிழாளின் பீடத்துக்கு எதிரே குனிந்து கொண்டு, தன் கையில் ஓங்கிப் பற்றியிருந்த வாளைத் தலைக்கு மேல் சக்கர வட்டமாகச் சுழற்றினான். மறுகணம் அந்த வாள் மற்றொரு வாளால் பளீரென்று தட்டி விடப்பட்டுச் சற்றுத் தொலைவிலே போய்க் கணீரென்று தெறித்து விழுந்தது.

வெறி கொண்ட வேங்கை போல் சடா ரெனத் துள்ளியெழுந்து திரும்பினான் அவன்.

"யார்?... சோழிய ஆபத்துதவி சம்புவ ராயனா!" — வியப்பால் குரல் அதிரக் கேட்ட கோவிந்தவர்மனை முந்திக்கொண்டு பாய்ந்து சென்ற இளங்காரிக்குடையான், காடுகிழாளின் சந்நிதியிலே நின்றிருந்த சம்புவராயனைப் பேய்ப் பிடியாகப் பிடித்து வெளியே இழுத்துக் கொண்டு வந்தான்.

அதேசமயம், தொய்ந்து துவண்ட நிலை யிலே தம் குதிரையின் கடிவாளக் கயிற்றைப் பற்றி அதை நடத்தி அழைத்துக் கொண்டு அங்கு வந்து சேர்ந்தார் பெரும்பிடுகு முத்தரையர்.

(தொடரும்)

# லிஸ்டரின் ஆண்டிஸெப்டிக் அனுதினம் உங்களைக் காக்கும்

நம் வாயிலுள்ள கதகதப்பான ஈரமே, கிருமிகள் தோன்றிப் பெருகுவதற்கு வெகு வாய்ப்பானது. பல்லிடுக்குகளில் தங்கிவிடும் உணவுத் துணுக்குகளோ கிருமிகளை எதிர்கொண்டழைப்பவை. கிருமிகள் பெருகுவதைத் தடுத்து நிறுத்துவது ஆண்டிஸெப்டிக் (நச்சுமுறி மருந்து). வாய்கொப்பளிப்பதற்கான ஆண்டிஸெப்டிக்காகிய லிஸ்டரின் உடனடியாக செயல்படுகிறது; பட்ட மாத்திரத்தில் கிருமிகளைக் கொல்வதிலே குறிதவறாத, திறனுள்ள பாதுகாப்பு மருந்து. இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.





உணவருந்தியபின் ஒவ்வொரு முறையும் லிஸ்டரின் கொண்டு வாய்கொப்பளித்தீர்களானால் உங்கள் மூச்சில் இனிமையும் புதுமையும் நிலவும். வெற்றிலை புகையிலை தரிப்போர் லிஸ்டரின் கொண்டு பலமாக ஒருமுறை வாய்கொப்பளித்தால் அறவே சுத்தமடையும். இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.

லிஸ்டரின் உபயோகிப்போருக்கு சளி, இருமல், தொண்டைப் புண் ஆகியவற்றினின்று அதிக பாதுகாப்புண்டு எனப் பரிசோதனைகள் நிரூபித்துள்ளன. ஏதும் கலவாமல் லிஸ்டரினை அப்படியே உபயோகித்து தினம் இருமுறையாவது வாய்கொப்பளித்தீர்களானால், கூடுதலான பாதுகாப்பும் பெறுவீர்கள். இன்றும் என்றும் உபயோகியுங்கள் லிஸ்டரின்.



அனுதினம் லிஸ்டரின் பழக்கம்: கிருமிகளிடமிருந்து வலிய முறையில் பாதுகாப்புக்கு வழி. பலதிறப்பட்ட பயனுள்ள, பத்திரமான நச்சுமுறி மருந்தாகிய லிஸ்டரின் இருக்கையிலே, பிணிவராமல் காப்பதே சிகிச்சையிலும் பன்மடங்கு மேல்.

உங்கள் குடும்பத்திற்கு லிஸ்டரின் பாதுகாப்பை அளியுங்கள்.

லிஸ்டரின் ஆண்டிஸெப்டிக்: 3, 7 மற்றும் 14 அவுன்ஸ் சீசாக்களிலே.

லிஸ்டரின் உமது அன்றாடப் பழக்கமாகட்டும்...

வார்னர் லாம்பர்ட் பார்மஸூட்டிகல் கம்பெனி
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு.எஸ்.ஏ.வில் இணைக்கப்பெற்றது)

# நீர்க் கோலம்

## பொன்முடி



(சென்ற வாரத் தொடர்ச்சி)

திருமணம் முடித்த தினத்தன்று மாலையே வாசிச முனிவர் தண்டு கமண்டலதாரியாக யாத்திரை புறப்பட்டபோது சர்வக்ஞனும், பிரியதர்சினியும் சிறு குழந்தைகளைப் போல் கண் கலங்கி நின்றார்கள்.

''எப்போது திரும்பி வருவீர்கள்?'' என்று சர்வக்ஞன் கேட்ட கேள்விக்கு மறு மொழி சொல்லாமல் மெல்ல நகைத்தார் வாசிச முனிவர்.

''வேத நெறிப்படி வாழ்க்கையே ஒரு பிரயாணம்தான் குழந்தாய்! எந்த இடத்தில் கால் நடையைத் தொடர முடியாமல் உடல் தளர்கிறதோ அந்த இடத்தில் உடம்பை விட்டுவிட வேண்டும்'' என்று சொல்லி இன்னும் அதிக அர்த்தம் கிடைக்கும்படி சிரித்து விட்டு மேலே நடந்தார் அவர்.

* * *

வானத்தின் கீழ்ச் சரிவிலே நிலா எழுந்து விட்டது. ஆற்றங் கரை யோரத்தில் புன்னை மரங்கள் பூத்து மணந்து கொண்டிருந்தன. நைமிசாரண்யம் என்ற எழில் வனம் நிலா இரவில் இப்படித்தான் அழகாயிருக்கும் என்று அப்படி அழகா யிருப்பதையே நிரூபிப்பது போல் அழகாயிருக்கிறது. சென்ற பௌர்ணமிக்கும் இந்தப் பௌர்ணமிக்கும் ஒரு வேறுபாடு: சென்ற பௌர்ணமியின் போது சர்வக்ஞனும் பிரியதர்சினியும் மணமக்களாக இல்லை. இந்தப் பௌர்ணமியின் போது அவர்கள் மணமக்களாக இருந்தார்கள். அதே நதிக் கரையில் அதே தவச் சாலையின் வாயிலில் தன் சரீரமே பூக்களாலும், சந்தனத்தாலும் மணக்க மணக்க வீற்றிருந்தாள் பிரியதர்சினி. நிறத்தின் வனப்பாலும் இயற்கையான சுகந்தங்களாலும் அவளே பச்சைச் சந்தனத்தால் செய்த ஈரம் புலராச் சிலை போன்றவள்தான். மணக் கோலத்துக்காகச் செம்பஞ்சுக் குழம்பு இட்டிய நெருப்பு நிறப் பாதங்கள்; இல்லையோ, உண்டோ எனச் சொல்லத் தகுந்த மெல்லிய இடுப்பு. பூப்பூவாய்க் கைகள். மலர்ந்த செந்தாமரையாய் முகம். அந்த முகத்தில் மனத்தின் நினைவுகளே புறத்தே கனிந்தாற் போன்ற உதடுகள். அந்த இதழ்களினிடையே சிரிப்புக்கு இதுதான் இலட்சணம் என்று சொல்லிக் காட்டுகிறாற் போன்ற சிரிப்பு. பார்வையே சொற்களைப் படைக்கும் கண்கள். அந்தப் பார்வை இரண்டு கண்களிலிருந்தும் சேர்ந்தே பிறந்தால் அத்தனை அழகை இந்த உலகம் தாங்கிக் கொள்ள நமக்குச் சாத்திய மில்லை என்பது போல் நடுவே புருவங்கள் கூடுமிடத்திலிருந்து கீழ் நோக்கி அழகாக வடித்த நாசி. கழுத்திலும் கூந்தலிலும் அந்த வனத்தின் மணம் மிக்க பூக்களை யெல்லாம் சேர்த்துத் தொடுத்து, மாலையாகவும் ஆரமாகவும் அணிந்து கொண்டிருந்தாள் பிரியதர்சினி. அவளுடைய மணக் கோலத்தையோ மனக் கோலத்தையோ சிறிதும் புரிந்து கொள்ளாதவனாகவோ, அல்லது புரிந்து கொள்வதில் சிறிதும் அக்கறை யில்லாதவனாகவோ அருகே வீற்றிருந்தான் சர்வக்ஞன். அவன் பார்வை தன் பக்கமாகத் திரும்பாதா என்ற தாகத்தோடு அவள் காத்திருந்தாள். மணமாவதற்கு முன்பும் அப்படிக் காத்திருந்தாள். மணமான பின்பு இன்றும் அப்படித்தான் காத்திருக்கிறாள். அவளுடைய கவனம் அவன் பக்கம் திரும்பி

வது. பார்வை மூலமாக அல்ல. பேச்சு மூலமாகத்தான்.

"பிரியதர்சினி! இன்றிலிருந்து நீயும் நானும் வாழ்க்கைச் சகடத்தில் ஒன்றாகப் பிணைக்கப் பட்டிருக்கிறோம். நான் உன்னைப் பாணிக்ர ஹணம் செய்து கொண்டிருக்கிறேன். என்னுடைய இந்த வலது கையில் செயல் திறனுக்கு அடையாளமாய் ஏதோ ஓர் அக்கினி எரிந்து கொண்டிருக்கிறது. சந்தனம் பூசிய உன் மலர்க் கையால் தீண்டிய பின்பும் என் செயல் திறனாகிய அக்னி அணைந்து விடக் கூடாது. என் செயல் திறனும் இலட்சியங்களும் வளர்வதற்கு நீ துணையாக இருக்க வேண்டுமே ஒழிய இடையூறாக இருக்கக் கூடாது. மனைவி என்ற உறவைக் குறிக்க வாழ்க்கைத் துணைவி என்றும் ஒரு பதச் சேர்க்கை இருப்பதை நீ அறிவாய்."

"நன்றாக அறிவேன். உங்கள் வாழ்க்கைக்கு நான் துணையாக இருப்பேனே தவிரத் தொல்லையாக இருக்க மாட்டேன். நான் உங்கள் சகதர்மிணி. நீங்கள் எந்த தர்மத்தை இலட்சியமாகக் கொண்டு வாழ்கிறீர்களோ அந்த தர்மத்துக்கு இனி நானும் ஒரு துணை" என்று சிரித்துக் கொண்டே அவன் வேண்டுகோளை அங்கீகரித்தாள் பிரியதர்சினி.

இப்போதுதான் முதல் முறையாய் அவள் பக்கமாகத் திரும்பி அவள் முகத்தைக் கூர்ந்து நோக்கினான் சர்வக்ஞன். அந்த முகத்திலிருந்த வசீகரமான விழிகள் பார்வையாலேயே அவனை இறைஞ்சி வணங்கின. தன் கழுத்திலிருந்த மாலையைக் கழற்றி அவனுடைய பாதங்களில் இட்டு வணங்கிய பின், "நான் என்ன செய்ய வேண்டுமென்று சொல்லுங்கள்" என்று சொற்களும் வணங்குகிற குரலில் கேட்டாள் பிரியதர்சினி.

"சொல்கிறேன். நீயும் நானும் வாழ்வதையே நினைத்துக் கொண்டிருக்க முடியாது. நினைப்பினால்தான் வாழ முடியும். உடம்பினால் வாழ்வதற்கு நம்முடைய வாழ்க்கையில் இப்போது அவகாசமும் இல்லை; அவசியமும் இல்லை."

"எப்படி வாழ வேண்டுமென்று நீங்கள் நினைக்கிறீர்களோ அப்படியே நாம் வாழலாம். உங்கள் மனம்தான் எனக்காகவும் சேர்த்து நினைக்கவும் ஆசைப்படவும் வேண்டுமே தவிர இனி எனக்கென்று தனி மனமும், தனி விருப்பு வெறுப்புக்களும் இல்லை. நீங்கள் தான் சகலமும். நான் உங்களுடைய அர்த்தாங்கினி. உங்களுடைய சரீரத்திலும் விருப்பு வெறுப்புக்களிலும் சரி பாதி நானும் கலந்தே இருப்பேன். உங்கள் மனத்தில் இருப்பதைத் தயங்காமல் என்னிடம் சொல்லுங்கள்."

"வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்க ஆரம்பிப்பதற்கு முன்பாகச் சிந்தனையாலேயே வாழ்ந்துவிட எண்ணுகிறேன் நான்."

"அதற்கு நானும் சித்தமாக இருக்கிறேன் அன்பரே!"

"சித்தமா யிருக்கலாம். ஆனால் பெண் சபலம் நிறைந்தவள். அவளுடைய பல வீனங்கள் எந்த நேரத்தில் எந்த விதமாக உருவெடுத்துத் தோன்றுமென்பதைச் சொல்லவே இயலாது. அத்தகைய நிலைகள் ஏற்படுவதைத் தவிர்ப்பதற்கு நீ நான் சொல்கிற படி கேட்க வேண்டும்."

"சொல்லுங்கள் காத்திருக்கிறேன்..."

"நான் சொல்வதைக் கேட்டு அதன் காரணமாக உனக்கு ஏற்படுகிற நஷ்டத்தை எண்ணி நீ இதயத்திலேயே அழுது தவிக்கவும் நேரலாம். ஆனால் மனத்தைத் திடமாக்கிக் கொள். பாணிக்ரஹணத்தின் போது தீண்டியது தவிர இந்தக் கணம் வரை உன் கையையும் நான் தொட்டதில்லை. இனியும் என் வாழ்வில் உலகத்தார் போலச் சுகங்களை அனுபவித்து வாழ எப்போது அவகாசம் நேருமென்று எனக்கே சொல்லத் தெரியவில்லை. நம்முடைய தவச் சாலையின் நடுவே இந்தக் குடிசையின் சிறிய இடத்தை இரண்டு பிரிவாகப் பிரித்துக் கொண்டு நாம் தனித்தனியே வாழ வேண்டும். நாம் ஒருவரை யொருவர் நிமிர்ந்து பார்த்துக் கொண்டு சந்திக்க மறுபடி எப்போது இயலும் என்று எனக்குத் தெரிய வில்லை. கணவன் என்பதற்காக நீ எனக்குச் செய்ய வேண்டிய பணி விடைகளை யெல்லாம் குடிசையின் மறு புறத்திலிருந்து என்னைப் பார்க்கும் ஆசையின்றியே நீ செய்ய வேண்டும். மற்ற வேளைகளில் நான் இந்தப் பக்கத்திலிருந்து வாய் மொழியாகச் சொல்லும் கவிகளையும் உரைகளையும் அந்தப் பக்கமிருந்தே செவி மடுத்து நீ ஏடுகளில் எழுதிப் பிரதி எடுக்க வேண்டும். நான் பசிக்கிற வேளைகளில் உண்பதற்கு வேண்டிய கனி, கிழங்குகளைக் கதவின் மறு புறத்திலிருந்து உன் கைகள் அளிக்க வேண்டுமேயன்றி நீயே நேரில் வரக் கூடாது. இப்படி எத்தனை காலம் எவ்வளவு ஆண்டுகள் நாம் பிரிந்து இருக்க வேண்டுமென்று சொல்வதற்கில்லை. நினைப்பினால் ஒன்றாகவும், உடம்பினால் தனித் தனியாகவும் வாழ்கிற இந்தச் சோதனைக்கு நீ உன்னைப் பாத்திரமாக்கிக் கொண்டு வெல்ல முடியுமா?"

"முடியும்! நிச்சயமாக முடியும். இப்படிச் சோதனை இந்த நாட்டுப் பெண்களுக்குப் புதுமை இல்லை. நான் உங்களுடைய சகதர்மிணி. எங்கிருந்தாலும், எப்படி இருந்தாலும், நீங்கள் செய்கிற தர்மத்தையே செய்யவும், அதற்குத் துணையாக இருக்கவும் கடமைப்பட்டவள். நீங்கள் என்னுடன் எனக்கு மிக அருகே இருக்கிறீர்கள் என்பதே நான் திருப்திப்படுவதற்குப் போதுமானது" என்று சொல்லிக் கைகூப்பினாள் பிரியதர்சினி.

நைமிசாரணியமே வியக்கும் அதிசயத் தம்பதிகளாக சர்வக்ஞனும் பிரியதர்சினியும் வாழ்ந்தார்கள். ஒரே மனையில் ஒரே நினைப் போடு ஒரே தர்மத்தைச் செய்வதற்காக வாழ்ந்தும் ஒருவரை யொருவர் முகம் பார்க்காமல் கணவன் மனைவியாக வாழ்ந்தார்கள் அவர்கள். பொழுது புலருமுன்பே எழுந்து குடிசையின் மேற்குப் பக்கத்து வாயில் வழியாகச் சர்வக்ஞன் நதியின் மேலைக் கோடிக்கு நீராடச் செல்வான் என்றால் கிழக்குப் பக்கத்து வாயில் வழியாகக் கீழைக் கோடிக்குச் செல்வாள் பிரியதர்சினி. காலைக் கடன்களும் வழிபாடுகளும் முடிந்த பின் அவன் மேற்குப் பக்கத்தில் அமர்ந்து கவிதை களைச் சொல்லச் சொல்ல அவள் கிழக்குப் பக்கத்தில் அமர்ந்து, ஏடுகளில் எழுதிக் குவித்துக் கொண்டிருந்தாள். அவளுடைய பூங்கைகளில் எழுத்தாணி பிடித்த விரல்கள் காய்த்துப் போய் விட்டன. ஆயினும் அவள்

பார்த்த கணத்தில் அவள் அப்படியே மலைத்துப் போனாள். குடுமியும், தாடியும், நரையோடித் தோல் சுருங்கிய முகமும், 'மூப்புக்கு நானும் வசந்துகொடுத்து விட்டேன்' என்பது போல் சற்றே கூனிய தோற்றமுமாகச் சர்வக்ஞனைக் கிழவனாகக் கண்டாள் அவள். அவனும் அவளைக் கண்டான். ஜரம் புரையாத சுந்தரச் சிலையாயிருந்த அவளும் காலவெள்ளத்தில் வாடி மூத்துப் போயிருந்து நரைத்திருந்ததை அவன் கண்டான். பரஸ்பரம் தாங்கள் எப்படியெப்படி மூத்து மாறித் தளர்ந்திருக்கிறோம் என்பதை ஒருவர் முகத்தையே மற்றொருவருக்குக் கண்ணாடியாகக் கொண்டு பார்த்து உணர்ந்து மலைத்தார்கள் அவர்கள். அவன் கண்களிலும் நீர் கலங்கிற்று. அவள் கண்களிலும் நீர் கலங்கிற்று.

''நீ எப்போது இப்படி மூத்துத் தளர்ந்தாய் பிரியதர்சினி?''

''நீங்கள் எப்போது இப்படி ஒடுங்கிக் கூனலானீர்கள் கண்ணா?''

''இப்படி நான் மூத்துக் கொண்டிருக்கிறேன் என்று எனக்கு ஞாபகமே இல்லாத காலத்தில் படிப்படியாய் நான் இவ்விதம் ஆகியிருக்கிறேன் போலும்.....''

''இத்தனை காலமாக நாம் எதையோ மறந்து போயிருந்தோம். நீரில் கோடிழுக்கிற பூச்சிகள் தாங்கள் இழுத்துக் கொண்டு வருகிற கோலம் தங்களுடைய நினைப்பில் ஒரு சாதனையாகப் பதிவதற்கு முன்பே அந்தக் கோடுகள் வேகமாகப் பின்னால் அழிந்துபோவதைப் புரிந்து கொள்வதில்லை. நம் வாழ்க்கையும் அப்படி ஆகிவிட்டது பிரியதர்சினி!''

''ஆனாலும் நம் வாழ்க்கையைப் பற்றி இன்றும் நமக்கு அறியாமல் ஞாபகம் வருகிறதே கண்ணா.''

''அநுபவித்த காரியத்துக்குத்தான் ஞாபகம் உண்டு பெண்ணே! நாமோ வாழ்வில் எதையுமே அநுபவிக்கவில்லையே? நாம்தான் வாழ்க்கையையே அநுபவிக்க மறந்து போய் விட்டோமே...?''

''இல்லை! அப்படிச் சொல்லாதீர்கள்! எத்தனையோ ஆண்டுகளுக்கு முன்னால் இதே போல ஒரு பௌர்ணமியின் போது 'நீயும் நானும் வாழ்வதைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்க முடியாது. நாம் நினைப்பின்றியேயே வாழ்ந்துவிட வேண்டும்' என்று நீங்கள் என்னிடம் கூறினீர்கள். நாம் இது வரை அப்படித்தான் வாழ்ந்து விட்டோம்.''

''அப்போது நீயும் அதை அங்கீகரித்துக் கொண்டாய்.''

''அப்போது மட்டுமல்ல! இந்த விநாடி வரை என் அங்கீகாரத்துக்குப் பழுதில்லை. அன்று அங்கீகரித்துக் கொண்டபடியேதான் நான் இன்றும் இருக்கிறேன்.''

''உடம்பால் வாழ மறந்துபோனாலும் நாம் மறந்து போகாமல் வாழ்ந்து சாதித்த சாதனைகளோ மிகப் பெரியவை. நாலு பாஷ்ய காவியங்கள், இரண்டு அலங்கார நூல்கள், வியாகரண விளக்கவுரைகள் என்று எவ்வளவோ புதுமைகளை இந்த உலகத்துக்குப் படைத்து வைத்திருக்கிறோம். கணவனும் மனைவியுமாக மனம் ஒப்பி ஒரே மனையில் ஒன்றாக வாழ்ந்து ஒரே தர்மத்தைக் கடைப் பிடிப்பதுதான் இல்வாழ்க்கை என்பது வேத நெறி. அந்த நெறிப்படி நாம் இதுவரை மிக உயர்ந்த இல்வாழ்க்கை வாழ்ந்திருக்கிறோம். நம்மைப் போல் உலகத்தில் யாரும் எந்த யுகத்திலும் வாழ்ந்திருக்க முடியாது. இனியும் வாழ மாட்டார்கள். இனி எந்த யுகத்திலும் நம் போன்ற அபூர்வ தம்பதிகளை உலகம் காணப் போவதில்லை'' என்று சொல்லிக் கொண்டே வந்த சர்வக்ஞன் தன் பேச்சை நிறுத்தி விட்டு அவள் முகத்தை நன்றாக நிமிர்ந்து பார்த்து ஒரு கணம் பரிபூரணமாகச் சிரித்தான்.

''இப்படி இன்று முதல் தடவையாக என்னை நன்றாக நிமிர்ந்து பார்த்து நீங்கள் பூரணமாகச் சிரிக்கிறீர்களே; இந்த ஒரு கணத்திலேயே நான் நூறு யுகம் வாழ்ந்து விட்ட பெருமிதத்தை அடைகிறேன்.''

''ஆனாலும் நீர்க் கோலம் போலத் தோன்றுமுன்பே இந்த வாழ்க்கை அழிந்து வருகிறதென்று நம்முடைய வாழ்க்கையின் மற்றொரு பகுதி நஷ்டமாகி விட்டதைப் பற்றி நாம் நினைக்கவே இல்லை, பெண்ணே!''

''நீங்கள் இன்று இதை நினைத்து உணர்ந்து இப்படிச் சொல்வதே எனக்குப் பெரிய இலாபம். இந்த இலாபத்தில் இத்தனை ஆண்டுகள் நான் அடைந்த நஷ்டத்தை ஈடு செய்து கொள்கிறேன்'' என்று கூறி அழுதுபோயிருந்த தன் சுருங்கிய முகம் மலரச் சிரித்தாள் பிரியதர்சினி.

''உன்னைப்போல் என்னைப் பற்றிய ஞாபகத்திலேயே திருப்தியாக வாழ்ந்துவிடுகிற ஒரு மனைவியை நான் அடைந்தது என் சௌபாக்கியம்...'' என்று மனப்பூர்வமாக நெகிழ்ந்து சொல்லி அவனும் புன்னகை பூத்தான்.

''நான் உங்களுடைய சகதர்மிணி. நீங்கள் எப்படி வாழச் சொல்கிறீர்களோ அப்படி வாழ்வது என் தர்மம்'' என்று சொல்லிச் சர்வக்ஞனை வணங்கினாள் அவள். அந்த வணக்கத்தை ஏற்றுக் கொண்டு ''கடைசியாக நான் இன்னும் ஒரு காவியம் இயற்றப் போகிறேன் பிரியதர்சினி! அது உன்னையும், என்னையும் பற்றியதாக இருக்கும். அந்தப் பக்கமாக வந்து இப்போதே நீ ஏட்டையும் எழுத்தாணியையும் கைகளில் எடுத்துக் கொள். அகல்விளக்கின் சுடரைத் தூண்டி விட்டுக் கொண்டு நான் சொல்லச் சொல்ல உடனே எழுது. மறுபடி நாம் எப்போது சந்திக்கிறோமோ, அதுவரை எழுது....'' என்று சொல்லி விட்டுக் கவிதா ஆவேசத்தோடு மறு பக்கமாகப் பிரிந்து சென்றான் அவன். அப்படிப் பிரிந்து செல்லு முன் ஒருவரை ஒருவர் நிமிர்ந்து பார்த்து நகைத்துக் கொண்டார்கள் அந்த அபூர்வத் தம்பதிகள். தங்களுடைய இரட்டை அவசரத்தில் ஒரு விநாடி வாழ்வைப் பற்றியும் நினைத்து உடனே மறந்தாற்போலிருந்தது அவர்கள் நிலை.

அந்த ஒருகணத்துப் பார்வையிலேயே நூறு யுகம் வாழ்ந்து திருப்தி பெற்ற பெருமிதத்தை அடைந்து விட்டார்கள் அவர்கள்.

ஆம்! அவர்கள்தான் வாழ்க்கையைச் சிந்தித்துத் தவிப்பதில்லையே! சிந்திப்பதையே வாழ்க்கையாக்கிக் கொண்டு விட்டவர்களுக்கு வாழ்க்கையைப் பற்றிச் சிந்திக்கவும் தவிக்கவும்தான் அவகாசம் ஏது? (முற்றும்)

Printed & Published by R. Ananthanarayanan on behalf of Messrs Bharathan Publications Private Limited at the Kalki Press Kilpauk Madras-10
Managing Editor T. Sadasivam

அன்றுடம் அணியும் ஆடைகளுக்கு

# அத்தனை வெண்மையும் பொலிவும்

# அளிப்பது ஸன்லைட்




அன்றுடத் துணிகளுக்கா அத்தனை
புதுமைமிகு தூய்மை? அத்தனை வெண்மையும்
பொலிவும்? 'ஆம், ஆம்' என்கிறது ஸன்லைட்
சலவை. இல்லத்திலே சலவை செய்ய
எல்லாத் துணிகளுக்கும் ஏற்றது...

**ஸன்லைட் – நுரைவளமுள்ள தூய்மையான சோப்.**

இந்துஸ்தான் லீவர் தயாரிப்பு

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon